# காவடிச் சிந்தும் பொழிப்புரையும்



இயற்றியவர்

சிந்துக்கவிப் பேரரசு சென்னிகுளம்

**அண்ணாமலைக் கவிராயர்** அவர்கள்

காவடிச் சிந்து பொழிப்புரையாக்கம்

மகாவித்வான், தமிழ்க்கடல், ஊற்றுமலை

**திரு. இரா. தங்கப்பாண்டியனார்** அவர்கள்

**இளங்குமரன் பதிப்பகம்**
22, கற்பக விநாயகர் கோயில் தெரு,
ஆலந்தூர், சென்னை - 600 016
கைபேசி : 9283233188

# காவடிச் சிந்தும் பொழிப்புரையும்


இயற்றியவர்
சிந்துக்கவிப் பேரரசு சென்னிகுளம்
**அண்ணாமலைக் கவிராயர்** அவர்கள்

காவடிச் சிந்து பொழிப்புரையாக்கம்
மகாவித்வான், தமிழ்க்கடல், ஊற்றுமலை
திரு. **இரா. தங்கப்பாண்டியனார்** அவர்கள்



## இளங்குமரன் பதிப்பகம்

22, கற்பக விநாயகர் கோயில் தெரு,
ஆலந்தூர், சென்னை–600 016.
கைபேசி : 9283233188

# காவடிச் சிந்து

நூலாசிரியர்
சிந்துக்கவிப் பேரரசு சென்னிகுளம்
அண்ணாமலைக் கவிராயர் அவர்கள்
சென்னிகுளம் - 627 753. திருநெல்வேலி மாவட்டம், தமிழ்நாடு

உரை ஆசிரியர் :
மகாவித்வான், தமிழ்க்கடல், ஊற்றுமலை
திரு. இரா. தங்கப்பாண்டியன் அவர்கள்
5/128இ11, மறவர் காலனி,
ஊத்துமலை–627 860
திருநெல்வேலி மாவட்டம், தமிழ்நாடு.

நான்காம் பதிப்பு வெளியீட்டிற்கு உதவிய கொடைவள்ளல்
திரு. ஜி. வரதராஜன் ரெட்டியார்
சேர்மன், ஜி.வி.ஆர். குழுமம்
393, திருவொற்றியூர் நெடுஞ்சாலை,
திருவொற்றியூர், சென்னை – 600 019. தமிழ்நாடு
தொலைபேசி : 044-25734330, 25733297

தயாரிப்பு :
திரு. டி.எஸ். கந்தசாமி ரெட்டியார்
(இளங்குமரன்)
சிறப்பாசிரியர் : ரெட்டி முரசு
22, கற்பக விநாயகர் கோயில் தெரு,
ஆலந்தூர், சென்னை–600 016. தமிழ்நாடு
கைபேசி : 9283233188

முதற்பதிப்பு : 1974
இரண்டாம் பதிப்பு : 1994
மூன்றாம் பதிப்பு : 2001
நான்காம் பதிப்பு : 2009

விலை ரூ. 50/–

# உள்ளுறைவன

பாட்டு | பக்க எண்

## பாயிரவியல்



## இயற்கை எழில் இயல்



## களவியல்



## கற்பியல்



## பொதுவியல்

## நூலாசிரியரின் பிற நூல்கள்

1. ஊற்றுமலைத் தனிப்பாடல் திரட்டு
2. வீரை அந்தாதி
3. வீரை நவநீதகிருஷ்ணசாமி பதிகம்
4. வீரை ஸ்தலப்புராணம்
5. வீரைச் சிலேடை வெண்பா
6. வீரைப் பிள்ளைத் தமிழ்
7. கோமதி அந்தாதி
8. சீட்டுக்கவி

## உரையாசிரியரின் பிற நூல்கள்

1. முருகன் பெருமை அல்லது தமிழர் கடவுள்
2. கழுகுமலைப்பிள்ளத் தமிழ்உரை
3. நெட்டூர் புராண உரை
4. விவிலியம் (பைபிள்) கிறிஸ்தவ மத நூலாகுமா?
5. தமிழமுது
6. கண்ணனைக் கண்ட பாரதியார்
7. திவ்ய பிரபந்தம் பாடிய ஆழ்வார்கள் வரலாறு
8. திருமாலின் திவ்ய தரிசனம்பாரதம் பாடிய பெருந்தேவனாரின்உத்யோகப்பருவப் பகுதி உரை
9. நாயன்மார் நால்வரின் வரலாற்றின் நற்றமிழ்
10. அன்னை தெரசாளின் மறுப்பு.
11. பிரதோசவழிபாட்டின் பெருமை அல்லது சிவபிரான் அருளின் மகிமை.

# முதற்பதிப்புரை

அன்புடையீர்!

சென்னிகுளம் அண்ணாமலைக் கவிராயர் அவர்களின் காவடிச்சிந்து பற்றித் தெரியாதார்: தமிழ்நாட்டில் இருக்கமுடியாது. பட்டி, பட்டினங்களிலும் பயின்றது. ஆனால் இசைச் சுவையும், அலங்காரச்சுவையுமே தெரிந்த ஒன்றாகிறது. அதன் ஏனைய பொருட்சுவையோடு கூடிய இலக்கியச்சுவை; தெரியமுடியாததும் தமிழ்ப்புலமை கொண்ட ஒருசிலரை தவிர ஏனையோருக்கு அரிதாகவே இருந்து வந்தது. அதனால் காவடிச்சிந்துப் பாடல்கள் பல்வேறு பாடபேதங்களைக் கொண்டதாயிற்று. பிழை மலிந்து பாடுவோர், கேட்போர் மனப்போக்கில்அதனைப் பயன்படுத்தி வந்தனர். திரு. **கு. அழகிரிசாமி** அவர்கள் பெருமுயற்சி எடுத்து அதனைஓரளவுதிருந்திய பதிப்பாக் கினார். குறிப்புகளோடு பதிப்பித்து வெளியிட்டார். அதனின் முழுப் பொருளும் திருத்தத்துடன் பாட பேதங்களின்றித் தெரிய வேண்டும் என்ற அவாகொண்ட நாங்கள், அதற்கு ஒரு உரை எழுதிச் சேர்த்து வெளியிட்டால் நலம் என்று கருதினோம். எங்கள் கருத்து முருகன் திருவருட் செயலால் நிறைவு பெற்றுள்ளது. ஊற்றுமலை மகாவித்து வான் தமிழமுது நூலாசியர் உயர்திரு. இரா தங்கப்பாண்டி யனார் அவர்கள் ''பொழிப்புரை செய்துள்ளார்கள்'' எடுத்துக்காட்டுகளுடன் விளங்கும்படியாக ஐந்து இயல்களாகப் பிரித்தும், பொருள் விளக்கந் தந்துள்ளார்கள். நாங்கள் இதை பதிப்பித்து வெளியிட்டுள்ளோம். இதனை அனைவரும் வாங்கி ஆதரிப்பதுடன் பிழையற்ற இதனை பயின்று இன்புறுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

இப்படிக்கு

**அண்ணாமலை ரெட்டியார்**

நினைவு விழாக்குழுவினர்,

சென்னிகுளம்.

1974

## சாற்றுக்கவி

வித்துவான், கவிஞர்
திரு **சு. அரங்கசாமி** எம்.ஏ., எம்.எட். அவர்கள்
இரதமுடையார்குளம், திருநெல்வேலி மாவட்டம்.

1. முத்தமிழ்சேர் வித்தகரின் தோழன் – யாண்டும்
   முந்திப்பணி யாற்றுமெழி லாளன் – தினம்
   மோகமாகிக் கந்தனருள் தன்னிலுறை
   அன்பு தங்கப் பாண்டி–அருள்–வேண்டி

2. இன்பமருள் ஆறுமுகன்– பாதம்– நாளும்
   எண்ணு மெழிற்சிந் தெனும் நல்–வேதம்–அதற்(கு)
   எண்ணியுரைசெய்ததையும் ஏற்பஅச்சுப்
   பெய்ததையும்–பணிவேன்–தமிழ்–அணிவேன்

## காவடிச்சிந்து ஆய்வு முன்னுரை

மகாவித்வான், தமிழ்கடல்
**இரா. தங்கப்பாண்டியனார்**

## கவியரசும் புவியரசும்

உலகைமுன்னேற்றி வாழ்வளிக்க முயற்சி எடுத்துக் கொண் டோருள், கவியரசும், புவியரசும் பெரும் பொறுப் பேற்றுள்ளனர். இருதிறத்தாரும் கலைமகளும், திருமகளும் ஒன்றினாலன்ன உடன்பட்டனர். பல்வேறுநல்ல நிகழ்ச்சிகளை உலக நன்மை குறித்துச் செய்துள்ளனர்.

அங்ஙனம் முயற்சி குறித்த புவியரசுகளில் ஊற்றுமலைக் குறுநில மன்னர் திருமிகு. **மருதப்ப பாண்டியன்** என்ற இனியவரும் ஒருவர். இவர்தம் வாழ்நாளெல்லாம் நன்னாளாய் மாற்றினார். பிறவி வழியடைக்குங் கல்லாக்கினார். இவர் பற்றிஇயம்பும் நூற்கள் இதனைப் புலப்படுத்துகின்றன.

நந்தமிழ் தொல்காப்பிய இலக்கணமுதல் நூலின் புடை நூலாகப் பவணந்திமுனிவராற் பாடப்பெற்ற நன்னூல். அதற்கு விருத்தியுரை ஏவதற்கருத்தாவாக எழுதச்செய்தார். அவ்வுரையாசிரியரானஇயற்றுதற் கருத்தா, சங்கர நமச்சிவாயப் புலவர். உரை எழுதுங்கால் நாளொன்றுக்கு இரண்டு படி ஆவின் பாலும், இரண்டுமரக்கால் நெல்லும் ஏழரைப் பணமுஞ் செலவினங்களுக்குக் கொடுத்து வந்தார். இது செவிவழிச் செய்தியால் அறியக் கிடக்கிறது. புலவர் மன்னைரைச் சிறப்பித்துப் பாடும் வகையில், ''பொன்மலையென விப்புவி புகழ் பெருமை மன்னிய ஊற்றுமலை மருதப்பன் முத்தமிழ் புலமையும் முறையரசுமையும் இத்தலத் தெய்திய இறைமகனாதலால் நன்னூற்கு உரைசெய் என்றியம் பாலின் செய்தனன் நூற்கே'' எனப்பகர்ந்து போயினார்.

இன்னும் தமிழ்த் தாத்தா என்று அழைக்கப்படும் டாக்டர் உயர்திரு **உ.வே.சா.** அவர்கள் தன் வாழ்க்கை வரலாற்று நூலில், இம் **மருதப்ப பாண்டியன்** குறித்து, நான்கு பக்கங்கள் எழுதியுள்ளார்.

அரசரைச் சிறப்பிக்கும் வகையில், **ஊற்றுமலைக்குறுநில** மன்னர் திருமிகு. **மருதப்ப பாண்டியன்** உபசரணையிலிருந்தே அரச உபசரணை என்றால் என்ன என்பதைக் கண்டேன் என்றாரவர். மேலும் மருதப்ப பாண்டியன் அவைக்களத்தில் முத்தமிழும் சிறப்புப்பெற்றன. சிறப்புப் புலவர்களாக சென்னிகுளம் **அண்ணாமலைக் கவிராயர், கந்தசாமிக்கவிராயர், முத்துவீரப்ப கவிராயர்** போன்றோராவர்.

மன்னர் சைவத்தையும், வைணவத்தையும் இருகண்ணென ஒருங்கெண்ணியவர். பெரும் பக்தர், அகரம் என்ற சிற்றூரில் அந்தணர் இருந்தமையால், மானகாவலீச்சுவரர், சிவகாமி அம்மை சைவத்திருத் தலமும், வீரகேரளம்புதூரில், நவநீதகிருஷ்ண மருதப்பசுவாமி திருக்கோவிலிலும் பலகோடி பொருட்செலவிற் கட்டினார். அங்கு நித்திய பூசைக்கும், விழாபூசைக்குமாகப் பெரும் நிலப்பரப்பாக நூறு கோட்டை விரப்பாடும், எட்டூர் தானமுஞ்செய்துள்ளார். சங்கரன் கோவிலில் கோமதியம்பாள் ஆடித்தவசு உற்சவ மண்டகப்படி நடப்பித்தார். அவை இன்றும் நடக்கின்றன.

## கவியரசிற்குக் கிடைத்த புவியரசு

இனி இவைகட்குமேலாம் கழுகுமலைக் கந்தசுவாமி மீதும் செந்திலாண்டவன் மீதும் காவடிச்சிந்து பாடியருளிய சென்னிகுளம் அண்ணாமலைக்கவிராயர் அவர்களை ஆதரித்துப்போற்றினார். ஔவைக்கு அதியமானும், பரணற்குப் பாரியும், பெருந்தலைச்சாத்தற்கு குமணனும், கம்பருக்கு சடையப்பரும், குலேத்துங்கனும், கீரருக்குப் பாண்டியனும் கிடைத்தமை போல, **அண்ணாமலைக்கவிஞருக்கு மருதப்ப பாண்டியன்** கிடைத்தார். கவிஞரின் புலமைத்திறத்தை வியந்து தண்டிகையிற் போக்குவரத்துச் செய்யச் செய்தார். தன்னுடன் ஒருங்கு வைத்துண்ணவுஞ் செய்த மன்னரைப் புகழாமல் இருக்க முடியவில்லை.

முதன் முதல் கவிஞரைக் காணவந்த பட்டத்தரசியைக் கவிஞர் ''தங்கச்சிவந்தியா?'' என்று கூறக் கேட்டுக் கோபங்கொண்ட சுற்றத்தார், அரசிடம் இயம்ப ; அவரதற்கு தங்கத்தினாற் செய்த சிவந்திப் பூவை அணிந்துசென்றதினால் என உணர்த்தினார் மன்னர். அதாவது, ''தங்கச்சி... வந்தியா'' எனவும், தங்கச்சிவந்தியா எனவும் புலமைத் திறத்தால் இருபொருட்படச் சிலேடையாகக் கூறினார் என்றாரவர்.

மற்றொருகால் செம்மறிக்கிடாய் ஒன்றை ஓருரார் மன்னருக் களிக்க, உடனிருந்து இதைக் கண்டகவிஞர் ''இக்கிடாய் கொம்பில் முத்திருக்கென்றார்'' வந்தவர் திகைக்க, அரசர் ஆமாம் இக்கிடாயினது கொம்பில் மூன்று திருகுகள் உள என்று விளக்கஞ்செய்தார். வேறொருகால்; அரசர் வேட்டையாட ஊற்றுமலைக்காட்டிற்குச் செல்லும்பொழுது கவிராயர் ஊர்சென்று திரும்பியதால் மன்னருடன் செல்லமுடியாமற் சிறிது காலந்தாழ்த்திச் சென்றதினால்நடந்தே செல்லவேண்டியதாயிற்று. இதனை அறிந்த மன்னர் ஓரிடத்திற்றங்கிக் கவிஞரை வரவேற்று ''பிந்தியதேன்?'' என வினாவ, அதற்குக் கவிஞர் ''முட்டாளுடன் முந்தமுடியுமோ'' எனக் கூறி ஏனையோரைக் கோபத்தாற் கண் சிவக்கச் செய்துவிட்டார். ''கானவேல் முட்டைக் கும்காடு'' என்றபொய்யாமொழி வாக்குபோல, உடனே அரசர் ஓகோ!'' முட்குத்தி விட்டதோ'' ஒரு சிவிகை அவற்குக் கொடுங்களெனக் கூறிச் சிவிகையில் வைத்துக் கொண்டு சென்றுள்ளார்.

இது ''முள்+தாள்=முட்தாள், முட்டாள்'' என நிலை மொழியீறு வருமொழிக்கேற்ப ''லகரம், டகரமாகவும்''புணர்மொழியில்வருமொழி முதல் ''தகரம் டகரமாகவும்'' திரிந்த புணர் மொழியாதலின் முட்டாள் என நின்றது.

மற்றொருகால் ஒரு விழா நிகழ்ச்சியில், மன்னரை வாழ்த்திய கவிராயர் அவர்கள்''வாடா மருதப்பா'' என்றார். மற்றவர் திகைக்கையில் என்றென்றும் வாடாமல் இருக்கும் மருதப்ப பூபதியே என்ற பொருள் படுத்தினார். இங்ஙனம் ஊற்றுமலை மன்னரின் நன்மதிப்பையும், ஆதரவையும், எதுபோதும் மாறாத அன்பையும், பெற்றிருந்த கவிராயர் அவர்கள், மன்னர் கழுகுமலைக்குக் ''காவடி'' எடுத்துச்செல்லும் பொழுதுபாடிய காவடிச் சிந்துப்பாடல்கள் பட்டினங்களிலும், பட்டிகளிலும் மக்களிடம் நன்கு பயிலலாயிற்று. ஆனால் அதன் பொருள் அரிதாகவே கிடந்தது. சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார், செல்வர் சிவபுரத்துள்ளார் சிவனடிக்கீழ்ப் பல்லோரும் ஏத்தப்பணிந்து'' என்ற மணிவாசகத்தாலும்.

எழுத்தறியத் தீரும் இழிதகமை தீர்ந்தான்
மொழித்திரத்தின் முட்டறுப்பானாகும்–மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதல் நூற்பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடுபெறும்... என்பதாலும்

உலகிடைப் பாடப்படும் பாட்டின் பொருளறிதல் வேண்டப்படு வதொன்றாம் என்பதால் யான் எனது சிறுமதியால் தக்கவருடன் ஆய்ந்து இக் காவடிச்சிந்துப் பாடல்களை சீர்செய்தேன். பொழிப்புரை எழுதிச் சேர்த்தேன் பாயிரவியல், இயற்கையெழிலியல், களவியல், கற்பியல், பொதுவியல், என வரிசைப்படுத்தியுள்ளேன்.

**"எழுத்தின் திறனரிந்தோ இன்சொற் பொருளின்**
**அழுத்தந்தனில் ஒன்றறிந்தோ–முழுத்தும்**
**பழுத்த முத்தமிழின் பாட்டிற்கு உரையின்று**
**எழுதத் துணிவதே யான்."**

என்றார். சிலப்பதிகாரஉரையாசிரியர் அடியார்க்கு நல்லார் எனின் என்மொழி எவ்வளவைத்து.

## காவடிச்சிந்து நூல்

இனி காவடிச்சிந்து, பாயிரவியல், இயற்கை வளவியல், களவியல், கற்பியல், பொதுவியல் என ஐந்திலக்கணமும் பொருந்தி யமைகிறது. முச்சீர் கொண்டு மூன்றடியடுக்கி அகவலோசையிற் சிதைந்த வினமாய்ச் சந்த ஓசை கொண்டது. தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களைப் போல காவடிச்சிந்தும் ஒன்றாகி சிற்றிலக்கிய வரிசையிற் சேரும் தகைமையாகிறது. வழிநடைச்சிந்து, வளையற் சிந்து நொண்டிச்சிந்து எனபலதரப்படும்.சிந்துக்கவிப்பாடலில் பாட்டுடைத்தலைவனையும், கிளவித் தலைவனையும் ஒருவனாக்கி முருகக் கடவுளையே கொண்டுள்ளார். மெல்லோசைக்கு வைதர்ப நெறியையும், வல்லோசைக்குக் கெளட நெறியையும் ஓசை நயத்தால் தழுவியுள்ளார். ஒரு வினை தழுவிய தொடர் நிலைச் செய்யுளாயும், ஒருபொருள் தழுவிய தொகைநிலைச் செய்யுளாயும் கவிபுனைந் துள்ளார். இயல், இசை, நாடகம் முத்தமிழாலும் அமைத்துள்ளார். சிற்றிலக்கியம் போலவும், பேரிலக்கிய உறுப்புக்களான மலை, கடல், நாடு,வளர்நகர், பருவம், பொழில் விளைகற்பனை, பலவகைஅணி முதலியன வரவும் கவி புனைந்துள்ளார், முருகன், வள்ளியைத் தலைவன், தலைவியாகவும், தன்னை ஓரங்கமாகவும், தொண்ட னாகவும் அமைத்துப் பாடியுள்ளார். திருஞானசம்பந்தப் பெருமான் போலக் கவிதோறும் பெயரும், ஊரும் முத்திரை செய்துள்ளார். ஊருவகஞ் செய்தும், நெஞ்சை இடனாக்கியும் பாடியுள்ளார்.

திருவாசகம் திருக்கோவையார், திருவருட்பா போன்று தலைவன், தலைவி பாவனையாக்கியுள்ளார். நாடக வழக்கு, உலகியல் வழக்கு, பாடல் சான்ற புலனறிவழக்கு, பட்டிவழக்கு, குழுவுக்குறி, சிதைவுச் சொற்கள் பல்பொருள் ஒருசொல், முதலிய சொல்வழக்கு களையுங் கையாண்டுள்ளார். பல்வேறுபுராணச் செய்திகளையும், அவர் காலச் செய்திகளையும் ஒரு சில வரலாற்றுச் செய்திகளையும் இயம்பியுள்ளார். திருப்புகழைப் பின் பற்றியுள்ளார். எமகம், திரிபு, இருபொருட்கிளவி, சிலேடை, பழமொழி, சோதிடம், உடற்கூறு, தத்துவம், முதலியன இவர் புலமைத்திறத்தில் கிளர்ந்தெழுவனவாம்.

## இசை, நாடகம் இந்நூலில் ஏன்?

இனி இசையை, கர்நாடகச்சங்கீதம் அல்லது, சங்கீதம் என்றனர். அது, தோல், துளை,நரம்பு, கஞ்சம், மிடறு(குரல்) முதலியகருவி கொண்டு இசைக்கப் படுவதாகும்.மணி, கடல், யானை, குழல், மேகம், (இடி) வண்டு, தும்பி,பேரிகை, யாழ்என்றபத்துவகை ஒலியால் ஓசைபடுத்து இசைத்தின் பஞ்சேர்பதே இசையெனப்படும். இதனை அருணகிரிநாதர் திருப்புகழில். **"நாத விந்துகலாதி நமோ நம"** என்றார். எனவே முழு இறைவியோசை (நாதபிரமம்) மூலமுழு ஓசை விந்து (கரணப் பிரமம்) எனக்கொண்டு ஒலிவைப்பையே (லயம்) என்றனர். ஒலிமுறையை (சுருதி) எனவும் கொண்டனர். சுருதி முறையோசையை இலயதாளவைப்போடு பொருந்திதாய், தந்தை எனக் கண்டனர். தாளவைப்பை இலேசு (லகு) முடுகு வேகத்தை (துரிதம்) இலேசு அனுதுரிதம் எனச் சொல்லிப்போயினர்.

குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம், எனத் தமிழில் இயம்பினர்.

மேலும் ஓசை நுட்பவேறு பாட்டசைவை, பல்வேறு இராகங்களாக்கினர். தொகை ஒலி நுட்பத்தை (தாய் இராகம்) என்றனர். வகை விரி ஒலி நுட்பவசைவை (சன்யம்)சின்னராகங்கள் எனவுங் கொண்டு அவைமுறையே எழுபத்திரண்டு எனவும், நூற்றுக்கணக்கிலும் கண்டு கணக்கிட்டனர். அவ்வந்த இசை நுட்ப ஒலியசைவை சுரதானமாக்கி ஏழு எனக் கொண்டு, பிரகிருதி பகுதி, விக்குருதி–விகுதி எனச் சொல்லினர் அவை ச,ரி,க,ம,ப,த,நி என ஏறும் இசையொலியை (ஆரோகணம்) எனவும் ச,நி,த,ப,ம,க,ரி என இறங்கும்

இசையொலியை அவரோகணம் எனவும் பாகுபடுத்தினர். அவைலயத்தில் அடங்க, சச்சமம், ரிசபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தை வதம், நிசாதம், எனப் பெயரிட்டனர். எடுத்தலோசையை, (பல்லவி) தொடுத்தலை (அனுபல்லவி) முடித்தலை (சரணம்) என்பதாகக் கொண்டனர். கீழேசொல்வதை(மந்தாரம், தக்கு) எனவும், நடுவை (மத்திமம்) உயர்த்தலை (எச்சு, தரம், எனச்சொல்லினர். மாத்திரைக் கணக்கை இசை தாளத்திற்கேற்ப (அச்சரம்) என்றனர். ஏகதாளம், அடதாளம், துருவதாளம் மட்டிமதாளம், உருபகதாளம், செம்பைதாளம், திருவுடைதாளம் எனத் தாளவகை கண்டனர். தா.தா. திதிமி தகிகிடதசுணுதிமி, ததிகிடதொம், ததிகிடதொம் என்பதைக் கண்டசாதிநடை என்றனர். தா, தா, திதிமி, ததீகிடதசுணு, ததீகிடத்தொம், ததீகடத்தொம், ததீகிடதொம், என்பதை திசரசாதிநடை எனவும், தா.தா,திதிமி தாதீகீணாத்தொம், தாதீகீணாத்தொம். தாதீகீணாத்தொம் என்பதை மிச்சரசாதி நடை என்றனர். தா தா திதிமி தாதீகீணாத்தோம் தா, தா, திதிமி, தா, ததீகீணாத்தொம், தா தா திதிமி, தா, ததீகிணாத்தொம் என்பதை சதுர்சாதி நடை என்றனர். தகு, தகு, தகிடதொம், தகு, தகு, ததிகிட தொம்,என்பதைச் சங்கீரணசாதி நடை எனச்சொல்லி இவ்வைந்துடன் மேலேயுள்ள ஏழையும் பெருக்க முப்பத்தைந் தாம் தாளவகை எனவும், அதனை விரிவாக்கி நூற்றெட்டு எனவும் கூறினர்.

இன்னும் வர்ணம், மெட்டுகளை, தாய், தால், செண்டை, வரிசை என்றனர். இடால், புலுதம், கம்பிதம், ஆகதம், பிரத்காசுதம், திருப்புசம், ஆந்தோளம் மூர்சனை எனவும் வாதி, விவாதி, அநூவாதி, சம்வாதி எனவும் விரிவாக்கினர் இதனை.

**''தொந்தம் தோம் திங்கண வென்றுது**
**லங்கும் அரம்பையர் ஆடிடவே**
**துன்றும்தே மழையென வீணைகள்**
**தும்புரு நாதர் பாடிடவே''**

என அண்ணாமலைக் கவிஞர் இந்நூலில் இருபத்து நான்காம்பாட்டில் சொல்லியுள்ளார்கள்.

இவை எல்லாந் தமிழிற்பண் என்றனர். பண்ணே இராக மாகியது''பண்ணென்பாம் பாடற்கிய பின்றால்'' இஃது வள்ளுவர்

கூற்று. ''பண்காட்டும் இசையாலும்''இது திருஞானசம்பந்தப் பெருமான் வாக்கு. ஏழிசையாய் இசைப்பயனாய்'' என்பது சுந்தரர் சொல், ''பண்ணேறு மொழியடியார் பரவி வாழ்த்தும்'' என்றார் வள்ளலார் பெருமகனார். ஆக, தமிழ் குறிஞ்சிப் பண்ணே– அரிகாம்போதியாறிற்று. நட்ட பாடை பண்ணே –நாட்டை எனப் பெயர்பெற்றது, செவ்வழிப் பண்ணே–யதுகுல காம்போதி, பழம் பஞ்சுரப் பண்ணே–சங்கராபரணம், அந்தாளிக்குறிஞ்சி பண்ணே– சாமா இராகமாகியது, மேகாரக்குறிஞ்சிப் பண்ணே–நீலாம்புரி, கொல்லிக் கௌவணப் பண்ணே–நவரோசு எனப்பட்டது. பழங்காந்தாரப் பண்ணே – சுத்தசாவேரி இராகம். வியாழக்குறிஞ்சிப் பண்ணே–சௌராஷ்டிரம். புறநீர்மைப் பண்ணே–பூவாளம் எனப்பட்டது. பஞ்சம பண்ணே–அஹிரிராகம், செந்துருத்திப் பண்ணே–மத்திமாவதி, தக்கேசிப் பண்ணே காம்போதி கொல்லிப் பண்ணே–நவரோசு, இந்தளப் பண்ணே மாயாமாளவ கௌள எனப்பட்டது. கௌசிகப்பண்ணே - பைரவி, பியந்தைக் காந்தாரப் பண்ணே - நவராசு, சீமாரப் பண்ணே. மாயா மாள கௌ. சாதரிப் பண்ணே- பந்துவராளி, காந்தாரப்பஞ்சுரப்பண்ணே - கேதார கௌள எனக் கொண்டனர். இதை எல்லாம கண்ட கவிஞர் இராக வகையிலும் பாடியிருளினார் எனலாம்.

## நாடகம்

நடித்தலை நாடகம் என்பர், அது கூத்து, பரதம், சதுர் எனவும் பெயர்பெறும். அக்கூத்து பதினோறு வகைப்படும். சிவனார் ஆடல் ஆறும், மாயவராடல் ஐந்தும் என்னலாம். முறையே கொடுகொட்டி பாண்டுரங்கம், தாண்டவம், துணங்கை, பவுரி, களைக்கூத்து என்பனவும் குரவை, குடைக்கூத்து; மரக்காலாட்டம், உருண்டாடல், நிர்த்தனம் என்பனவுமாம், கண், கழுத்து, கை, தலை, மார்பு இடை, கால் முதலிய உறுப்பசைவுகாட்டி எண்வகை (ஒன்பான்)மெய்ப்பாடும் தோற்ற நடித்தலே நாடகம். அதும் அகக் கூத்து, புறக்கூத்து, சாந்திக்கூத்து, எனப்படுதலை அபிநயத்தல் எனப் பெயர் கொள்ளச் செய்தனர் போலும், ''செககணசேகுதகதிமிதோதி திமி'' என ஆடும் மயிலோனே'' என்றார் அருணகிரியார் திருப்புகழில் காவடி எடுப்போருக்கும், பக்கப்பாட்டு பாடுவோருக்கும், இவ்வபிநயம் இயல்பாகவே அமைதலைக்கண்டே கவிராயர் நாடக பாணியிலும் பாடியருளினார் என்னலாம்.

## "காவடி"எடுத்தலின் பயன்

கா...பாதுகாத்தல், அடி... கால் அல்லது பாதம் எனப்படுவதால், பாதுகாப்பான திரு வடிப்பாதம் என்பதாயிற்று. அது "கா அடி" என்பது நிலைமொழியிலுள்ள உயிரீறும், வருமொழியில் உயிர் முதலும் வர, புணர் மொழியில் "காவடி"என வகர உடம்பெடுத்தது. இது இ, ஈ, ஐ வழி யவ்வும் ஏனை உயிர்வழி வவ்வும், ஏமுன் இவ்விருமையும் உயிர்வரின் உடன்படு மெய்யென்றாகும்'' என்ற நன்னூல் நுற்றியறுபத்திரண்டாஞ் சூத்திர விதிகொண்டதென்க.

அதாவது உண்மையறிவின்பப் பொருளாய் (சச்சிதானந்தம்) அறிவிக்காமலேயனைத்தையும் மறியும் பொருளாய், எங்கும் நிறை பொருளாய்(வியாபகம்) மந்திரம், மொழி, வண்ணம்,உலகு, கலை, தத்துவம், ஆகிய அத்துவாக்களுக்கெட்டாத சைவ சித்தாந்த அத்துவித முழுமுதற்பரங் கடவுளாம் (பரமான்மா)முருகன், உடல் கரணம், உலகத்துய்பில் (தனுகரணபுவன போகம்) உணவு, காற்று, மனம், அறிவு, இன்ப உடலங்களால் (பஞ்சகோசம்) மயக்கக் கட்டுகளைக் கொண்டியங்கி. காம வெகுளி மயக்கத்தால், (ஆணவம், கன்மம், மாயை) அறிவித்தாலறிந்து, முக்குண தோசத்தீட்டால் வருந்திக் கிடக்கும் உயிர்கட்கு (சீவான்மா) பதியறிவைஅறிவிக்க அறிந்து, பசு, பாசஅறிவின்பச் செயலை அகற்றி அறியாமை போக்கும் வண்ணம் "காவடி"எடுத்தல் அதனால் அவர்கட்கு அருளும் முருகன் எள்ளில் எண்ணெய்போல், பாலிற் படு நெய்போல் உயிற்கலப்பான். உள்ளம் பெருங்கோயிலாகவும், ஊனுடம்பு ஆலயமாகவுங் கொண்டு: இம்மை, மறுமை, உம்மை வீட்டின் பத்துய்பைத்தன் திருவடியில் நல்குவான்.

ஆக அதை அனுமான ஆகம அளவைகளாலன்றியும் காட்சி யளவையாற் காட்டுந் திறமுடையோர் (நிதர்சனம்), பத்தராய், விரத தவம்பூண்பர். முத்தரை தரித்துத், துவராடை அணிவர். வெண்ணீறு சந்தனம், குங்குமம் பூசி அக்கமணி புனைவர். வள்ளி, தெய்வானை எனக்கற்புக் கடம்பூண்டவராவர். ஞானவேல் பதித்து இலுமிச்சம்பழம் தகித்த (குத்திய ) மலர் மாலை புனைந்த காவடியை எடுப்பர். காவடியின் இருபக்கமும் வெள்ளித் தகட்டினால், கோபுரம் செய்து சேர்க்கப்பட்டிருக்கும், நேர்ச்சைப் பொருளை இருபக்கமும் கட்டப்பட்டு: பட்டுத்துணி கொண்டு மூக்கிற்சில்லுடன்

வெற்றிவேரால் கூடாரம்போல். காவுதடியின் இருபக்கமும் வேலிற்கு மேலே வளையக்கட்டி மயிற்பீலி நாற்றப்பட்டு பூங்கொத்தலுடன் அலங்கரிக்கப்பட்ட அக்காவுதடியைச் தோளிற் சுமப்பர். அவற்கு சூக்கும குண்டலினி எழுந்துஉடலில், ஆறுஅதாரத்தையுந் தொடும். கையரவிலாத இருகண் புருவப் பூட்டிற் சுழுமுனைகொள்ளச்செய்யும். அவர் முருகா அரஅரஎன ஓலமிட்டுக் காதலாகிக் கண்ணீர்சிந்தி. இன்பக்கடலில் மூழ்குவர், அதற்கு உறுதுணை செய்வதே இந்தக்காவடிச்சிந்துப் பாடலென்பதை

''கருணைமுருகனைப் போற்றித்; தங்கக்
காவடி தோளின்மேலேற்றிக்–கொழுங்
கனலேறிய மெழுகாய் வருபவரேவரும் இகமேகதி
காண்பார் இன்பம் பூண்பார்''

என, வள்ளலாரின் யான் பேசும் வார்த்தை எல்லாம் நாயகந்தன் வார்த்தை'' என்பதைப்போல, அண்ணாமலைக்கவிராயரும் பாடியருளினார்.

## மரபு உடன்பாட்டு புரட்சிக்கவி

சமயங்கள் எல்லாம் இறைகுறித்தே எழுந்தனவாகும். நல்லொழுக்கம், பண்பாடு, மரபு, கற்புநெறி, அரசியற்பிழையாமை போன்றன கடைப்பிடிக்கப்பட்டும், நீதி, நேர்மை வழி யொழுகி நன்மை பெறும்பொருட்டும் அமைந்தனவுமாகும். மொழி, நாடு, முதலியன, காக்கும் கட்டுப்பாடு அமைந்த ஐந்திணையான, முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள், கருத்துப்பொருள், காட்சிப் பொருளனைத்தும் அமைந்த அகத்துறை, புறத்துறை, இறைவாழ்வுடன் இணைந்தனவாகும். அ என்பது உயிர் முதல் இறை. தலைவன் எழுத்தென்பர் 'உ' இறைவி தலைவி எழுத்தொன்பர் 'ம' என்பது பாச– எழுத்தாகும் அது ஒற்றாகி 'ம்' என ஒன்றும் போது, உயிர் ''குழந்தை'' ஓம் எனப் பிரணவமாம், ஓரெழுத்து மந்திரம். இதனையே ஏனைய சமயங்களும். ஆம், ஆமீன் என்பர், மூலரே திருமூலர்) மூசா, மோசே என்பவராவர், ஆதவனே (சூரியன் ) உவா (சந்திரன்) ''உவவுமதி யன்ன'' என்பது புறநானூறு. ஆக அதே ஆதம், அவ்வா ஆதாம், ஏவாள் என்பர் போலும் ஐந்தெழுத்து மந்திரமே. ந,ம,சி,வா,ய. இதுவே. ஐந்துமுக்குள்ள விண்மீன் (நட்சத்திரம்) ஐந்து விரலுள்ள ''கை''

தொழுகைக்கு திடத்த பொருளானது. இயமம், நியமப்படி இரண்டுமே பத்துக் கற்பனையாய் உறுதி கொண்டது. இதனை, இயமம், நியமம், எண்ணில் ஆதனம், ''எனவும்'', கொல்லான், பொய்கூறான் களவிலான் எண்குண நல்லான் எனவும் செப்பியதிருமந்திரம் காலத்தால் முந்தியதாம். இன்னும் ஆறுபடிகளையுஞ் சொல்லி இறைவழியை நிற்கச்செய்தது. அதுவே சன்மார்க்கம் செப்பக் கண்டவரான அண்ணாமலைக் கவிஞர், அனைத்துச் சமய நெறியும் கௌமார சமய வழியதே, அவ்வழித்தலைவனே முழுமுதல்வன் மாறாதவன், இறைமகன் முருகன். அவன் கற்றாருக்கும், கல்லாருக்கும், கண்ணளிக்கும் கண்ணாவான், வல்லாருக்கும், மாட்டாருக்கும், வரமளிக்கும் வரமாவான், நல்லாருக்கும் பொல்லாருக்கும் நடுநின்ற நடுவாவான். நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலனளிக்கும் நலமாவான். எல்லோருக்கும் பொதுவான அவன், செம்மை, கருமை நிறவேறு பாடல்லில்லாது காதல், கற்பு, என்ற அகத்துறை இலக்கணத்தை ஒருசேர உலகிற்கு காட்டவே தேவ மகளான தெய்வயானையையும், மானிட குறப்பெண்ணான வள்ளியம்மையையும் சமமாக இரு பக்கங்கிலும் கொண்டருளினான், என்பதை உணர்த்திய கவிஞராய் அவன் வழியே ஞானவழி என்பார்போல

''வல்லவுணர் வழியாதும் விட்டு–வெருள
வன்சமர்செய் கந்தனிடம் வழியடுமைப்பட்டு
நல்லவுணர்வழியாது மட்டு
ஞானபர மானந்தமோன மடைவோமே''

''எனக் காவடிச்சிந்து பாடிப் புரட்சிப் புதியதருளினார்.

இவரதுகாலம், மருதப்ப பாண்டியன் காலம், இவர் திருநெல்வேலி மாவட்டத்தில் கரிவலம் வந்தநல்லூருக்கு அருகில் உள்ள சென்னிகுளத்தில் 1865ம் ஆண்டில் சென்னவரெட்டியாருக்கும், ஓவு அம்மாளுக்கும் கடைசி மகனாய்ப் பிறந்தார். இவரின் முன்னவரெல்லாம் பெண்களே. இவர் சுமார் 26 ஆண்டே உலக வாழ்வு கொண்டு 1891ம் ஆண்டில் சிவனடி சேர்ந்தார். அவர் பாடிய நூற்கள் பல ஆயினும் இவர் மருதப்ப பாண்டியனைச் சிறப்பித்துப் பாடிய பாடல்கள் ஊற்றுமலைத் தனிப்பாடற்றிரட்டில் அடங்கும். அதில் ஒன்றிரண்டைச் சொல்லி மேற்செல்வோம்.

''படங்கிடங்கர்ச் சனைபுரியும்
பயோதரங் கண் வளர்மாடப்
பந்தியும்போர்
தொடங்கிடங்கர் தெலுங்கர்வங்கர்
துளுவர் கரு நாடருயிர்
துடிப்புற்றோட
உடங்கிடங்கர்க் குலம் பிறழ்பற்
பேழ்வாயங் காப்பிட்டான்
னுலாவு கின்ற
தடங்கிடங் களுதிகழும்
ஊற்றுமலை மேவியவ
சராச ராசன்
''நாவடிச்சிந்தனந்ரலில்
விலைபகர்ந்தோன் மாவாலிபார்
நல்கெறண்டந்
தாவடிச்சிந்தனந்த மகன்
மருகனென்றழைத் திடுக
தன்றே மாரி
பூவடிசிந்தனந் தவனம்
பொலிகழு காசலபதிமேற்
பொருந்த நாஞ்சொல்
காவடிச்சிந்தனந் தமச்சிற்
பதிப்பித்துப் புகழ் முழுவதுங்
கை கொண்டானே'' என்பதாகும்

★ இந்நூலின் முதற்பதிப்பைச் **சென்னிகுளம் அண்ணா மலைக் கவிஞர் நினைவார்த்த விழாக்குழு,** கோவில்பட்டி, திரு. ச. இராமசாமிரெட்டியார் பி.ஏ., பி.எல்., திரு. கு. இலக்குமணப் பெருமாள் ரெட்டியார் - தொழிலதிபர், திரு ச. கணபதி ரெட்டியார், திரு. நாராயணசாமி ரெட்டியார் ஆகியோர் 1974ல் வெளியீடு செய்தார்கள். அன்னவர்களுக்கு நன்றி. இரதமுடையார்குளம். தமிழாசிரியர் திரு **சு. அரங்கசாமி** எம்.ஏ., எம்.எட்., அவர்கள் சாற்றுக்கவி நல்கினார்கள், அவர்களுக்கும் நன்றி.

★ இரண்டாம் பதிப்பை கல்வித் தந்தை, அறநெறிச்செம்மல், திருமிகு **கே. இராமசாமி ரெட்டியார்** அவர்கள், தலைவர், இலக்குமி அம்மாள் பல்கலை நுட்பப் பயிற்றகம், நேசனல் பொறியியற்கல்லூரி, கே.ஆர். நகர். கோவில்பட்டி, பதித்து தந்தார்கள். அவர்களுக்கும் **நன்றி.**

மூன்றாம் பதிப்பை மதிப்பிற்குரிய காவல்துறை கண்காணிப்பாளர் திரு. **கொ. பிரேம்குமார்** எம்.ஏ. அவர்களும், அவர்களது துணைவியார் திருமதி. **செண்பகவல்லி பிரேம்குமார்** எம்.ஏ.,பி.எட்., அவர்களும் பதிப்பித்து உதவினார்கள். அவர்களுக்கும் **நன்றி.**

நான்காம் பதிப்பை சென்னை - திருவொற்றியூர் லயன் M.J.F. மனித நேயர், கொடைவள்ளல், ஜி.வி.ஆர். குழுமத்தின் சேர்மன், திரு. **ஜி. வரதராஜன் ரெட்டியார்** அவர்கள் பதிப்பித்தளித்துள்ளார்கள் அவர்களுக்கும் நன்றி

நான்காம் பதிப்பினைச் சிறந்த முறையில் அச்சுப்படி பார்த்து உதவிய **'ரெட்டிமுரசு'** சிறப்பாசிரியர் **'இளங்குமரன்'** அவர்களுக்கும், அச்சிட்ட சென்னை மேற்கு மாம்பலம் **ராமராஜ் அச்சகத்தார்க்கும்** மிக்க நன்றி.

இங்ஙனம்,



வித்துவான் **இரா. தங்கப்பாண்டியன்**

ஊற்றுமலை



**இளங்குமரன்**
சிறப்பாசிரியர், **'ரெட்டி முரசு'**
22, கற்பக விநாயகர் கோயில் தெரு,
ஆலந்தூர், சென்னை–600 016.
கைபேசி : 9283233188

# அணிந்துரை

தமிழ்நாட்டின் திருநெல்வேலி மாவட்டம், சங்கரன்கோயில் வட்டத்தில் கரிவலம் வந்த நல்லூர் அருகில் உள்ள சென்னிகுளம் கிராமத்தில், தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்ட, ரெட்டி பழங்குடியில் தோன்றியவர். தமிழ்மொழியில் பாண்டியத்தியம் பெற்று, ஊற்றுமலை புவியரசர் **இருதாலய மருதப்பப் பாண்டியன்** அவர்கள் அவையில், அவைக்களப் புலவராக கவியரசர் சென்னிகுளம் **அண்ணாமலை ரெட்டியார்** அலங்கரித்தார். ஊற்றுமலை புவியரசர், கழுகுமலைக்குக் 'காவடி' எடுத்துச் சென்றபொழுது, கவியரசரும் உடன் சென்றார். வழிநடைப் பயணத்தில் செல்வோர் களைப்பு தெரியாவண்ணம், இசைநயத்துடனும், ஒலிநயத்துடனும் ஆடிப்பாடி, உளம் மகிழ, கவியரசர் **அண்ணாமலை ரெட்டியார்** வழிநடையில் இயற்றிய பாடல்களே **'காவடிச்சிந்து'** பாடல்களாகும்.

ஊற்றுமலை வித்துவான் **இரா. தங்கப்பாண்டியன்** அவர்கள், 'காவடிச் சிந்து' பாடல்களுக்குப் பொழிப்புரையுடன் கூடிய நூலை வெளியிட்டு, ஆண்டுதோறும் தை அமாவாசை அன்று சென்னிகுளத்தில், அண்ணாமலை ரெட்டியாரின் நினைவு நாள் விழாவில், வருகை தந்த இலக்கிய அன்பர்களுக்கு **காவடிச் சிந்து** நூலை அன்பளிப்பாக வழங்கிடும் காட்சியைப் பல்லாண்டுகளாகக் கண்டு வந்தேன் – பெற்றும் மகிழ்ந்தேன்.

2008ஆம் ஆண்டு கவியரசர் நினைவு நாள் விழாவிற்குச் சென்றபோது வித்துவான் **இரா. தங்கப்பாண்டியன்** அவர்களைக் கண்டு பேசி இன்புற்றபொழுது, **'காவடிச் சிந்து'** புத்தகத்தை ஒருவருக்கும் வழங்காத நிலையில் இருந்தார். அவரிடம் வினவியபோது 'காவடிச்

சிந்து' புத்தகங்கள் கையிருப்பு இல்லை, புதிதாக அச்சிடவேண்டும் என்றும் கூறினார்.

'காவடிச்சிந்து' புத்தகத்தை அச்சிட்டு வழங்க, முயற்சிகளை மேற்கொள்ள ஒப்புதல் அளித்து, அவரிடம் 'திருத்திய படி' ஒன்று பெற்றுக்கொண்டு சென்னை வந்தேன். விருது நகர் மாவட்டம், சாத்தூர் வட்டம், இராமலிங்கபுரம் அருகில் ரூக்குமூஞ்சி கிராமத்தில் பிறந்து வளர்ந்து சென்னை – திருவொற்றியூரில் தொழில்கள் தொடங்கி, தற்பொழுது தொழிலதிபராக விளங்கி, அனைத்து மக்களிடமும் அன்பைப் பெற்று, மக்கள் போற்றும் மனிதநேயராக விளங்கும் கொடைவள்ளல் லயன் M.J.F. திரு. **G. வரதராஜன் ரெட்டியார்** அவர்களை அணுகி, **'காவடிச் சிந்து'** புத்தகம் அச்சிட வேண்டிய அவசியத்தைச் சொன்னபொழுது, ''இந்தப் புத்தகம் ஒவ்வொருவர் இல்லத்திலும் இருக்க வேண்டிய ஒன்று'' என்று அவரே கூறி, ''அவசியம் செய்வோம்; அதற்கான பணிகளைத் தொடங்குங்கள்'' என்று தனது ஒப்புதலை மகிழ்வுடன் அளித்தார். அதன்படி நான்காம் பதிப்பாக இந்தக் **'காவடிச் சிந்து'** நூல் வெளிவருகிறது என்பது பெரு மகிழ்ச்சிக்குரிய செயலாகும்.

கவியரசர் சென்னிகுளம் **அண்ணாமலை ரெட்டியார்** அவர்களைச் **'சிந்துக்குத் தந்தை'** எனக் **கவிஞர் சுரதா** போற்றிய, **'காவடிச் சிந்து'** நூலுக்கு, ஊற்றுமலை வித்துவான் **இரா. தங்கப்பாண்டியன்** அவர்கள் பொழிப்புரையும், பல்வேறு நூல்களில் இருந்து இலக்கிய எடுத்துக்காட்டுகளையும், ஆராய்ச்சி மாணவர்களுக்குப் பயன்படும் வண்ணம் நயம்பட உரைத்த பாங்கு, 'தண்ணீர் கலவாத தூய பசும்பால்போல்' தெள்ளத் தெளிவாக விளங்குகின்றன.

சென்னிகுளத்தில் ஆண்டுதோறும் நடைபெறும் கவியரசர் நினைவு நாளில் பங்குகொண்டு ஆற்றிடும் இலக்கிய நயமிக்க மேடைப் பேச்சும், பட்டிமன்றச் சொற்பொழிவுகளும், நாளும் நமது கவியரசர் சென்னிகுளம் **அண்ணாமலை ரெட்டியார்** அவர்களின் புகழ்பாடும் கவிக்குயில் ஊற்றுமலை வித்துவான் **இரா. தங்கப்பாண்டியன்** அவர்களின் இலக்கியப் பணிகள் மேன்மேலும் தொடர, **பல்லாண்டு வாழ்க!** என **'ரெட்டி முரசு'** ரெட்டியார் சமூக முத்திங்களிதழ் சார்பில், நல்வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்றும் அன்புடன்,

**இளங்குமரன்**

சென்னிகுளம், சிந்துக்கவிப்பேரரசு
அண்ணாமலைக் கவிராயர் இயற்றிய காவடிச்சிந்தும்,
ஊற்றுமலை, மகாவித்வான் தமிழ்க்கடல்
இரா.தங்கப்பாண்டியனார் ஆக்கிய பொழிப்புரையும்.

# பாயிரவியல்

காப்பு — விநாயகர் துதி

பாட்டு 1

1. **திருவுற் றிலகுகங்க வரையிற் புகழ்மிகுந்து**
**திகழத் தினம்உறைந்த வாசனை - மிகு**
**மகிமைச் சுகிர்த தொண்ட நேசனை - பல**
**தீயபாதக காரராகிய சூரர்யாவரும் மாளவேசெய்து**
**சிகரக்கிரி பிளந்த வேலனை - உமை**
**தகரக் குழல்கொள்வாஞ்சி பாலனை**

**பொழிப்புரை:**

எழில் உலவு தெய்வத்தன்மை வாய்ந்த கழுகுமலைத் தலத்தை இடமாகக் கொண்டவன். அறிஞரால் நாள்தோறும் புகழப்பெறும் மேன்மை உடையவன், எண்ணிடப்படாதசித்து முதலியன பொருந்திய பழம் பெரும் தொண்டர்கட்கு நண்பன். பற்பல தீய பாதங்களைச் செய்த, அசுரகுலம் வேரற மாளும்படியாகச் செய்தவன். கயமுகன் ஆட்சிக்குட்பட்ட மாயை நிறைந்த கிரவுஞ்ச மலையை இரு கூறு படும்படியாகச் செய்த வேற்படையைக் கையகத்தே ஏந்தியவன், நறுமணங்கமழ் கூந்தல் தாங்கிய அழகு, இளமை நலம் பொருந்திய வஞ்சிக்கொடி போன்ற இடையினை உடைய பார்வதியின் பிள்ளையாகத் திருவவதாரஞ் செய்தவன்.

(கங்கம்–கழுகு, வரை–மலை, தகரக்குழல்–நறுமணங்கமழ்முடி)

எடுத்துக்காட்டுகள் :

''குலகிரி குத்துப்பட ஒற்றிப் பொரவல பெருமாளே''
-திருப்புகழ்

''வெற்பைக் கூறுசெய் தனிவேல் வாழ்க''
-கந்தபுராணம்

''மாமயிலோன் வேல்பட்டழிந்தது வேலையும்
வெற்பும் சூரனுமே'' -அனுபூதி

''கைத்தரக்கர் கொத்தறுத்து வச்சரக் கர்த்தனுக்களித்த
கைத்தொழுத் தரித்துவிட்ட பெருமாளே''-(திருப்புகழ்)

2. **மருவுற்றிணர் விரிந்து மதுபக் குலமுழங்க**
**மதுதொய்த் திழிகடம்ப ஆரனை - விக**
**சிதசித்ர சிகிஉந்து வீரனை - எழில்**
**மாக நாக குமாரியாகிய மாதினோடு கிராதநாயகி**
**மருவப்புள கரும்பு தோளனை -எனை**
**அருமைப் பணி கொளுந் தயாளனை**

**காவடிச்சிந்து உரை:**

மணம் பொருந்தி கொத்துக் கொத்தாக இதழ் முருக் கவிழ்ந்து வண்டும், சுரும்பும், ஞிமிறும் ஆகிய கூட்டங்களில் ஒலிக்கும் படி தேன் துளும்பும் கடப்பமலர்த் தாரினை அணியும் மார்பன், விதவிதமான நாட்டிய நடை கூடி விசித்திரமாக விளங்கும் தோகை செறி வீர மயிலினை ஏறி நடாத்தும் வீரன்: அழகு மிகுந்த தேவகன்னியாகிய தெய்வயானை, குறப் பெண்ணான வள்ளிநாயகி ஆகிய இருவரும் தழுவி இன்பம் துய்க்குங்கால் புளகம் அடையும் தோள்களை யுடையவன் என் போன்ற கவிவாணர்களைத் தன் திருத்தொண்டனாக ஏற்றுக்கொள்ளும் அருளாளன் (புளகம் – மயிற்கூச்சம்)

இலக்கணம் :

குழல் கொள் வஞ்சி - குழற்கொண்ட வஞ்சிக்கொடி போன்ற இடையினை உடையாள் என விரிவதால் உவமைத்தொகை

எடுத்துக்காட்டு :

''தேனுண்டு வண்டுறு கடம்பணியும் நின்பதத்
தியானம் உண்டாகில் அரசே'' - திருவருட்பா

''கடம்பணி புயங்கள் வாழ்க'' - நெட்டூர் புராணம்

''திகழ் கடம்பத்தார் கொண்ட பன்னீரு தோள்களும்'' - திரு அருட்பா

''உருள்பூந் தண்தார்புரளும் மார்பினன்'' - திருமுருகு
''நேசமுடன் போகமுறும் வள்ளிக்கும் புத்தேளிர்
பூங்கொடிக்கும் மோகமளிக்கும் திருமார்பும்'' - கந்தர் கலி வெண்பா

''அழகி எனும் குறத்தி புளுகியல் சந்தனத்தின்
அமுததனம் புதைந்த திருமார்பா'' - திருப்புகழ்

3. **(1) தெரிதற் கரியமந்திர மதைத்தனது தந்தை**
**செவியிற் புகமொழிந்த வாயனை - இள**

**(2) ரவியிற் கதிர்சிறந்த காயனை...அகல்**

**(3) தேவநாடுகெடாது நீடிய சேனைகாவலனாக வேவரு**
**திறலுற்ற சிவகந்த நாதனை - விரி**
**மறை யத்தொளிருகின்ற பாதனை**

அறிவினுக்கு அறிவாயுள்ள பேரறிவையும் அறிகின்ற அவர்களும், தெரிதற்கரிதான பிரணவப் பொருளை தனது தந்தையாகிய பரமன் செவிபுக வலது தோளிலிருந்து வலது காதில் உபதேசித்த திரு வாயன். அழகு மிக்க இள ஞாயிற்றின் ஒளியினும் பல கோடி மடங்கு ஒளி பொருந்திய தெய்வத்திரு உருவத் தோற்றம் உடையவன். விரிந்த தேவருலகம் அசுர ஆட்சியால் கெட்டு ஒழியாதபடி தேவ சேனைக்கு நிலைத்த தலைவனாக வந்த வீரத்திறல் மிக்க சிவகுமாரனாகிய கந்தப்பெருமான். ரிக், யசூர், சாமம், அதர்வணம், என்கின்ற வரிந்த வேதங்களின் அகத்தே ஒளி விடுகின்ற திருவடிகளைக்கொண்டு விளங்குபவன் ஆன முருக தியானம்.

எடுத்துக்காட்டு :

3. (1) "மூக்கட் பரமற்குச் சுருதியின் முற்பட்டது கற்பித்து"—திருப்புகழ்

(2) ''உலகம் உவப்ப வலநேருதிரிதரு பலர் புகழ் ஞாயிறு
கடற்கண்டாங்கு'' - முருகு
''ஒருகோடி சூரியர்கள் ஒளிதவளும் யாக்கையான்'' - திருப்புகழ்

''சோதிவிரி இளம்பரிதி நூறாயிரங்கோடி போல வளந்தரு தொய்வீக
வடிவும் - கந்தர் கலி வெண்பா

''வளமை தளுவு பரிதிபுரியின் விரவு குமரன்''
- முத்துக்குமாரசாமி பிள்ளை தமிழ்

(3) ''சூரணிகெட்டது தேவேந்திரலோகம் பிழைத்ததுவே'' -
அனுபூதி

**இலக்கணம்** - விரிமறை- விரிவாயகியமறை- பண்புத்தொகை

**4. மருளற்றிட நினைந்து மனதிற் களிசிறந்து**
**மதுரக் கனிவுவந்த கூடவே... பல**
**விதமுற்றிலகு சிந்து பாடவே - அலை**
**வாரிநீரினை வாரிமேல் வருமாரி நேர்தரு மாமதாசல**
**வதனப்பரனிரண்டு தாளையே... நமக்கு**
**உதவப்பணிவ மிந்த வேளையே,**

மயக்கம் நீக்க நினைந்து, மனதிற் களிகொண்டு அன்போடு கூடிய பேரின்ப நிலைவந்து கூடவும். அவன் மீது பலவகை இசை இலக்கணந் தழுவி இனிய ஓசை நயமிக்க சிந்துப்பாடலைப் (குறள், அளவுநெடில், கழிநெடில், என்ற அடிவரையில் ஆசிரியந் தழுவிய சிந்தடியும் சிதைந்த அகவல் ஓசையும் கொண்டதாகும் சிந்து) பாடவும் அலை கடல் நீரினை உண்டுவான் சென்று பொழியும் கருமுகில்போல் மதம் பொழியும் (கன்னம், கபாலம், பீசம் மதங்கள்) பெரியமலை போன்ற கரிய யானையின் முகத்தோற்றத்தினையுடைய அருட்தன்மை பொருந்திய பரம் பொருளான விநாயகக் கடவுளின் இணையடிகளை, மனதில் நன்றாய் நினைந்து நமக்கு (உயிர்களுக்கு உதவி செய்யும்படியாகப்பணிந்து போற்றுவோம் இது போது என்றவாறு, இருள்மாயை மருள் மயக்கம், தெருள், அறிவு அருள், ஒளி) மாரி - மாமதாசம் என, பண்பு வுமையும் உருஉமையும் ஒருங்கு வந்தது.

எடுத்துக்காட்டு :

(1) ''மருளான பற்பல மார்க்கங்கள் எல்லாம் வழி துறை
தெரியாமல் மண்மூடிப்போக '' ... - அருட்பா

(2) ''சேவடி படரும் செம்மல் உள்ளமொடு நலம்புரி கொள்கை
புலம் புரிந்துறையுஞ் செலவுநீ நயந்தனையாயின்'' - முருகு

(3) ''கப்பிய கரிமுகன் அடிபேணிக் கற்றிடும் அடியவர்
புத்தியில் உறைபவன்'' - திருப்புகழ்

''மின்னை யொத்த விநாயகன் பொற்பதம் சென்னி வைத்தன்பு
செய்திடுவாமரோ'' - நெட்டூர் புராணம்

''சத்தியாகிச் சிவமாகி தனிப் பரமுத்தியாகிய முதலைத் துதிசேய
சுத்தியான் சொற்பொருள் நல்கு சித்தயானை தன்செய்ய
பொற்பாதமே'' - திருவிளையாடல்

''விகடசக்கர விண்மணியாகிய சகடசச்கரன் மெய்ப்பதம்
போற்றுவாம்'' - கந்தபுராணம்

''எடுக்கு மாக்கதை இன் தமிழ்ச் செய்யுளாய் நடக்க மேன்மை
நமக்கு அருள். கடக்களிற்றினை கருத்துள் இருத்துவோம்''
-பெரியபுராணம்

இதில், பிரணவப்பொருள் தெரியாத பிரமாவையும் அவன் சந்ததிகளான அசுரர்களையும், அழிக்க வல்லவன். பிரணவப் பொருள் தன் தந்தைக்குச் சொல்லினான். ஆக அப்பிரணவ சொரூபியான கணபதி நமக்கு உதவப் பணிவோம் என்றார். எனவே யானை முகச்சிவம், ஆறுமுகச்சிவம், சிவத்தின் 25 மூர்த்தங்களின் விரி பரசிவம் என்ற திருவருட்பா சீர்பாதவகிப்பில்காண்க. தலைமை பெறுகண நாதன் என்பார். பரன் - ஆதிகடவுள்.

(இராகம்: நாட்டை) பாட்டு 1. காப்பு. (தாளம்: சாப்பு)

(1) திருவுற் றிலகுகங்க வரையிற் புகழ்மிகுந்து
திகழத் தினமுறைந்த வாசனை, - மிகு
மகிமைச் சுகிர்ததொண்ட நேசனை, - பல
தீயபாதக காரராகிய சூரர்யாவரும் மாளவேசெய்து
சிகரக் கிரிபிளந்த வேலனை - உமை
தகரக் குழல்கொள்வஞ்சி பாலனை.

(2) மருவுற் றிணர்விரிந்து மதுபக் குலமுழங்க
மதுபெய்த் திழிகடம்ப ஆரனை, - விக
சிதசித்ர சிகிஉந்து வீரனை, - எழில்
மாகநாகமாரியாகிய மாதினோடுகிரதநாயகி
மருவப் புளகரும்பு தோளனை, - எனை
அருமைப் பணிகொளுந் தயாளனை,

(3) தெரிதற் கரிய மந்தி ரமதைத் தனது தந்தை,
செவியிற் புகமொழிந்த வாயனை, - இள
ரவியிற் கதிர்சிறந்த காயனை, -அகல்
தேவநாடு கெடாதுநீடிய சேனைகாவலனாகவேவரு
திறலுற்ற சிவகந்த நாதனை, - விரி
மறையத் தொளிருகின்ற பாதனை,

(4) மருளற் றிடநினைந்து மனதிற் களிசிறந்து
மதுரக் கனிவுவந்து கூடவே - பல
விதமுற் றிலகுசிந்து பாடவே - அலை
வாரிநீரினை வாரிமேல்வரு மாரிநேர் தரு மாமதாசல
வதனப் பரன் இரண்டு தாளையே - நமக்கு
உதவப் பணிவம் இந்த வேளையே.

---

பாட்டு - 2 முருகன் துதி

1 (1) சீர்வளர் பசுந்தொகை மயிலான் வண்ணச்
செவ்வழல் அலாதினிய தெள்ளமுத ஒயிலான்

(2) போர்வளர் தடக்கையுறும் அயிலான் - விமலப்
பொன்னடியை இன்னலற வுன்னுதல் செய்வாமே

பொழிப்புரை :

ஒழுக்கச் செழுமையும் வண்ணப் பசுமையும் கொண்டு அழகு தோய்ந்த புள்ளி நிறை கலாபமயிலையுடையவனும், தீப் போல் செந்நிறமும் அது அல்லாத தெள்ளமுத வெண்மையும் பொருந்தி இனிமையோடு ஒப்பு உவமை உயர்வு இல்லாத எழில் நலங்கொண்டவனும், தேவர்கள் பயந்தீரும் பொருட்டு எதுபோதும் போர் செய்து சிவந்து நீண்டு உரம் ஏறிய திருக் கையில் வேற்படையுடையவனுமாகி வளங்கும் பரம்பொருள் முருகவேளின் பொன்னார் திருவடிகளை நமது துன்பம் அகலுதற்பொருட்டு நினைத்தலைச் செய்வோமாக. விமலன் - ஆதிக்கடவுள்

பாடபேதம்: ''வள்ளி செவ்விதழ் அலாதினிய தெள்ளமுதம் அயிலான்''

எடுத்துக்காட்டுகள் :

''செய்யன் சிவந்த ஆடையன் '' - திருமுருகாற்றுப்படை

சீர்திகழ் தோகை மயின்மேலே - இளஞ்
செஞ்சுடர் தோன்றும் திறம்போலே
கூர்வடி வேல்கொண்டு நம்பெருமாள்-வரும்
கோலத்தைப் பாருங்கள் கோதையர்காள் அருட்பா

''பவளத் தன்னமேனித் திகழ் ஒளி குன்றிபேய்க்கும் உடுக்கை''
... குறுந்தொகை

''செருநர் தேய்த்த செல்உரழ் தடக்கை'' -திருமுருகாற்றுப்படை

''அழியாப் பொருளே என்னுயிரே அயில்செங்கரங் கொள்
ஐயாவே அருட்பா

உல்லாசன், குமரேசன், என்பதைப் போல ஒயிலான் என்பதும் அழகால் ஆடம்பரம் குறித்த வினைச் சொற்பொருள் தந்தது

**(2) குஞ்சர அணங் காவல் வீடா - தபடி**
**கொஞ்சிமரு வுஞ்சரச ரஞ்சிதவி... சேடா**
**பைஞ்சர வணங்காவல் வீடா... வளரும்**
**பாலன்என மாலையோடு காலைநினை வாமே**

தெய்வயானை அம்மையின் ஆசையை விடாதபடி அவளை கொஞ்சி மருவும் இனிய விசேடத் தன்மையுடையவனும், தண்மைபொருந்தி சரவணப் பொய்கையும் அதோடு அமைந்த வனமும் காவலாக வளர்ந்து கார்த்திகைப் பெண்களின் திருமுலைப்பால் உண்டவனும்.

உமையவளின் பாலனுமான முருகனை: காலை, மாலை இருபொழுதிலும் நமது நெஞ்சில் நிலைத்து ஒளிவிடுமாறு நினைப்போமாக:

இலக்கணம்: வளர்ந்தபாலன் என்பது வளரும் பாலன் என எதிரது தளீயது எடுத்துக்காட்டு :

''பஞ்சரம் கொஞ்சும் கிளிவந்து வந்தைந்து கரப்பண்டிதன் தம்பி
எனும் வயலூரா'' - திருப்புகழ்

(1) ''உல்லாச நிராகுல யோகவிதச்சல்லாப விநோதனும் நீ
அல்லையோ'' -அனுபூதி

(2) ''சேயோன் மேய மைவரை உலகமும்'' - தொல்காப்பியம்

''நெடும் பெருஞ்சியமைத்து நீலப் பைஞ்சுனை ஐவருள்
ஒருவன் அங்கை ஏற்ப அறுவர் பயந்த ஆறு அமர்
செல்வ ஆல்கெடு கடவுள் புதல்வ'' - முருகு

''பூதத்தலைவ கொடுபோதியெனத் தீக்கடவுள்'
சீதப்பகீரதிக்கே சென்றுய்ப்ப - போதொரு சற்
றன்னவளும் கொண்டமைதற் காற்றான் சரவணத்தில்
சென்னியிற் கொண்டுய்ப்பத் திருஉருவாய்'' - கந்தர் கலிவெண்பா

**(3) வல்லவுணர் வழியாதும் விட்டு - வெருள**
**வன்சமர்செய் கந்தனிடம் வழியடிமைபட்டு**
**நல்ல உணர் வழியாது மட்டு - மிஞ்சு**
**ஞானபர மானந்த மோன மடைவாமே**

வரத்தின் மேன்மையால் வல்லமை பெற்றுத் தீமை புரிந்த, அசுரர் வழியாகிய துன்மார்க்கத்தை ஒழித்து: அவர்கள் அஞ்சி வெருவும் படி கொடும் போர் செய்த முருகனின் அருள் வழியாகிய சன்மார்க்கத்தில், நல்ல உணர்வுடன் ஒன்றித் தொடர்ந்து இனிமை மிகுந்த ஞானத்தால் அடைகின்ற பரமானந்த முத்தியை மோனத்துடன் அடைவோமாக.

**(4). ஒருதந்த மாதங்க முகத்தான்...மகிழ**
**உத்தம கனிட்டனென உற்றிடும் அகத்தான்**
**வருதம்தம் ஆதங்க முகத்தான் - எவரும்**
**வாழ்த்துகுக நாயகனை ஏத்துதல் செய்வமே.**

ஒற்றைக் கொம்புடன் கூடிய யானை முகக் கடவுள் மிக மகிழும்படி, அவரின் திருத்தம்பியாகத் திருவவதாரம் செய்து, உள்ளத்தில் நிறைந்தவன் வருகிற பக்தர்களின் அவரவர் ஆபத்துக்களை, அகற்றுகின்றமையால் எல்லோராலும் வாழ்த்திக் கொண்டாடும் படியான குகநாயகனை நாமும் ஏற்றிப்போற்றுவோமாக என்றவாறு:

(ஆதங்கம் - ஆபத்து)

(1)"ஒருகோட்டிருமத முக்கண் நால்வாய் ஐங்கரன்" (பிறர்) இனி இது தீப்பூதமும், செவ்வாய், கிரகமும், ருத்திரமூர்த்தியும் சிவப்பு நிறங்கொண்டமைந்த இவர்களுக்கு எல்லாம் தலைவனான முருகனும், சென்னிறத்தனெனினுமத் அருள்மூர்த்தி என்பதனைக் குறித்த தத்துவக் கருத்தை ஆசிரியர் விளக்கவே தெள்ளமுத ஒயிலான் என்றார் ஒயில் - சிங்காரம் - உல்லாசம்

இனி இப்பாடலில், பாட்டுடைத் தலைவனின் கொடை, அளி, செங்கோல் புகழ், பெருமிதம் முதலிய புறப்பொருள், இலக்கணம் நிறைந்து கிடைத்தல் காணலாம்.

---

(இராகம்: நாதநாமக்கிரியை) பாட்டு 2 (தாளம்: சாப்பு)

**(1) சீர்வளர் பசுந்தோகை மயிலான்... வண்ணச்**
**செவ்வழல் அலாதினிய தெள்ளமுத ஒயிலான்**
**போர்வளர் தடக்கையுறும் அயிலான் விமல**
**பொன்னடியை இன்னலற உன்னுதல் செய்வாமே**

**(2) குஞ்சர வணங்காவல் வீடாத படி**
**கொஞ்சி மருவுஞ்சரச ரஞ்சித விசேடா**
**பைஞ்சர வணங்காவல் வீடா - வளரும்**
**பாலன்என மாலையோடு காலை நினைவாமே**

**(3) வல்லவுணர் வழியாதும் விட்டு - வெருள**
**வன்சமர் செய் கந்தனிடம் வழியடிமைப்பட்டு**
**நல்லவுணர் வழியாது மட்டு - மிஞ்சு**
**ஞானபர மானந்த மோனமடை வாமே**

**(4) ஒருதந்த மாதங்க முகத்தான் - மகிழ**
**உத்தம கனிட்டானென உற்றிடு மகத்தான்**
**வருதந்த மாதங்க முகத்தான் - எவரும்**
**வாழ்த்து குகநாயகனை ஏத்துதல் செய்வாமே**

---

பரமன் துதி பாட்டு 3

**மூர்த்தியின் பெருமை**

**(1) மரகத விகசித ஒளிதவழ் இருசிறை**
**மருவிய மயின்மிசை அனுதினம் உறைதரு**
**வாசன் பவ நாசன்**

**பொழிப்புரை:**

மரகதம் போன்ற பசுமை நிறமும் விசித்திரமான புள்ளியோடு கூடிய இரு சிறகுகளை உடைய மயில் வாகனத்தின் மீது நாளும் அமர்ந்து இருப்பவனும்; பாவங்களை ஒழிப்பவனும் ஆனவன்.

**(2) குரகத சுகமணி வளிரதம் நடவிய**
**குவலய சரதரன் எனும்மத னனும்மகிழ்**
**கோலன் பரை பாலன்**

பசுமை பொருந்திய கிளிக்கு திரைபூட்டிய தென்றல் தேரை நடாத்தி; குவளை மலரை அம்பாக கொண்டுள்ள மன்மதனும் கண்டு மயங்கி மகிழும்படியான அழகு, இளமை, நலம் பொருந்திய கோலத்தையுடைய முருகன், பார்வதியின் பிள்ளையானவன்

**(3) பரிபுர அணிகல கலவென ஒலிபுரி**
**பரிதிஉதய மதில் அவிழ்மரை மலர் நிகர்**
**பாதன் குக நாதன்.**

சிலம்புகள் கலகலவென ஒலிக்கும்படியாக கதிரவன் உதயம் செய்கின்ற காலையில் முருக்குடைகின்ற அழகிய தாமரை மலர் போன்ற திருவடிகளையுடைய குகப்பெருமான்

(தாமரை என்பது மரை என முதற்குறையாக செய்யுள் விகாரம் பெற்றது)

**(4) திரிபுர மவைஒரு நொடிதனில் எரிகொடு**
**சிதைவுற நகைபுரி சிவன்மனம் மகிழ்உப**
**தேசன் முரு கேசன்**

முன்னொரு காலத்தில் அந்தரத்து உலவி அசுர ஆட்சிக்குட் பட்டு மற்றவைகளை அழித்து தான் அழியாது நிலைபெற்றிருந்த மூன்று கோட்டைகளையும் ஒரு நொடிப்பொழுதில் சிதைந்து, எரிந்து போகும்படி, புன்னகை செய்தருளிய; சிவபெருமானின் மனம் மகிழும் படி பிரணவப் பொருளை உபதேசம் செய்த முருகனானதேசிகன்.

எடுத்துக்காட்டு :

(1) ''திரிபுரந்தீ மடுத்து'' - கலித்தொகை
''திரிபுரம் எரிந்த விரிசடைக் கடவுள்'' - சிலப்பதிகாரம்

**(5) பதும நிதியினொடு பணில நிதியும்எழில்**
**பரவிய சுரபியும் உறுசுர புரன்மகள்**
**பாகன் கன யோகன்**

மலர்விளை முத்துக்களான பதும நிதியும், சங்கு விளை முத்துக்களான சங்கநிதியும், (தலசலம், ஜலசலம்) ஒளியோடு கூடிய

அழகு நிறைந்த பொன் முதலியனவும். அமுதசுரபி, சங்கநிதி, பதுமநிதி, சிந்தாமணி, கற்பகத் தரு, காமதேனு, இலக்குமி: முழுமதி, வெள்ளைமா, முதலிய எண்வகை நிதியங்களும், நிறைந்து எழில் தவழும் அமராபதிக்கு அரசனான இந்திரன் மகளான தெய்வ யானையை ஒரு பக்கத்தே கொண்டவனும், நிலைத்து யாராலும் பெறமுடியாத கனயோகத்தைப் பெற்றவனுமான முருகன்.

இலக்கணம்

கனயோகன்-கனத்தயோகத்தையுடையவன் எனவிரிவதால் இரண்டாம் வேற்றுமையுறுபும் சொல்லுருபும் உடன் தொக்கது.

எடுத்துக்காட்டு:

(1) ''உல்லாச நிராகுல யோகவிதச் சல்லாப விநோதனும் நீ அல்லையோ'' அனுபூதி

**(6) சததள நளினத வீசுமிசை வதி ஒரு**
**சதுர்முக விதிசிறை யதிலுற நிறவுவி**
**சாகன் தட வாகன்**

குளிர்ச்சி பொருந்திய நூற்றிதழ் தாமரை மலரை இருக்கை இடமாக கொண்ட (பிரம்மாவை) நான்முகனை அவன் பிரணவப்பொருள் சொல்லாமையால் சிறைவாசம் புகப்பண்ணியவன், விசாக நட்சத்திரத்தின் தோன்றி மலை போன்றதும் வாகைமாலை சூடக் கூடியதுமான தோள்களைக் கொண்டருள்பவன்.

**(7) குரைதிரை வரைநிரை புரைதர உலவிய**
**குரவையின் நடுவுற நிருதரை முடுகிய**
**கோபன் கமழ் நீபன்.**

ஓசை செய்கின்ற கடல் ஓரத்திலும், மலை அடுக்கக் குன்று களிலும் குற்றப்படும்படியாக உலவிய குறையுள்ள அசுரர்களை; கடல் மத்தியில் ஒழியும் படியாக விரட்டிய கோபாக்கினியை உடையவனும் கடப்ப மாலையை தோள்களில் தரித்தவனுமான முருகன்.

**(8) பரைசிவை பகவதி உதவிய சரவண**
**பவன் ஆறு முககுகன் மிசைமது ரிதகவி**
**பாடும் சகம் நாடும்**

சிவனோடு பாதியான பார்வதி தேவி ஈன்று அருளி சரவணப் பொய்கையில் வளர்ந்து ஆறுமுகமாய் திகழும் குகப் பெருமான் மீது இனியதும் நன்மையுடையதுமான சிந்துப் பாடலை (மதுரகவி) நான் பாடவும் உலகம் இதை நாடவும் என்றவாறு

(1) ஓங்கொளி யாய்வீசும் பாதிதொறு மியலும்
தனதியல்பை உருவின் மாட்டுப் பாங்குபெறத்
தெரித்தது போல்பல பொரியாய் பரமன்விழிப்
பயத்தஞான்று தேங்கொளிரும் வெளி அடர்ந்து
வளி தொடர்ந்த ஒளி படர்ந்த
தெளிநீர்புக்கு நீங்கு விளையாட் டயாந்து
தணிகை அமர் பெருவாழ்வை நினைத்து வாழ்வாம்
- தணிகைப் புராணம்

இப்பாடல் ஒற்றொழிந்த உயிரும் உயிர் மெய்யுமாய் ஈரெழுத்து ஒரு சொற்கவிதையாய் கவிநயமிக்கு இலக்கணக்குறிப்புக் கொண்டது.

(இராகம்: பியாக்) பாட்டு - 3 (தாளம்: ஆதி)

1. **மரகத விகசித ஒளிதவழ் இருசிறை**
**மருவிய மயில்மிசை அனுதினம் உறைதரு**
**வாசன். பாவ நாசன்**

2. **குரகத சுகமணி வளிரதம் நடவிய**
**குவலய சரதரன் எனும்மத னனும்மகிழ்**
**கோலன் பரை பாலன்**

3. **பரிபுர அணிகல கலவென ஒலிபுரி**
**பரிதி உதயமதில் அவிழ்மரை மலர் நிகர்**
**பாதன், குக நாதன்**

4. **திரிபுர மவைஒரு நொடிதனில் எரிகொடு**
**சிதைவுற நகைபுரி சிவன்மன மகிழ்உப**
**தேசன். முருகேசன்,**

5. **பதும நிதியினொடு பணில நிதியும் எழில்**
**பரவிய சுரபியும் உறுசுர புரன்மகள்**
**பாகன். கன யோகன்,**

6. **சததள நளினத வீசுமிசை வதிஒரு**
**சதுர்முக விதிசிறை யதிலுற நிறுவுவி**
**சாகன், தடவாகன்**

7. **குரைதிரை வரைநிரை புரைதர உலவிய**
**குரவையின் நடுவுற நிருதரை முடுகிய**
**கோபன் கமழ் நீபன்**

8. **பரைசிவை பகவதி உதவிய சரவண**
**பவன் அறு முகசுகன் மிசைமது ரிதகவி**
**பாடும், சகம் நாடும்**

**பாட்டு 4** **துதி**

**(1) பவணக் கிரியதனுள் தானே**
**மன்னுவானே – பல**
**பாழிலே அலை யாமல் இன்புற**
**நாளுமேயருள் மேவுகண்கொடு**
**பாராய் இன்னல் தீராய்**

பொழிப்புரை :

கழுகுமலைத் தலத்தை இடமாகக்கொண்டு வாழ்ந்துவருகின்ற முருகப்பெருமானே? இதுபோன்ற வேற்று விடக்கு உடலாசையால் பல பிறவியால் பாழான உடலெடுத்து இந்த உலகிலே வீணாக அலைந்து துன்புறாமல், உனது பேரின்பங்கிட்டும்படியாக நாளும் ஆதரவு மேவவும் கருணைக் கண்ணால் பார்த்தருள் செய்து இன்னலைப் போக்கிடுவாய்.

பவணகிரி - கழுகுமலை

எடுத்துக்காட்டு:

1. ''வேற்று விகார விடக்குடம்பை உட்கிடப்ப ஆற்றேன்''
''புல்லாகி, பூடாகி, புழுவாய், மரமாகி, பல்விருகமாகி,
பறவையாய், பாம்பாகி, கல்லாய், மனிதராய், பேயாய்
கணங்களாய்'' - திருவாசகம்
''பையூரிலே இருந்து பாழூரிலே பிறந்து மெய்யூருக்குப்
போகும் வழி வேதாந்த வீடறியேன் வேதாந்த
வீடறிந்தால் பையூரும் பாழூரும் பாழாய் முடியாதோ'' - சித்தர் பாடல்

**(2) அவுணப் பகையை முடித்தோனே!**
**புண்ய வானே! – கதி**
**யாருமேதரு வாருமிங்கில்லை**
**யாதலால் அருள் வாய் இனம்புரி**
**யாதே பண்ணும் சூதே(2)**

அசுரர்களைக் கொன்று தேவர்களுக்குப் பயம் தீர்த்தவனே, புண்ணியச் செயல்களுக்கெல்லாம் முதல்வனே, இவ்வுலகில் வேறு

எவரும் எனக்கு வீடு பேறு நல்கும் ஆற்றல் உள்ளவர் இல்லை ஆகவே, கருணை அருள் பாலித்தல் வேண்டும் என்னை இன்னும் சோதித்து சூது பண்ணுதல் ஆகாது.

இனம்-இன்னம் என்றசொல் உயிர்மெய் கெட்டு அகர ஓசை குறித்த செய்யுள் விகாரம் ஆயிற்று.

எடுத்துக்காட்டு:

(1) ''மாறுபடும் சூரரை வதைத்த முகம் ஒன்று -திருப்புகழ்

''அண்ணாவே நின்னடியை அன்றி வேறோர் ஆதரவிங்கறியேன்''
-அருட்பா

(2) ''சூது செய்வாய் எனில் அரசே யார்க்குச் சொல்வேன்
எது புரிவேன்'' -(அருட்பா)

**(3) விரகப் பெருவிதனத் தாலே**
**மண்ணின் மேலே-மனம்**
**வீணிலேஉழ லாதுகந்தவி-**
**சாகனேபுரி, நீயும் வஞ்சம் என்**
**மீதே எண்ணிடாதே**

காம மயக்கத்தால் இந்நில உலக மண்ணில், இன்னும் வீணாகமனம் நொந்து உழலாது, கந்தவேளே; விசாகநட்சத்திரத்தில் தோன்றிய வனே, ஆதரித்தருளல் வேண்டும் என்மீது வஞ்சம் தீர்த்தல் ஆகாது பெருமானே.

எடுத்துக்காட்டு:

(1) ''பட்டிமாடெனத் திரிதரும்மடவார் பாழ்ங்குழிக்
கண்வீழ மனம் பற்றியன்றோ''

(2) ''வஞ்சம் எண்ணி இருந்திடில் என் செய்வேன் வஞ்சம்
அற்ற மனைத்து உறை அண்ணலே''
''கானல்நீர் விளைந்த மானென உலகக்கட்டினுள்
நட்டுழன்று அலையும்'' -அருட்பா

**(4) நரகச் சமன் வருமப்போதே**
**பின்னில்லாதே – பல**
**நாளும்மேமற வாது நின் சிறு**
**பாதமாகிய சீதபங்கயம்**
**நானே உன்னி னேனே.**

நரகவாதனை தரும் எமதூதர் என் உயிர்கொண்டு போக வரும் போது பின்தங்கி நிற்றல் செய்யலாகாது முருகனே. நானோ! எந்நாளும் குளிர்ந்த தாமரை மலர் போன்ற உனது சீரடிகளை நம்பி நினைந்து கிடக்கின்றேன்.
எடுத்துக்காட்டு:

(1) ''மாகத்தைமுட்டி வரு நெடுங் கூற்றன் வந்தால்
என் முன்னே தோகைப் புரவியில் தோன்றி நிற்பாய்''
- கந்தர் அலங்காரம்

**(5) நிமலப் பெருமிதச்செவ் வேளே!**
**கன்னல் வேளே – தொடு**
**நீடுபாணம தால் மருண்டிடை**
**(1)வாடுமாதரி டங்கொடாவகை**
**நீயே பண்ணுவாயே.**

எல்லாம் வல்ல மாசில்ல சிவபெருமான் பெருமிதம் கொள்ளும்படியான செவ்விய முருகவேளே' கரும்பு வில் தாங்கியமன்மதன் விடுகின்றகாம பாணத்தால் மதிமயங்கி வாடுகின்ற பெண்களிடம் நட்புக்கொண்டு உறவாடி கெட்டுப் போகாதபடி நீ அருள் செய்ய வேண்டுமையனே.

எடுத்துக்காட்டு:

(1) மருவே செறித்தகுழலார் மயக்கின் மதனாக மத்தின் விரகாலே மயலே எழுப்பி இதழே அருத்தி மலைநேர் முலைக்குள் உறவாகி பெரு காதலுற்ற தமியேனை நித்தல் பிரியாத பட்சம் மறவாதே. -திருப்புகழ்

**(6) குமரிக் காகபரல் கானே**
**நண்ணினானே – இகழ்**
**கோதிலாதத போபலம் பெறு**
**நீதர்பால் அக லாதுறைந்தருள்**
**கோவே என்னுள் வாவே!**

குமரியான வள்ளிநாயகியின் மேல் ஆசைகொண்டு முட்போன்று குத்தும் கற்கள் நிறைந்த கானகம் மேவியவனே! இகழ முடியாததும் குற்றமில்லாததுமான தவத்தின் பலன் பெற்ற உத்தமத் தொண்டர்பால் அகலாது இருக்கின்ற பெரியோனே, எனதுள்ளத்தும் வந்தருளல் வேண்டுமையனே!

**(7) கடல்சுற் றியஉலகப் பாலே**
**மின்னல் போலே-வரு**
**காயமாகிய தீயவன் பிணி**
**மேலியேதவி யாம லன்பொடு**
**காவே! என்ஐ யாவே!**

கடலால் சூழப்பட்டுகிடக்கும் இந்த உலகத்தின் கட்டுக்களின் ஐம்பெரும் பூதத்தால் வந்த மின்னல் போன்ற இவ்வுடலானது தீமை பொருந்தி வலிய நோயால் (உயிர் நோய் - ஆணவம், கன்மம், மாயை, உடல்நோய், முக்குணம் பிணிப்புண்டு பிறவிகளால் துன்புற்றுத் தவியாமல், என்னை நீ அன்புடனே வந்து காத்தருளல் வேண்டும் என் அப்பனான முருகையனே.

**(8) திடமற் றவனினுடைச் சேய**
**என்னைநீயே - திவ்ய**
**சேவையே செய்யும் ஞானபண்டிதர்**
**(1) நாவினூடு இனி தாவிளைந்திடு**
**தேனே! பொன்ன னானே!**

உடலற்றவனான சிவபெருமானின் பிள்ளையானவனே! சிவனுக்கு உடலில்லை. பாதி விண்டுவுக்கு கொடுத்து சங்கர நாராயணராகவும், பாதிஉடலை சக்திக்குக் கொடுத்து அர்த்தநாரீச்சுவரர் ஆகவும் காட்சி அளிக்கின்றார் என்பதை பெரியோர்கள் இயம்புகிறார்கள் இதனை ''ஒருநாமம் ஒருருவம் ஒன்றுமில்லார்'' என்றார் மாணிக்கவாசகர் என்னையும் நீ! உனக்கு மேன்மையான சேவைகளைச் செய்யும் ஞானப் புலவர்களின் நாவினில் இனிதாக விளைந்திடும் தேன் போன்றவனே! பொன் போன்றவனே! என்று பாடும்படியாக அருளல் வேண்டும் என்றவாறு.

தேனும், பொன்னும் நாச்சுவையும் கண்காட்சியுமாகும் தன் மாத்திரைகளாம். ஆனால் தித்திப்பும் ஒளியும் உடையதமிழ் எனக் கூட்டுக. எடுத்துக்காட்டு:

(1) பார்த்தாலும் படித்தாலும் படிக்கபக்கம்நின்று கேட்டாலும், பரிந்து உள் உணர்ந்தாலும் ஈர்த்தாலும், பிடித்தாலும், கட்டியணைத் தாலும் இத்தனைக்கும் தித்திக்கும் இனித்த சுவைக் கரும்பே. - (அருட்பா)

(இராகம்: ஆனந்தபைரவி) பாட்டு 4 (தாளம்: சாப்பு)

**1. பவணக் கிரியதனுள் தானே**
**மன்னுவாளே - பல**
**பாழிலே அலை யாமல் இன்புற**
**நாளுமேயருள் மேவுகண்கொடு**
**பாராய் இன்னல் தீராய்**

**2. அவுணப் பகையைமுடித் தோனே!**
**புண்ய வானே - கதி**
**யாருமேதரு வாருமிங்கிலை**
**யாதலால் அருள்வாய் இனம்புரி**
**யாதே பண்ணும் சூதே**

3. விரகப் பெருவி தனத் தாலே
மண்ணின் மேலே- மனம்
வீணிலேஉழ லாது கந்தவி -
சாகனேபுரி நீயும் வஞ்சம் என்
மீதே எண்ணி டாதே

4. நரகச் சமன் வருமப் போதே,
பின் னில்லாதே - பல
நாளும்மேமற வாதுநின்சிறு
பாதமாகிய சீதபங்கயம்
நானே உன்னி னேனே

5. நிமிலப் பெருமிதச் செவ் வேளே!
கன்னல் வேளே-தொடு
நீடுபாணம தால் மருண்டிடை
வாடுமா தரி டங்கொடாவகை
நீயே பண்ணு வாயே

6. குமரிக் காகபரல் கானே
நண்ணி னானே! - இகழ்
கோதிலாதத போபலம்பெறு
நீதர் பால் அக லாதுறைந்தருள்
கோவே! என்னுள் வாவே!

7. கடல்சுற் றியஉலகப் பாலே
மின்னல் போலே-வரு
காயமாகிய தீயவன் பிணி
மேலியேதவி யாமலன்பொடு
காவே! என்ஐ யாவே!

8. திடமற் றவனினுடைச் சேயே,
என்னைநீயே-திவ்ய
சேவையேசெயும் ஞானபண்டிதர்
நாவினூடுஇனி தாவிளைந்திடு
தேனே! பொன்ன னானே!

பாட்டு 5

துதி

1. செந்தின் மாநகர் வாழ் கந்த நாதன் இரு
செய்யபாத கஞ்சமே - நமக்கு
உய்யமேவு தஞ்சமே-இன்று
செப்புவது கொஞ்சமே-கேட்கத்

**(1) தீயபாதகவி ரோத மாயவிட்டுத்**
**திரும்பு வாயே நெஞ்சமே (2)**

**பொழிப்புரை:**

திருச்செந்தூர் மாநகர் வாழ்கின்ற முருகப்பெருமானின் இரண்டு செவ்விய திருவடித்தாமரைகள் நம் போன்றவர்க்கு வாழ்க்கையில், இன்புற துதிப்பதற்கும், தஞ்சம் புகுவதற்கும் இடமாகும். இப்பொழுதே அதைச் சொல்லித் தொழுவது கொஞ்சம் ஏ நெஞ்சமே! கேட்பாயாக! தீமை யான பாதக பகைளைச் சேர்ந்த மாயத்தை விட்டு என் வழி திரும்புவாயாக.

எடுத்துக்காட்டு:

(1) ''காம உட்பகைவனும் கோப வெங் கொடியனும்
கானலோப முழுமூடனும் கடுமோக வீணனும்
கொடுமதம் எனும் துட்ட கண்கெட்ட ஆங்காரியும்
ஏமம் அறுமாச்சரிய விழலனும் கொலையென்று
இயம்பு பாதகனுமாம் இவ்வெழுவரும் இவர்க்குற்ற
உறவான பேர்களும் எனைப் பற்றிடாமல் அருள்வாய்''

(2) ''மனமெனும் ஓர் பேய்க் குரங்கு மடப்பயலே
நீதான் மற்றவர்போல் எனை நினைத்து மருட்டாதே கண்டாய்''
-அருட்பா

''நெஞ்சே நீ நினையாய் நிமிர் புன்சடை நின்மலனை'' -தேவாரம்
''நினைமின் மனனே நினைமின் மனனே நெஞ்சே உனக்கு
உபதேமிதே'' -பட்டினத்தார்

2. **பந்த (2) பசம்இதை எந்தவேளையிலும்**
**பார்க்கும் போது தொல்லையே-அல்லால்**
**ஆர்க்கும் ஆவது இல்லையே-ஒரு**
**பார(1) மேரு வில்லையே-கையில்**
**பற்று நாதன்மாது பெற்ற நீ தன் மீது**
**பனுவல் சூடு வல்லையே.**

பந்தபாசமிது எப்பொழுது நினைத்தாலே துன்பமாக இருக்கிறது. ஆனால் எல்லோருக்கும் இது புரிவதில்லை. ஒரு கனம் பொருந்திய மேருமலையை வில்லாக வளைத்து கையில் பிடித்த, சிவபெருமானின் பாதியைக் கொண்ட உமையவள் பெற்ற நீதியுடைய முருகன் மீது பெருநூல் பாடி அணிவதற்கு விரைவாக முடியவில்லையே!

**எடுத்துக்காட்டு:**

''மேரு 1 மலை வில்லியை'' -பிறர்
''பந்த2மான திட்ட மெழுகாகி உள்ளம் பதைத்து
பதைத்துருகவே'' -தாயுமானவர்

''தொல்லைக் குடும்ப துயரனிற்
தொலைத்தேனந்தோ வாழ்நாளையெல்லாம்'' -வள்ளலார்

3. **மங்கைமார்கள் இரு கொங்கை துங்கமத**
**வாரணங்கொள் கும்பமே - முகம்**
**பூர்ணச்சந்திர விம்பமே- பட**
**மாசுண நிதம்பமே - தொடை**
**மார வேள் அரசு மண்டபத் தருகில்**
**வைத்த ரண்டு கம்பமே**

இள மாதர்களுடைய இரு தனங்களும் யானையின் உயர்ந்த மத்தத்தை ஒக்கும். முகமோ ஒளிமிக்க பூரணசந்திரனை ஒக்கும். அல்குலோ, பாம்பின் படத்தையொக்கும், இரண்டு துடைகளோ (கருப்புநிற) மன்மதன் வசிக்கின்ற அழகிய அவன் மண்டபத்தின் முன் நிறுத்தி வைக்கப்பட்ட வேலைப்பாடடங்கிய தூண்களை ஒக்கும்.

**எடுத்துக்காட்டு:**

(''கடாக் களிற்றின் கட்படா அமாதர் படா அமுலை மேற்றுகில்''குறள்

4. **செங்கை சூரியோத யங்கு லாவமலர்**
**சீதபத்ம தளமே - வாயில்**
**ஓதுசொற்கள் குளமே-இதழ்**
**திவ்யபொற்பவளமே-என்று**
**சிந்தித் தால் குமரன் கந்தப் பாதமலர்**
**சேர்வ தெவ்வா றுளமே?**

செவ்வண்ணம் பொருந்திய அகங்கை. இளஞாயிற்றால் காலையில் விரிந்து குளிர்ந்த தாமரைமலரை ஒக்கும். வாயினால் அளவு கடவாது மொழியும் சொற்கள் கருப்பஞ் சாற்றின் இனிமையை ஒக்கும். (குளம்-வெல்லம்) இதழோ இனிய பொறப்பவளத்தை யொக்கும் என்று நினைத்தால் திருக்குமரனுடைய மேன்மை மிகுந்த பாதமலரை எங்கனம் அடைவாய் மனமே. (திவ்யம்-இனிமை, மேன்னை)

**எடுத்துக்காட்டு:**

''பால் என்பது மொழி பஞ் சென்பது பதம் பாவையர் கண்
சேல் என்பதாகத் திரிகின்ற நீ செந்திலோன் திருக்கை
வேல் என்கிலை; கொற்ற மாயூரமென்கிலை வெட்சித்தண்டைக்
கால் என்கிலை, மனமே! எங்ஙனே? முத்திகாண்பதுவே,

- கந்தரலங்காரம்

5. **வன்னிமான விழி மின்ன வேகடையில்**
**வக்ர தந்த சங்கமே -கொண்ட**
**உக்ரதுங்க சிங்கமே - என்ன**
**மாறலிதூதர் பொங்கமே-உற்று**
**வந்தவேளை நெஞ்சே கந்தவேளை நினை**
**மருவு றாதுபங்பமே**

தீப்பொறிகள் கொண்டு திரண்டு விளங்கும் விழியில் ஒளி மின்னவும்; கடைக்கண்களில் கொடுமைக்கூட்டம் நிறைந்துவளைந்த கோரைப் பற்களுடன் கோபம் பொங்கிய சிங்கம் போன்று எமதூதர் உயிர் கொள்ள பொங்கி எழுந்து வந்தபோது ஏ மனமே! கந்தபெருமானை நினைவாயாக தோல்வியான துக்கம் உன்னை வந்து அணுகமாட்டாது. (வன்னி-தீ)

''கொடுங்கூற்று என் செயும்
குமரேசர் இருதாளும் சிலம்பும் தண்டையும்
சண்முகமும் தோளும் கடம்பும் எனக்கு முன்னே
வந்து தோன்றிடிலே'' -கந்தரலங்காரம்

பொருள் பரிமாணம் இப்பாடலில் காணப்படுகிறது -பொருள் பரிமாணமாவது தீப்பூதத்தின்; நிறம் - செம்மை, பண்பு - வெப்பம், தன்மை-எரித்தல், குணம்- ரசதம், ரோகம் - பித்தம், உடற்கூறு - கண், மனம், உயிற்கூறு-அறிவெளி, சுவை-புளிப்பு; இதுபோல் ஐம்பெரும் பூதத்திற்கும் கூட்டுக.

6. **சென்னி மாநகரண் ணாமலைக் கவிஞன்**
**தேசம்எங்கும் இசையே - பெறப்**
**பேசுசந்த மிசையே - சற்றும்**
**தீர்ந்திடாத நசையே -வைத்துச்**
**சேவலாளிபதம் ஆவ லோடுபணி**
**தினமும் நூறு விசையே**

சென்னிகுள மாநகரில் பிறந்த அண்ணாமலையாகிய கவிஞனான என்மேல் உலகெல்லாம் புகழ்பரவச் செய்வது இந்தக் காவடிச்சிந்தான இசைப்பாடலேதான். ஆனால் கொஞ்சமும் தீர்ந்துவிடவில்லை முருகன் மேல் பாடுகின்ற ஆசை. அவ்வாசையைக் கொண்டு சேவற்கொடியோன் ஆன கந்தப் பெருமானின் திருவடிகளை ஒரு நாளைக்கு நூறுமுறை பணிதலைச் செய்வோம் மனமே என்றவாறு. ஆசை என்பதால் மனம் வருவிக்கபட்டது. தற்கிழமை யான மனதை பிரிதின் கிழமையோடும் முன்னிலையாக்கினார்.

## துதி

(இராகம்: கானடா) பாட்டு - 5 (தாளம்: ரூபகம்)

1. செந்தின் மாநகர்வாழ் கந்த நாதன் இரு
செய்யபாத கஞ்சமே - நமக்கு
உய்யமேவு தஞ்சமே - இன்று
செப்புவது கொஞ்சமே - கேட்கத்
தீயபா தகவி ரோத மாயவிட்டுத்
திரும்பு வாயே நெஞ்சமே

2. பந்த பாசம் இதை எந்த வேளையிலும்
பார்க்கும் போது தொல்லையே - அல்லால்
ஆர்க்கும் ஆவது இல்லையே - ஒரு
பாரமேரு வில்லையே... கையில்
பற்று நாதன்மாது பெற்ற நீதன் மீது
பனுவல் சூடுவல்லையே

3. மங்கைமார்கள் இருகொங்கை துங்கமத
வாரணங்கொள் கும்பமே - முகம்
பூர்ணச்சந்திர விம்பமே... பட
மாசுண நிதம்பமே - தொடை
மார வேள் அரசு மண்டபத் தருகில்
வைத்த ரண்டு கம்பமே

4. செங்கை சூரியோத யங்கு லாவமலர்
சீதபத்ம தளமே... வாயில்
ஓதுசொற்கள் குளமே -இதழ்
திவ்யபொற்ப வளமே - என்று
சிந்தித் தால்குமரன் கந்தப் பாதமலர்
சேர்வ தெவ்வாறுளமே?

5. வன்னிமானவிழி மின்ன வேகடையில்
வக்ரதந்த சங்கமே -கொண்ட
உக்ரதுங்க சிங்கமே - என்ன
மாறலிதூதர் பொங்கமே - உற்று
வந்தவேளை நெஞ்சே கந்த வேளை நினை
மருவு றாது பங்கமே

6. சென்னி மா நகரண்ணாமலைக் கவிஞன்
தேசம்எங்கும் இசையே - பெறப்
பேசுசந்த மிசையே -சற்றும்
தீர்ந்திடாத நசையே - வைத்து
சேவ லாளிபதம் ஆவலோடுபணி
தினமும் நூறு விசையே

# இயற்கை எழில் இயல்

பாட்டு 6 நகர்வளம்

(1) **தெள்ளுதமி ழுக்குதவு சீலன் - துதி**
**செப்பும்அண் ணாமலைக்கனு கூலன் - வளர்**
**செழிய புகழ் விளைத்த கழுகு மலைவளத்தைத்**
**தேனே! சொல்லு வேனே**

**பொழிப்புரை:**

தெளிந்த செம்மையுடைய ஐந்து இலக்கணச் சிறப்புங் கொண்ட தமிழுக்கு உதவுகின்ற நற்குணவானும், அந்த தமிழை அவன்பால் அன்போடு சொல்லுகின்ற அண்ணாமலைக் கவிராயருக்கு அருள்.. புரிபவனுமான முருகன். அமர்ந்துள்ள செழுமையான புகழ் பொருந்திய கழுகுமலை நகர்வளத்தை இனிமையான பெண்ணமுதே! நான் சொல்லுகின்றேன் நீ கேட்பாயாக, தேனே என்பது மகடுவு முன்னிலை

எடுத்துக்காட்டு:
''தெள்ளளுதமிழ் பாட தெளிவோனே செய்ய குமரேசத் திரலோனே''-திருப்புகழ்
''முத்தமிழால் வைதாரையும் வாழவைப்போன்'' -அனுபூதி
''இமையா நாட்டத்திறையும், குமாரவேளும் முத்தமிழ்ச்சங்க வித்தகப் புலவராய் தமிழ் ஆய்ந்தனா'' -சிலம்பு அடியார்க்கு நல்லார்
''கண்ணுதற், பெருங்கடவுளும், கழகமோடமர்ந்து பண்ணுறத் தெரிந்தாய்தவிப் பசுந்தமிழ்'' –திருவிளையாடல்
வளர் -வினைத்தொகை, தேனே -உருவகம்

2. **வெள்ளிமலை யொத்தபல மேடை- முடி**
**மீதினிலே கட்டுக்கொடி யாடை -அந்த**
**(2) வெய்யவன் நடத்திவரு துய்யவிர(1) தப்பரியும்**
**விலகும்படி இலகும்**

வெண் சுண்ணச் சாந்தினால் பூசப்பட்டவீடுகளில் கைலைமலைக் கொப்பான மேடைகள் பல அமைந்திருந்தன; அவைகளின் உச்சியிலே கட்டுகின்ற கம்பக்கொடிச் சீலைகள் காற்றின் அசைவால் வெயிலவனான கதிரவன் ஓட்டி வருகின்ற வெண்மையான இரதத்தையும் குதிரைகளையும், விலகும்படி அசைந்து விளங்கும்படி அமைந்தன. இது தற்குறிப்பேற்றணியின் பாற்படும்.

(இரதப்பரி என்பது விரபப்பரி என வகர உடம்படு மெய் பெற்றது அது இ-ஈ-ஐ பழி என்ற சூத்திரத்தின் வழியாகும்.)

எடுத்துக்காட்டு:
''தேனருவித் திரை எழும்பி வானின் வழி ஒழுகும் செங்கதிரோன் தேர்க்காலும் பரிகாலும் வழுகும்'' - குறவஞ்சி

''பளிக்கு மாளிகைத் தலந்தோறும் இடந்தோறும்'' - இராமாயணம்
''குருமணிச்சுடர் வெயில் விரிமானீழ் கொடிகள்
பரிதி வானவன் நடவுதேர் பரியினைப் புடைத்து
வருணனிற் றெழில'' -நைடதம்
''போருழந் தெடுத்த வாரெயில் நெடுங்கொடி
வாரெல் என்பன போல் மறித்துக் கைகாட்ட'' -சிலம்பு

3. **வீதிதோறும் மாதி(1) மறை வேதம் சிவ**
**வேதியர்க ளோது(2) சாம கீதம்... அதை**
**மின்னுமலர்க் காவதனில் துன்னுமடப் பூவையுடன்**
**விள்ளும் கிள்ளைப் புள்ளும்**

**பொழிப்புரை:**

தேரூரும் தெருக்கள் பலவற்றிலும் பழமறைகளின் வேத ஒலிகளும் பொறிபுலனடக்கிய சிவ அந்தணர்கள் ஓதி வருகின்ற சாமவேதத்தின் இசையும், எப்போதும் முழங்குவதால் அந்த இசையையும், மறைகளை யும் ஒளி விடுகின்ற மலர்ச் சோலைகளில் நெருங்கி வருகின்ற நாகண வாய்களும், கிளிப்பிள்ளைகளும், தம் தம் பெண் பறவைகளுக்குச் சொல்லும்

எடுத்துக்காட்டு:
(1) ''இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்'' -திருவாசகம்
(2) ''சாமவேதியர் வானவர் ஓதி நாண்மலர் தூவிய தாழில் விழ
நினதருள் புரிவாயே'' -திருப்புகழ்
''உச்சிக் குப்பிய கையினர் தற்புகழ்ந்து ஆறெழுத்து அடங்கிய
அறுமறைக் கேள்வி நாயியல் மருங்கில் நவிலப் பாடி
யேரகத்துறைதலும் உரியன'' -திருமுருகாற்றுப்படை

4. **சீதள முகிற்குவமை கூறும் - நிறச்**
**சிந்துரங்கள் சிந்துமதத் தாறும் - உயிர்ச்**
**(2) சித்திரம் நிகர்த்த (1) மின்னார் குத்துமுலைக் குங்குமச்செஞ்**
**சேறும் காதம் நாறும்**

தண்மையான கருமேகங்களுக்கு உவமை கூறும்படியாக விளங்கும் யானைக் கூட்டங்களின் மதவெள்ளமும், உயிருள்ள சித்திரப் பாவைகளைப் போன்ற மின்னலை ஒத்த இளம் பெண்கள் கதித்த தனங்களுக்கு பூசி வெறுத்த குங்குமக் குழம்பும் ஒருகாத தூரம் மணக்கும்படி அமையும்.

இலக்கணம்

சித்திரமின்னார்-மின்னல் போன்ற இடையினை உடைய உயிர்ச்சித்திர மின்னார்... பெண்கள் என விரிவதால் உவமை உருபும் பயனும் உடன் தொக்கத் தொகை.

எடுத்துக்காட்டு:

''முருக்(1) கொடு கலந்த சந்தன வளருபடு குங்குமம் கமழ்
முழுமதி புரிந்த சிந்துர அறிவையுடன் கலந்திடு'' -திருப்புகழ்
''காழகிற் சாந்தமும் கமழ் பூங்குங்குமம் நாவிக் குழம்பும்
நலங் கொள் தேய்வை கொழுஞ்சேராடி'' -சிலப்பதிகாரம்
''கொட்டு சாந்தமும் நாணமும் குங்குமச் சேறும்
கட்டு தாமமும் தமது கட்டழகெலாங் கவர
மட்டுண் கோதையர் ஆடவர் மனமெலாம் கவர்ந்தார் - திருவிளையாடல்

5. **நித்தநித்த மும்கணவ ரோடும் - காம**
**நேசத்தால் பிணங்கிமனம் வாடும்... கரு**
**நீலவிழி யார்வெறுத்த கோலமணி மாலைர த்னம்**
**நெருங்கும் எந்த மருங்கும்**

நாளும் தம் தம் கணவரோடு உடலுறவு இன்பத்தால் அன்பு அறியாமை கொண்டு ஊடல் செய்து, மனம் வாடுகின்ற கருநீலம் போன்ற விழிகளையுடைய மாதர்கள் வெறுத்து எரிந்த பல்வேறு நிறங்களைக் கொண்ட வேலைப்பாடு அடங்கிய மணிகளால் புனைமாலைகளும்; இரத்ன மாலைகளும் தெருக்கள் எங்கணும் குவிந்து நெருங்கி காணப்படும். கரு நீல விழி - கருநீலம் போன்ற விழி என விரிய உவமைத்தொகை.

எடுத்துக்காட்டு:
''அவரிழை சுமக்காலாற்றா அந்நல்லார் பரித்துநீத்த
திகளொளி மணியும் முத்தும் சிந்தின முன்றில் தோறும் -நைடதம்

6. **சுத்துகட லொத்த கடை வீதி... முன்பு**
**சுட்டுதர ளப்பந்தலின் சோதி -எங்கும்**
**காட்டுவதால் ஈரிரண்டு கோட்டுமத யானையிற்பல்**
**களிறும் நிறம் வெளிறும்**

இடையறா அலை ஒலிகள் நிறைந்த கடலென பல்வேறு ஒலிகளை எழுப்பி பண்டமாற்றுச் செய்கின்ற மக்கள் கூட்டமும், அவர்களுக்கு வெப்பம் தாக்காது கடைவீதிதோறும் வசதிக்காக கட்டி வைத்திருக்கும் தண்மை பொருந்திய முத்து பந்தர்களின் ஒளியானது; எங்கும் நிறைந்தமையால் நான்கு கொம்புகளுடைய இந்திரனின் ஐராவத வெள்ளையானையை ஒத்து அந்நகரத்தில் திரிகின்ற யானைகளும் நிறம் வெளிரிக் காணப்படும்.

எடுத்துக்காட்டு:
''ஈரிரண்டு ஏந்திய மறுப்பின் எழில் நடைத்தாழ் பெறும்
தடக்கை உயர்ந்த யானை'' -திருமுருகாற்றுப்படை

**7. முத்தமிழ்சேர் வித்வசனக் கூட்டம்... கலை**
**முற்றிலும் உணர்ந்திடுங்கொண் டாட்டம்...நெஞ்சில்**
**முன்னுகின்ற போதுதொறு தென்மலையின் மேவுகுறு**
**முனிக்கும் அச்சம் சனிக்கும்**

இயல் இசை நாடகம் என்ற மூன்று தமிழும் இணைந்து மாண்புள்ள வித்தை வல்லார்கள் நெருங்கிய கூட்டமும், அறுபத்து நான்கு கலைகளையும் முற்றும் உணர்ந்தவர் கொண்டாடுகின்ற விழாக்களும், அவர் அறிவாராட்சியும் (கலையறிவு-கல்வியறிவு, நூலறிவு; நுண்ணறிவு தத்துவ அறிவு ஆகிய அனைத்தும்) நெஞ்சில் நினைத்தபோதே தென்பொதிகை மலையில்வாழ் எல்லாம் வல்ல தமிழ் குறுமுனிக்கே அச்சம் தோன்றும் படியாக அமையும்

**8. எத்திசையும் போற்றமரர் ஊரும்... அதில்**
**இந்திரன்(1) கொலுவிருக்கும் (2)சீரும்-மெச்சும்**
**இந்தநக ரந்தனை அடைந்தவர்க் கதுவும் வெறுத்**
**திருக்கும் அரு வருக்கும்**

**பொழிப்புரை:**

திக்கெல்லாம் புகழும் தேவருலகும்,அதில் தேவேந்திரன் அலங்கார அரசு இருக்கைச் சிறப்பும், அதனால் ஏற்படும் எழில் நலமும் கண்டு புகழ்ந்தவர்கள்; இந்த கழுகுமலை நகரந்தனை வந்து கண்டாராயின், அந்த தேவருலகத்தையும், அவ்விந்திர பதவியையும், அவ்வெழில் அழகையும் வெறுத்து ஒதுக்குவதுடன் அருவருப்புங் கொள்வர்.

எடுத்துக்காட்டு:
"இந்திரன் 1 இருக்கையன்ன கோவிலூடு இனித்திருந்தான் -வில்லிபாரதம்
அச்சுதா 2 'அமரரேரே அயர்தம் கொளுந்தே
என்னும் இச்சுவைதவிர யான்போய் இந்திரலோகம்
ஆளும் அச்சுவை எபெரினும் வேண்டேன்'' -ஆழ்வார் பாசுரம்
''வானேயும் பெறில் வேண்டேன் மண்ணாள்வான் மதித்தும் இரேன்''
- திருவாசகம்

''இரவி வெள்க நின்று இமைக்கின்ற இயற்கை என்றால்
நரகம் ஒக்கும் மால் நன்னெடும் துரக்கம் இந்நகர்க்கு''
– (கம்பராமாயணம்)

**9. துள்ளியெழும் வெள்ளியலை அடங்கும்... படி**
**சுற்றிலும் வளைந்த அகழ் கிடங்கும் - பல**
**சொன்னமலை போல்மதிலும் மின்னுவதி னாலேபுகழ்**
**தோன்றும் லோகம்1 மூன்றும்**

**பொழிப்புரை:**

விரைவோடு கூடி உயர்ந்தெழுந்த வெள்ளிய அலையானது அடங்கும்படியாக கழுகுமலை நகரைச் சுற்றி வளைந்துக்கிடக்கும் அகழியும், அதன் நடுவில்; பலவேறு ஒளிக்கதிர் நிறைந்த பொன் மலையைப் போல எழுந்த மதில்கள் மின்னும்படி அமைந்த அமைப்பும் அவற்றின் புகழானது மூன்று உலகங்களிலும் கால் கொள்ளும். (1 சுவர்க்கம் - பூமி - பாதளம் ஆகிய மூன்று உலகங்கள்)

**10. கள்ளவிழ் கடப்பமலர் வாகன்...1 குறக்**
**கன்னியை அணைக்கும் அதிமோகன்... வளர்**
**கழுகுமலை நகரின்வள முழுமையும் என் நாவி லடங்**
**காதே! மட மாதே!**

தேன் துளும்ப முருக்குடையும் கடப்ப மலர்களால் தொடுத்த மாலையை விருப்பத்தோடு தோளில் அணிபவனும், குறப் பெண்ணாகிய வள்ளியம்மையை அதிக விருப்பத்துடன் அணைத்து மகிழ்பவனுமான கந்தப்பெருமான் எழுந்தருளியுள்ள இக்கழுகுமலை நகரின் செழுமையான பெருமை; எனது நாவில் முழுமையாக சொல்லி அடக்கும் தன்மையதன்று பெண்ணே என்றவாறு,

(வளர்-வளர்ந்த, வளர்கின்ற, வளரும் எனவிரிவதால் வினைத்தொகை)

எடுத்துக்காட்டு:
''வேடிச்1சி கொங்கை விரும்பும் குமரனை'' -அலங்காரம்

(மாதே என்பது -மகடூவு முன்னிலை)

## நகர் வளம் இயற்கை எழில் இயல்

(இராகம்: காபி) பாட்டு - 6 (தாளம்: ஆதி)

**1. தெள்ளுதமிழுக் குதவு சீலன் - துதி**
**செப்பும் அண்ணாமலைக் கனுகூலன் -வளர்**
**செழிய புகழ்விளைத்த கழுகு மலைவளத்தைத்**
**தேனே! சொல்லு வேனே**

**2. வெள்ளிமலை யொத்தபல மேடை முடி**
**மீதினிலே கட்டுகொடி யாடை-அந்த**
**வெய்யவன் நடத்திவரு துய்யவிரதப் பரியும்**
**விலகும் படி இலகும்**

3. வீதிதோறு மாதிமறை வேதம் - சிவ
வேதியர்க ளோதுசாம கீதம் -அதை
மின்னுமலர்க் காவதனில் துன்னுமடப் பூவையுடன்
விள்ளுங் கிள்ளைப் புள்ளும்

4. சீதள முகிற்குவமை கூறும் -நிறச்
சிந்துரங்கள் சிந்துமதத் தாறும் - உயிர்ச்
சித்திரம் நிகர்த்தமின்னார் குத்துமுலைக் குங்குமச்செஞ்
சேறும் கா தம் நாறும்

5. நித்தநித்த மும்கணவ ரோடும் - காம
நேசத்தால் பிணங்கிமனம் வாடும்... கரு
நீலவிழி யார் வெறுத்த கோலமணி மாலைரத்னம்
நெருங்கும் எந்த மருங்கும்

6. கத்துகட லொத்த கடைவீதி - முன்பு
கட்டுதர ளப்பந்தலின் சோதி - எங்கும்
காட்டுவதால் ஈரிரண்டு கோட்டுமத யானையிற்பல்
களிறும் நிறம் வெளிறும்

7. முத்தமிழ்சேர் வித்வசனக் கூட்டம் - கலை
முற்றிலு உணர்ந்திடுங் கொண்டாட்டம்... நெஞ்சில்
முன்னுகின்ற போதுதொறு தென்மலையில் மேவுகுறு
முனிக்கும் அச்சம் சனிக்கும்

8. எத்திசையும் போற்றமரர் ஊரும் - அதில்
இந்திரன் கொலுவிருக்கும் சீரும் - மெச்சும்
இந்தநக ரந்தனை அடைந்தவர்க் கதுவும்வெறுத்
திருக்கும் அரு வருக்கும்

9. துள்ளியெழும் வெள்ளியலை அடங்கும் -படி
சுற்றிலும் வளைந்த அகழ் கிடங்கும்-பல
சொன்னமலை போல்மதிலும் மின்னுவதி னாலேபுகழ்
தோன்றும் லோகம் மூன்றும்

10. கள்ளவிழ் கடப்பமலர் வாகன் -குறக்
கன்னியை அணைக்கும் அதி மோகன் -வளர்
கழுகுமலை நகரின் வள முழுமையும் என் நாவிலடங்
காதே மட மாதே!

பாட்டு 7

## கோவில் வளம்

**சென்னி குள நகர் வாசன் - தமிழ்**
**தேறும் அண்ணாமலை தாசன் - செப்புஞ்**
**செகமெச்சிய மதுரக்கவி யதனைப்புய வரையிற்புனை**
**தீரன் அயில் வீரன்**

**பொழிப்புரை:**

சென்னிகுள நகரில் பிறந்து தமிழ் ஆய்ந்த அண்ணாமலையாகிய தொண்டன் சொல்லிய; உலகெல்லாம் புகழும்படியான இனிய பாமாலை மதுரக்கவியை குன்றுபோன்று திரண்டதோளில் அணிந்த திண்மையுடையவன். வெற்றிவேலைத் தாங்கிய முருகனானவன் உலகோர் அணிவிப்பது பூமாலை புலவர் அணிவிப்பது பாமாலை.

(ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம், என்பன நான்கு வகைக்கவிகளாகும்.)

(உணர்நிலை அல்லது தெளிவுக்காட்சி என்ற எனது நூலில்; தமிழுக் கும் சைவத்திற்கும் உள்ள தொடர்பு ஆய்ந்து விளக்கப்பட்டிருக்கிறது)

எடுத்துக்காட்டு:

''யான் புகழும் 1 அலங்கல் அணிந்தருளே'' -அருட்பா

2. **வன்ன மயில்முரு கேசன் - குரு**
**வள்ளிப்பதம் பணி நேசன் -உரை**
**வரமேதரு கழுகாசல பதிகோயிலின் வளம் நான் – மற**
**வாதே சொல்வேன் மாதே.**

**பொழிப்புரை:**

பல்வேறு வண்ணங் கொண்டதாய் அழகிய காட்சி நல்கும் மயிலை வாகனமாகக் கொண்டு எழுந்தருளிய முருகப்பெருமான், குறப் பெண்ணான வள்ளியம்மையின் திருவடிகளில் காதலால் பணிந்த அன் புடையவன் முத்தியடையும் படியான சொல்லால் ஞானவரம் தரும்பரம் பொருளான முருகன் கோயில் கொண்டிருக்கும் கழுகு மலைப் பதியின் வளத்தை நான்மறவாது கூறுகின்றேன் கேட்பாயாக பெண்ணமுதே

3. **கோபுரத் துத்தங்கத் 1 தூவி - தேவர்**
**கோபுரத் துக்கப்பால் மேவி - கண்கள்**
**கூசப்பிர காசத்தொளி மாசற்று விலாசத்தொடு**
**குலவும் புவி பலவும்**

**பொழிப்புரை:**

கழுகுமலைக் கோவிலின் கோபுரத்தில் அமைந்ததும், தங்கத்தால் ஆக்கப்பெற்றதுமான விமானக்கலசம் மேலோகத்திலுள்ள தேவர்களின் அரசனான, தேவேந்திரனின் விண்ணகரத்திற்கு அப்பால்சென்று; இமையா நாட்டத்தவர்களின் கண்கள் கூசும் படியான பிரகாசத்தோடு ஒளிவிடும் அவ்வொளி மாசு மறு அற்று நிறைந்து பல்வேறு உலகங்களுக்கும் தெரியும்படியாக அமையும்.

எடுத்துக்காட்டு:

(1) ''தோரணமலங்கு துங்க கோபுர நெருங்குகி ன்றஆள்மணி
பொன் மண்டபங்கள் ரவிபோல மாளிகை விளங்குகின்ற சோலைமலை
வந்த கந்தப்பெருமாளே''

4. **நூபுரத் துத்தொனி வெடிக்கும் - பத**
**நுண்ணிடை 2 மாதர்கள் நடிக்கும் - அங்கே**
**நுழைவாரிடு முழவோசைகள் திசைமாசுணம் -இடியோ என**
**நோக்கும் படி தாக்கும்**

**பொழிப்புரை:**

சிலம்போசை எழும்படியான சிறிய அடிகளை உடைய நொய்ந்த சிற்றிடை கொண்ட இள நங்கையர் கூத்தியற்றுவர். (நடனம் - அகக்கூத்து, புறக்கூத்து, சாந்திக்கூத்து,) மேலும் இக் கழுகுமலைக் கோயிலில் புகுந்து முருகனை வணங்குகின்றவர்கள், நுழைத்தவரால் கட்டிய மத்தள வாத்தியத்தை வாசிப்பர். (தோல்கருவி) அவ்வோசை யானது எட்டுத் திக்கையும் காவல் செய்யும் திசை நாகங்களை அவை நடுங்கிஇடியோவென அஞ்சுமாறு திகைத்து நோக்கும்படி தாக்கும். (திசை நாகங்கள் -வாசுகி, அனந்தன், தக்கன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன்.)

எடுத்துக்காட்டு:

''ஆரண நூபுரஞ் சிலம்பு அடிகள் போற்றி'' -திருவிளையாடல்
''பொய்யோ 2 எனும் இடையாளொடும் இளையானொடும் போனான்''
-கம்பராமாயணம்
''நொசித்த இடைமாதர் நோக்கிற் படதே'' -அருட்பா
''நுசிப்பிற்கு நல்லபடா அ பறை'' -திருக்குறள்

(இடியோ என்பதன் ஓகாரம் ஐயம் 2 குறித்து நின்றது)

5. **சந்நிதியில் துஜஸ் தம்பம் - விண்ணிற்**
**தாவி வருகின்ற கும்பம் -எனும்**
**சலராசியை வடிவார்பல கொடிசூடிய முடிமீதிலே**
**தாங்கும்; உயர்ந் தோங்கும்**

பொழிப்புரை:

கந்தப்பெருமான் கோயிலில் நாட்டப்பெற்ற கொடிமரக் கம்பத்தில் மேல் அமைந்த கும்பக் கலசம். விண்ணிற் சென்று பல்வகைச் சிறப்புகளுடன் அமையும், அதனுடன் கொடிச் சீலைகளும் அதன் உச்சியில் விளங்கி உயர்ந்தோங்கிக் காணப்படும்.

(கும்பராசி-சலராசி என்பது கும்பத்தில் சுக்கிரன்வரின் மழைமிகும் என்பது சோதிட நூல் முடிவு)

6. **உன்னத மாகிய இஞ்சி -பொன்னாட்டு**
**உம்பர் நகருக்கு மிஞ்சி - மிக**
**உயர்வானது பெறலால் அதில் அதிசீதள புயல் சாலவும்**
**உறங்கும்; மின்னிக் 1 கறங்கும்**

பொழிப்புரை:

கழுகுமலையின் கோயிலைச் சுற்றிலும் அமைந்து கிடக்கும் மிக உயரமான மதில், தேவருலக அமராபதி நகருக்கும் அப்பாற் சென்று மிக்க புகழ் பெற்றதாய் விளங்கும். அதில் சூல்கொண்ட மேகக் கூட்டங்கள் உறங்கிக் கிடந்து மின்னி முழங்கிப்பொழியும், (இஞ்சி - மதில்)

(கறங்குதல் -பலபொருள் ஒருசொல் - முழங்குதலைக் குறிக்கும்)

7. **அருணகிரி நாவிற் பழக்கம் - தரும்**
**அந்தத் திருப்புகழ் முழக்கம்... பல**
**அடியார்கணம் மொழிபோதினில் அமராவதி இமையோர் செவி**
**அடைக்கும்; அண்டம் உடைக்கும்**

பொழிப்புரை:

திருமுருக அனுபூதிமானான அருணகிரிநாதர் நல்ல நாவில், முருகன் திருவருளால் பயின்று வந்த திருப்புகழை. பல அடியார் இசையுடன் முழங்குவார், அதனால் உண்டான ஒலியானது தேவர் உலகில் சென்று அவர்களின் செவிகளை துளைத்து வேறு கேட்க விடாது அடைக்கும் அண்டமுகடு உடையும்படி அதிரும்.

கணப்பிரிவே அடியார் கணம் என்றது பதினெட்டு, மனிதகணத்தின் சிறப்புப் பற்றி,

**எடுத்துக்காட்டு:**

''சிரிப்பவர் 1 முடிக்கும் சினத்தவர் குடிக்கும் திருப்புகழ் நெருப்பு என்று அறிவோம் நாம் பொருப்பையும் இடிக்கும் நெருப்பையும் எரிக்கும்.-(திருப்புகழ்)

8. **கருணை முருகனைப் போற்றித் - தங்கக்**
**காவடி தோளின்மேல் ஏற்றிக் - கொழும்**
**கனல் ஏறிய மெழுகாய்வரு பவரேவரும் இகமேகதி**
**காண்பார் இன்பம் பூண்பார்.**

**பொழிப்புரை:**

கருணையே வடிவாகக் கொண்ட முருகப்பெருமானைப்போற்றி செய்து பொன்னால் செய்த காவடியை தோளின்மீது தாங்கியவர்கள், பெரு நெருப்பில்பட்ட மெழுகுபோல உருகி உருக்க பக்தியுடன் வருகின்ற நேர்ச்சைக்காரர்கள், விரத தவம் உடையவர்கள் பெருங்கதியாகிய வீட்டுலக இன்பத்தை முருகனின் திருவடியில் காட்சி அளவையால் இப்பூவுலகத்தே கண்குளிரக் காண்பார். அதனால் பெருமகிழ்ச்சியாகிய பேரின்பம் உணர்வார் என்றவாறு.

எடுத்துக்காட்டு:

''இன்பப் 1 பொருளே என் உயிரே'' -அருட்பா

''அந்தம் ஒன்றில்லா அனந்தம் பெற்றேன்'' -திருவாசகம்

## கோவில் வளம்

(இராகம்: கமாஸ்) பாட்டு - 7 (தாளம்: ரூபகம்)

1. **சென்னி குளநகர் வாசன் - தமிழ்**
**தேறும் அண்ணாமலைதாசன் - செப்புஞ்**
**செகமெச்சிய மதுரக்கவி யதனைப்புய வரையிற்புனை**
**தீரன் அயில் வீரன்**

2. **வன்ன மயில்முரு கேசன் -குற**
**வள்ளி பதம் பணி நேசன்... உரை**
**வரமேதரு கழுகாசல பதிகோயிலின் வளம் நான் -மற**
**வாதே சொல்வேன் மாதே**

3. **கோபுரத் துத்தங்கத் தூவி - தேவர்**
**கோபுரத் துக்கப்பால் மேவி... கண்கள்**
**கூசப்பிர காசத்தொளி மாசற்று விலாசத்தோடு**
**குலவும் புவி பலவும்**

4. **நூபுரத் துத்தொனி வெடிக்கும் - பத**
**நுண்ணிடை மாதர்கள் நடிக்கும் -அங்கே**
**நுழைவாரிடு முழவோசைகள் திசைமாசுணம்-இடியோஎன**
**நோக்கும் படி தாக்கும்**

5. **சந்நிதியில் துஜஸ் தம்பம் - விண்ணிற்**
**தாவி வருகின்ற கும்பம் -எனும்**
**சலராசியை வடிவார்பல கொடிசூடிய முடிமீதிலே**
**தாங்கும்; உயர்ந் தோங்கும்**

6. **உன்னத மாகிய இஞ்சி - பொன்னாட்டு**
**உம்பர் நகருக்கு மிஞ்சி - மிக**
**உயர்வானது பெறலால் அதில் அதிசீதள புயல்சாலவும்**
**உறங்கும்; மின்னிக் கறங்கும்**

7. **அருணகிரி நாவிற் பழக்கம் தரும்**
**அந்தத் திருப்புகழ் முழக்கம் -பல**
**அடியார்கணம் மொழிபோதினில்அமராவதி இமையோர்சேவி**
**அடைக்கும்; அண்டம் உடைக்கும்**

8. **கருணை முருகனைப் போற்றித் - தங்கக்**
**காவடி தோளின் மேல் எற்றிக்- கொழும்**
**கனல்ஏறிய மெழுகாய்வரு பவரேவரும் இகமேகதி**
**காண்பார் இன்பம் பூண்பார்.**

---

பாட்டு 8

## கழுகுமலை இயற்கை வளம்

(1) **பொன்னுலவு சென்னிகுள நன்னகர் அண்ணாமலைதன்**
**புந்தியில் மகிழ்ந்து நித்தம் நின்றவன்-முந்தி**
**வெந்திறல் அரக்கர்களை வென்றவன் -மயில்**
**போலஏனலின் மீதுலாவுகி 1 ராதமாதுமுன் ஏகியே, அடி**
**பூவையே உனது தஞ்சம் என்றவன் -அவள்**
**ஈயும்மாவி னையும்மென்று தின்றவன்**

பொழிப்புரை :

பொற்குவை மிகுந்து செழுமை பொங்கும் சென்னிகுளம் நகரின் பிறந்திலங்கிய அண்ணாமலைக் கவிஞருக்கு உள்ள உவப்புடன்; நாளும் அவர் உள்ளத்தில் குடிகொண்டவனாகியும், முன் காலத்தில் கொடிய வினைகளைச் செய்த திறல் மிக்க அசுரர்களை வெற்றிக் கொண்டு அருளியவனாகியும், மயில் போன்ற சாயலையுடைய குற மாதான வள்ளிநாயகி மூங்கில் அடர்ந்த

தினைப்புனத்தைக் காத்து வரும்போது அவள் முன் கிழவேடங் கொண்டு, சென்று அடி பெண்ணே உனது அடைக்கலம் என்று அருட்காமத்தால் கூறியவனாகியும், அவள் பிசைந்து தந்ததேனோடு கலந்த தினைமாவை சுவைத்து தின்றவனுமாகிய முருகன்.

எடுத்துக்காட்டு:

''பெரும் 1 பைம் புனத்தினுள் சிற்றிறேனல் காக்கின்ற பேதை
கொங்கை விரும்பும் குமரனை'' - அலங்காரம்

2 **மின்னுலவு சொன்னமுடி சென்னியணி விண்ணவர்தே**
**வேந்திரனும் சித்தர்களும் துன்னியே... கதி**
**வேண்டியே அகத்தில் அன்பு மன்னியே -பணி**
**வேலவன் கிருபாகரன் குகன் மேவிடுங்கழு காசலம் தனில்**
**மிஞ்சிய வளங்களை நான் உன்னியே... சொல்ல**
**ரஞ்சிதமாக் கேளடுவிற்பன்னியே**

**பொழிப்புரை:**

மின்னலைப் போல் ஒளிவிடும் பொன்முடி தாங்கிய தேவேந்திரனும் சித்தர்களும் நெருங்கிவந்து வீடுபேறு வேண்டி உளம் நிலைத்த பக்தி உணர்வுகொண்டு தொழும்படியான வேலவனும், அருள் நிறைந்தவனுமான முருகப்பெருமான்; கோவில் கொண்டுள்ள கழுகாசலத்தின் அளவுக்கதிகமாக விளங்கும் வளத்தை நான் ஆராய்ந்து சொல்வேனாக நீ கேட்டு இன்பமடைவாய் அறிவு நிறை பெண்ணே

3 **மூசுவண்டு வாசமண்டு காவில்மொண்டு தேனையுண்டு**
**மோகன முகாரிராகம் பாடுமே... மைய**
**லாகவே பேடையுடனே கூடுமே...அலை**
**மோதுவாரிதி நீரைவாரிவிண் மீதுலாவிய சீதளாகர**
**முகில்பெரும் சிகரமுற்றும் மூடுமே... கண்டு**
**மயிலினஞ் 1 சிறகைவிரித் தாடுமே.**

**பொழிப்புரை:**

நுகர்ச்சி உணர்வை மிகுதியும் கொண்ட வண்டானது, பல்வகை மலர்களின் மணம் நுகர்ந்து, அம்மலர்கள் மிகுதியும் உடைய பூங்காக் களில் நெருங்கித் தங்கி அப்பூக்களில் தேனை உண்டு கொண்டு அதனால் எழுந்த மகிழ்ச்சிப்பெருக்கால் மோகன முகாரிராகம் பாடும். பின்பு காம மயக்கத்தால் பெட்டை வண்டைத் தழுவிக்கொள்ளும். திரைகளை மிகுதியாகக் கொண்ட கடலிடத்தே, நீரை வாரிக்கொண்டு

போய் விண்ணிலே சஞ்சரிக்கும் மேகக்கூட்டங்கள்; கருப்பமுற்று குளிர்ச்சி கொண்ட மஞ்சுக் கைகளால் உயர்ந்த மலை உச்சியினை முழுவதுமாகத் தழுவி மறைக்கும். இதனைக் கண்டு கார் காலமென நினைத்து மயிலினங்கள் தனக்கு இனிய கலாபத்தை விரித்து ஆடுதலைச் செய்யும்.

இப்பாட்டில் முதலடி வண்டு, மண்டு, மொண்டு, வுண்டு என இணையியைபு தொடை முற்றவந்து செய்யுள்இன்பம் பயத்தது.

எடுத்துக்காட்டு:

''தண்டலை 1 மயில்களாடத் தாமரை விளக்கந் தங்கக்
கொண்டல் கண் முழவினேங்கக் குவளை கண்விழித்து நோக்கத்
தெண்டிரை எழினிகாட்டத் தேம்பிழி மகரயாழின்
வண்டுகள் இனிதுபாட மருதம் வீற்றிருந்த மாதோ''

-கம்பராமாயணம்

''2 கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத்தும்பி'' -குறுந்தொகை
''மஞ்ஞை துங்கிசைவண்டும் தேனும் சுரும்பொடுஞிமிரும் பாடத்
தேங்கமிழ்சோலை தோறும் சிறை விரித்தாடும் மாதோ'' -நைடதம்
''மோகன ராகம் மயங்கவைக்கும் இன்ப இசை;
முகாரி ராகம் அழுகைக் குரிய இரங்கல் இசை
இசை இரண்டும் சேர்ந்தால் இன்ப அழுகை.
பண்ணளவிங்ல் குறிஞ்சியும் பஞ்சரமுமாம்''
(''நகையே அழுகை'' என்ற தொல்காப்பிய வழியதாய் மெய்ப்பாடாகும்)

**4 தேசுகொண்ட பாரதந்த வீரதும்பி ராசி அண்டர்**
**தேவதாரு வைக்கரத்தால் பிடிக்குமே - சுற்று**
**மேவிய கிளையைவளைத் தொடிக்குமே - ஒளிர்**
**சேயந்திர னோடு ரஞ்சுபலாமரங்களிலே நெருங்கிய**
**தீங்கனி மதுரசத்தை வடிக்குமே மந்தி**
**பாங்கில் நின்றதனை அள்ளிக் குடிக்குமே**

**பொழிப்புரை:**

வெண்மை ஒளிமிகுந்து வலிமைகொண்டு இருக்கம்மிக்கு விளங்கும் கொம்புகளை, தாங்கும் வீரமிக்க களிற்று யானைக்கூட்டம் தேவருலகத்துக் கருப்பகத்தருவை தனது நீண்ட துதிக்கையால் பிடிக்கும். பக்கத்தில் நிறைந்துள்ள கவடு கோடுகளை வளைத்து ஒடிக்கும் சேய்மையில் உள்ள கதிர்விடும் திங்களுடன் உராயும் அளவு நீண்டுயுர்ந்த பலாமரங்களில் விளைந்து வெடித்த பலாக்கனிகளின்

சாரானது வெள்ளமெனத் திரண்டோடும், அதன்பக்கத்தில் நின்று மந்திக்குரங்கு தாகத்திற்கு அப்பழச் சாற்றினை அள்ளிக்குடிக்கும். மந்தியானது பாங்கினின்று என்பதால் வெள்ளம் வருவிக்கப்பட்டது.

5 **அந்தரம் உருவி வளர்ந் திந்திரன் உலகு கடந்து**
**அப்புறம் போய் நின்றிசையும் சந்தன - மர**
**மப்புறம் இலாதுகையால் வந்தன -எங்கள்**
**1 ஆறுமாமுக நாதனுக்கிடு மாறுபோல விசாலமுற்றகொம்**
**பத்தனையும் நின்றுதலை சாய்க்குமே... அண்டப்**
**பித்திகை தனிலும்சென்று தேய்க்குமே.**

**பொழிப்புரை:**

விண்ணை ஊடுருவி வளர்ந்து இந்திரலோகம் கடந்து அதற்கப்புறமும் சென்று அசைதலைச் செய்த சந்தனமரக் கிளைகளானது, அதற்கு அப்புறம் போவதற்கு இடம் இல்லாமையால் திரும்பி வந்து வளைந்து, நின்று விரிந்த கிளைகள், எம்பெருமானாகிய ஆறுமுகம் கொண்ட கந்தப்பெருமானுக்குத்தலை வணங்குதலை செய்யும் படியாக அமையும். அக்கிளைகள் அண்டச்சுவர்களில் சென்றுதேய்க்கும். (தற்குறிப்பேற்ற வணியின் பால்படும்.)

முருகனுக்கு சந்தனம் இடுமறு அண்டச்சுவரில் தேய்க்கும் என்பதாம் எடுத்துக்காட்டு:

''மாயிரு 1ஞாலம் மரு இன்றி விளங்கப் பல்கதிர் விரிந்தன்று ஒரு முகம், ஒருமுகம் ஆர்வலர் ஏத்த அமர்ந்து இனிது ஒழுகிக் காதலில் உவந்து வரங்கொடுத்தன்றே ஒருமுகம் மந்திர விதியின் மரபுளி வழாது அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே''

''ஒருமுகம் எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித்
திங்கள் போலகிசை விளங்குமே
ஒருமுகம் செருநர் தேய்த்து செல்சமம் முருக்கிக்
கறுவுகொள் நெஞ்சமோடு களம் வெட் டன்றே
ஒருமுகம் குறவர் மடமகள் கொடிபோல் நொசுப்பின்
மடவரல் வள்ளியோடு நகைபுரிந்தன்றே'' -முருகு

''ஆறுமுக மானபொருள் நீ அருளல் வேண்டும் -திருப்புகழ்

6. **கந்தரம் தொறும்கிடந்து கந்தரம் பயந்தொதுங்கக்**
**கர்ச்சனை புரியுந் திறல் சிங்கமே - நெஞ்சில்**
**அச்சமுற விண்ணுறைமா தங்கமே... தடங்**
**காவிலேசில தாவிலேவளர் மாவிறால் நடு வேகிராதர்கள்**
**கார் 1 முகம் எயும் கணைகள் ஏறுமே - அதில்**
**வார்மதுவால் வாரியுவர் மாறுமே**

**பொழிப்புரை:**

மலைக் குகைகள் தோறும் கிடந்து கர்ச்சனை செய்கின்ற திண்ணிய சிங்கத்தின் பேரொலியால், யானைக் கூட்டங்கள் பயந்து ஒதுங்கும் படியாக அமையும். அவ் ஒலியால் அச்சமுற்றுக் கதிகலங்கி பதி வெறுத்து நிற்கும் தேவருலக ஐரவதயானையுமாகும். பெரும் கானகத்தில் சில ஒதுக்கிடங்களில் உயர்ந்து நீண்ட மரங்களில் தொங்கிக் கொண்டிருக்கும் பருத்த தேன்கூட்டில் தேன் எடுத்தல் பொருட்டு மூங்கிற் குழாய்களை கையில் கொண்ட குறவர்கள் வில்லால் அம்புகளை மேல்நோக்கி ஏவுவதால் அக்கணைகள் நடுவே பாயத், தேன்கூடு கிழிந்து தேன் வழிந்து ஆறாய் பாய்ந்து கடலில் கலக்கும். அதனால் கடல் நீர் உப்பு நீங்கி தித்திக்கும்.

(கார்-காலத்திற்கும் மேகத்திற்கும் ஆகிவருவதால்
இருமடியாகுபெயர்)

எடுத்துக்காட்டு:

''தண் கமழ் அலர் இறால் 2 சிதைய நண்பல் ஆசினி
முது சுளை கலவா மீமிசை''

-முருகு

7. **கால வடிவேல் நெடிய வாள் கொடிய நாகம் உமிழ்**
**காரிபிணை வாரிகணை பானலே - அன்ன**
**கூர்நயன வேடமின்னார் ஏனலே - காக்கும்**
**காலை மேலேறி போதுவார்கவ ணோடுமாமணி தேசுவீசவே**
**கதிரவன் தனதுமுகம் சுழிக்குமே - அவன்**
**குதிரையும் கண்ணைச் சுருக்கி விழிக்குமே.**

**பொழிப்புரை:**

கூற்றம், வடிவேல், நெடியவாள், நாகம் உமிழ் நஞ்சு, மான், கடல், கணை, குவளை மலர் இவைகளை ஒத்த கூரிய கண்களை உடைய மின்னலை ஒத்த வேடர் குலப்பெண்கள் தினைப்புனத்தில் பரணில் இருந்து காவல் காக்கும் காலை; கவணில் மாணிக்கக் கற்களை வீசி மேலெறியும்பொழுது அம்மாணிக்கக் கற்களின் பிரகாசத்தினால் சூரியனும் முகம் சுழிப்பான் அவன் குதிரைகளும் கண்ணை சுருக்கி விழித்து இமைத்தலைச் செய்யும்.

குதிரை, கண், என்பது சாதி ஒருமை பெற்றன.
(இது உயர்வு நவிற்சியின் பால் படும்.)
இலக்கணம்;

வேடமின்னார் - வேட்டுவகுல மின்னலை ஒத்த பெண்க்ள எனவிரிய உவமையாயிற்று

8. **ஒலமலி கோலநீல வேலைசூழும் ஞாலமீதில்**
**உற்றவர் இன்பத் துடனே வானமே -செல்ல**
**வைத்தபல சித்திரசோ பானமே -என்ன**
**ஓங்குகோங்ககில் நாங்கிலாங்கலி பாங்கு நீங்கரு வேங்கைபூங்கழை**
**ஒன்றொடொன்று வம்பு கொண்டு நீளுமே - கோள்கள்**
**சென்றுசென்று நின்று நின்று மீளுமே,**

**பொழிப்புரை:**

ஓசை நிறைந்து மலிந்த அலங்காரமும் நீல நிறமும் நிலைத்த கடல் சூழ்ந்த உலகத்தில் வாழ்தலைச் செய்பவர். இன்பம் துய்ப்பதற்காக செய்யப்பட்ட சித்திர வேலைப்பாடடங்கிய படிக்கட்டு களுடன் காணப்படும் வீடுகளின்; தாழ்வாரங்களை ஒத்து அகக்காள் கொண்டு உயர்ந்த கோங்கு, அகில், நாங்கு, காந்தள், முதலிய மரங்களுடன் வேங்கை மரங்களும், பூக்கள் நிறைந்து புராக்காள் கொண்ட மூங்கில் கிளைகளும் பக்கத்தில் நெருங்கி ஒன்றுடன் ஒன்று முந்திக் கொண்டு நீள்வதினால் கிரகங்கள் போக்குவரத்து தடைபட்டு மீளும்.

(தெய்வம் உணா மாமரம் புள் பறை செய்தியாழின் தொகுதிய தொகைஇ என்ற தொல்காப்பியத்திற்கிணங்க, குறிஞ்சிக் கருப்பொருள் முழுதும் பாடினார்)

## மலைவளம்

(இராகம்: இந்துஸ்தான் காபி) பாட்டு - 8 (தாளம்: சாப்பு)

1. **பொன்னுலவு சென்னிகுள நன்னகர் அண்ணாமலைதன்**
**புந்தியில் மகிழ்ந்துநித்தம் நின்றவன் - முந்தி**
**வெந்திறல் அரக்கர்களை வென்றவன் - மயில்**
**போல ஏனலின் மீதுலாவுகி 1 ராதமாதுமுன் ஏகியே, அடி**
**பூவையே உனது தஞ்சம் என்றவன் - அவள்**
**ஈயும்மாவி னையும்மென்று தின்றவன்.**

2. **மின்னுலவு சொன்னமுடி சென்னியணி விண்ணவர்தே**
**வேந்திரனும் சித்தர்களும் துன்னியே-கதி**
**வேண்டியே அகத்திலன்பு மன்னியே-பணி**
**வேலவன் கிரு பாகரன்குகன் மேவிடுங்கழு காசலம்தனில்**
**மிஞ்சிய வளங்களை நான் உன்னியே-சொல்ல**
**ரஞ்சிதமாக் கேளடுவிற் பன்னியே**

3. மூசுவண்டு வாசமண்டு காவில்மொண்டு தேனையுண்டு
மோகன முகாரிராகம் பாடுமே-மைய
லாகவே பேடையுடனே கூடுமே-அலை
மோதுவாரிதி நீரைவாரிவிண் மீதுலாவிய சீதளாகர
முகில்பெரும் சிகரமுற்றும் மூடுமே...கண்டு
மயிலினம் 1 சிறகைவிரித் தாடுமே.

4. தேசுகொண்ட பாரதந்த வீரதும்பி ராசி அண்டர்
தேவதாரு வைக்கரத்தால் பிடிக்குமே-சுற்று
மேவிய கிளையைவளைத் தொடிக்குமே-ஒளிர்
சேயசந்திர னோடுரஞ்சு பலாமரங்களிலே நெருங்கிய
தீங்கனி மதுரசத்தை வடிக்குமே-மந்தி
பாங்கில் நின்றதனை அள்ளிக்குடிக்குமே

5. அந்தரம் உருவி வளர்ந் திந்திரன் உலகுகடந்து
அப்புறம்போய் நின்றசையும் சந்தன-மர
மப்புறம் இலாதுகையால் வந்தன-எங்கள்
1ஆறுமாமுக நாதனுக்கிடு மாறுபோல விசாலமுற்றகொம்
பத்தனையும் நின்றுதலை சாய்க்குமே - அண்டப்
பித்திகை தனிலும்சென்று தேய்க்குமே.

6. கந்தரம் தொறும்கிடந்து கந்தரம் பயந்தொதுங்கக்
கர்ச்சனை புரியும்திறல் சிங்கமே-நெஞ்சில்
அச்சமுற விண்ணுறைமா தங்கமே-தடங்
காவிலேசில தாவிலேவளர் மாவிறால்நடு வேகிராதர்கள்
கார் 1முகம் எயும்கணைகள் ஏறுமே-அதில்
வார் மதுவால் வாரி உவர் மாறுமே.

7. கால, வடிவேல் நெடியவாள் கொடிய நாகம் உமிழ்
காரிபிணை வாரிகணை பானலே-அன்ன
கூர்நயன வேடமின்னார் ஏனலே... காக்கும்
காலைமேலேறி போதுவார்கவ ணோடுமாமணி தேசுவீசவே
கதிரவன் தனது முகஞ்சுழிக்குமே... அவன்
குதிரையுங் கண்ணைச் சுருக்கி விழிக்குமே.

8. ஓலமலி கோலநீல வேலைசூழும் ஞாலமீதில்
உற்றவர் இன்பத்துடனே வானமே-செல்ல
வைத்தபல சித்திரசோ பானமே-என்ன
ஓங்குகோங்ககில் நாங்கிலாங்கலி பாங்குநிங்கரு வேங்கைப்பூங்கழை
ஒன்றொடொன்று வம்புகொண்டு நீளுமே... கோள்கள்
சென்றுசென்று நின்றுநின்று மீளுதமே

## வாவியின் வளம்

பாட்டு - 9 தீர்த்த மகிமை

1. **புள்ளிக் கலாபமயில் பாகன் - சக்தி**
**புதல்வ னானகன யோகன்... மலை**
**போலத்தான் திரண்ட கோலப் பன்னிரண்டு**
**வாகன் நல் வி1வேகன்**

**பொழிப்புரை :**

மங்கலப் புள்ளிகளைக் கொண்ட தோகை நிறைந்த மயிலை நடாத்துபவனாகவும், உமையவளுக்கு ஆசைக் குமாரனாகிய முருகன் அளவிடப்படாத பாக்கிய யோகத்தைக் கொண்டவனாகவும், மலை எனத் திரண்டு திண்ணி தான பேரழகு கொண்ட பன்னிரு வெற்றித் தோள்களையுடையவனாகவும், எல்லாவிதமான ஞானபரமார்த் தனாகவும் விளங்குபவனாவான்.

எடுத்துக்காட்டு :

''அறிவுள் அறிவை! அறியும் அவரும் அறியவரிய பிரம்மமே''
-முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்

2. **வள்ளிக் கிசைந்தமுரு கேசன்... அண்ணா**
**மலைக்கவி ராசன் மகிழ்நேசன்-என்றும்**
**வாழுங் கழுகுமலை வாவிவளம் சொல்வேன்**
**மாதே கேள்இப் போதே**

**பொழிப்புரை:**

வள்ளி நாயகிக்கு ஒத்த அழகு நலம் பொருந்திய முருகன் அண்ணாமலையாகிய கவியரசு மன மகிழும்படி அருள் நட்புக் கொண்டவன். எதுபோதும் நிலைத்துத் தங்கும் கழுகுமலைப்பதியின் வாவியின் பெருமையையும், அதன் செழிப்பையும் சொல்லுகின்றேன் மாதே கேட்பாயாக இப்பொழுது.

3. **வெள்ளை 1 நரைகொத்தும் வேளை...தப்பி**
**மேற்கொண்டு எழுந்துசின வாளை-கதி**
**மீறிப் பாயும்தொறும் கீறிச் சாயும்தென்னம்**
**பாளை யுடன் தாழை.**

**பொழிப்புரை:**

வெண்மை நிறம் பொருந்திய செங்கால் நாரை, தனது இறைக்காக கூரிய அலகால் கொத்தும்பொழுது; தவறித் தண்ணீரை

விட்டுச் சினத்துடன் எழுந்த வாளைமீன் மருண்டு தன்போக்கு; திசைமாரி வேகமாய்ப் பாய்ந்து சாடுவதால், கரைகளில் உள்ள தென்னைமரத்தின் பாளை மடலும், தாழைகளும் உடைபட்டுச் சாய்ந்து விழும்.

எடுத்துக்காட்டு:

''நாராய் நாராய் 1 செங்கால் நாராய்
பனைபடு கிழங்கு பிளந்தன்ன பவளக் கூர்வாய்ச்
செங்கால் நாராய் ...சத்திமுத்துப்புலவர்

(வாவி என்பதால் கரையில் உள்ள மரங்கள் என்பது வருவிக்கப்பட்டது)

**4. தெள்ளும் பிள்ளை யன்னப் பேடும் - இளஞ்**
**செவ லானதுவும் ஊடும் - பின்பு**
**தேமலர்த் தவிசில் காமம் முற்றவந்து**
**கூடும் உற வாடும்**

**பொழிப்புரை:**

வெண்மையான யெவ்வனம் பொருந்திய இளம் பெட்டை அன்னப்பறவையை, அன்பு மிகுதியால் இளஞ் சேவல் அன்னம் தழுவ வந்து ஊடிக்கொள்ளும், பின்பு காமவேளையில் இனிய தேன் துளும்பும் தாமரை தவிசின் மேல் காம மிகுதியுடன் வந்து உறவு கொண்டு இன்புறும்

**5. மின்னிக் குலவிமதி மானும்-வரி**
**வெள்ளைப் பணிலராசி தானும்-மட**
**மின்னார் விழிகளென்ன மின்னு கெண்டை முத்தம்**
**ஈனும் மட மானும்.**

**பொழிப்புரை:**

உலவுகின்ற திங்களைப்போன்ற வரிகளைக் கொண்ட சங்குக் கூட்டமும், மடப்பம் பொருந்திய மங்கையர் விழிகளைப் போன்று மின்னுகின்ற கெண்டை மீன்கூட்டமும், ஒளியுடன் கூடிய முத்துக்களை ஈன்று அவ்வாவியினுள் மிகுந்து காணப்படும்.

இலக்கணம்;

மடமின்னார் விழிகளென்ன மின்னு கெண்டை - என விரிவதால் உருவகம்

**6. வன்னத் தாமரையைக் கண்டு - வாயில்**
**மதுர ராகம்பாடிக் கொண்டு - மதி**
**மயங்கி பேட்டினுடன் முயங்கியே கிடக்கும்**
**வண்டு கள்ளை உண்டு.**

**பொழிப்புரை:**

செவ்வண்ணம் பொருந்திய தாமரை மலரைக் கண்ட உடன், வாயினால் இனிமையான ராகத்தை இசைத்துக்கொண்டு மதி மயங்கி, தாமரை இதழில் பெண் வண்டுடன் தழுவிக்கிடக்கின்ற ஆண் வண்டானது; தேனை மிகுதியாகக் குடித்தமையால் மதி மயங்கிய தென்க.

7. **அந்தரத்து பெண்கள் கூடி.... அங்கு**
**அன்பாகவே விளை யாடி - செல்லும்**
**அந்நல்லார் நடக்கும் நன் னடைக்குருகி**
**அன்னஞ்செல்லும் பின்னம்**

**பொழிப்புரை:**

மேலுலகத்துத் தேவ கன்னியர் கூடி இவ்வாவியில் வந்து அன்புடன் நீர் விளையாடி, பின்பு மேலுலகத்துக்கு நடந்து செல்லுவர்; அந்த நல்ல நடைக்கு உருகிய அன்னங்கள் அந்நடையைக் கற்றுக் கொள்வதற்காக வேண்டி அவர்கள் பின்பே சென்று பயிலும். நீர் வருவிக்கப்பட்டது. அம் அழகிய தரத்துப் பெண்கள் கூடி எனவுங் காண்க. அப்பெண்களின் நடைக்கு நாணி அன்னம் பின் போயிற்று என்பதுமாம்.

''சேரல் மட1வன்னம் சேரல் நடை ஒவ்வாய்'' –சிலப்பதிகாரம்

8. **மந்த மேதி உள்ளே எட்டும்... சினை**
**வரி வராலெழுந்து முட்டும்-போது**
**மடி சுரந்து கன்று தனை நினைந்துகண்ட**
**மட்டும் பாலைக் கொட்டும்**

**பொழிப்புரை:**

மந்த இயல்பு கொண்ட எருமை மாட்டுமந்தை அந்த வாவியினுள் ஆழமான பகுதிக்குச்செல்லும், அங்கு வரிகளைக் கொண்ட சினை வரால்கள் எழுந்து முட்டும், அதனால் அம்மாடுகள் பால் மடி சுரந்து தன் தன் கன்றை நினைத்து மிகுதியாகப் பாலைச் சொரிந்துவிடும்.

(மேதி-வரால் சாதி யொருமை கொண்டது)

## வாவியின் வளம்

(இராகம்: ஆனந்த பைரவி) பாட்டு - 9 (தாளம்: அடதாளம்)

1. புள்ளிக் கலாபமயில் பாகன் - சக்தி
புதல்வ னானகன யோகன்... மலை
போலத்தான் திரண்ட கோலப் பன்னிரண்டு
வாகன் நல் வி1வேகன்

2. வள்ளிக் கிசைந்த முரு கேசன்... அண்ணா
மலைக்கவி ராசன் மகிழ்நேசன்-என்றும்
வாழுங் கழுகுமலை வாவிவளம் சொல்வேன்
மாதே கேள்இப் போதே

3. வெள்ளை 1 நரைகொத்தும் வேளை -தப்பி
மேற்கொண்டு எழுந்து சின வாளை-கதி
மீறிப் பாயும் தொறும் கீறிச் சாயும்தென்னம்
பாளை யுடன் தாழை.

4. தெள்ளும் பிள்ளையன்னப் பேடும்-இளஞ்
செவ லானதுவும் ஊடும்-பின்பு
தேமலர்த் தவிசில் காமம் முற்றவந்து
கூடும் உற வாடும்

5. மின்னிக் குலவிமதி மானும்-வரி
வெள்ளைப் பணிலராசி தானும்-மட
மின்னார் விழிகளென்ன மின்னு கெண்டை முத்தம்
ஈனும் மட மானும்.

6. வன்னத் தாமரையைக் கண்டு-வாயில்
மதுர ராகம்பாடிக் கொண்டு-மதி
மயங்கி பேட்டினுடன் முயங்கியே கிடக்கும்
வண்டு கள்ளை உண்டு.

7. அந்தரத்து பெண்கள் கூடி....அங்கு
அன்பாகவே விளை யாடி-செல்லும்
அந்நல்லார் நடக்கும் நன் னடைக்குருகி
அன்னஞ்செல்லும் பின்னம்

8. மந்த மேதி உள்ளே எட்டும்...சினை
வரி வராலெழுந்து முட்டும் -போது
மடி சுரந்து கன்று தனை நினைந்துகண்ட
மட்டும் பாலைக் கொட்டும்.

## சோலை வளம்

பாட்டு - 10

1. **கன்னல் சூழ்பழ னம்புடை சூழ்கழு**
**கழுகாசலந்தனில் வாழ்பிர தாபனே! கன**
**வாசம் எங்குங் மகிழ்கின்ற தீபனே...வளர்**
**காதலோடிரு போதிலும்பல**
**போதினால் பணி வார்மனத்துறை**
**காரிருட்குவை நீக்கிய தீபனே-?அதி**
**சூ1ரபத்மனைத் தாக்கிய கோபனே**

**பொழிப்புரை:**

கரும்புத்தோட்டம் மிகுந்தும், வயல்களால் சூழப்பட்டும் விளங்கும் கழுகுமலைத் தலத்தில் வாழ்கின்ற கீர்த்தி நிலைப் பெருக்கமுடைய கந்தபெருமானே! செழுமை மிகுந்தப் பக்திப் பரவசத் துடன் இரவு, பகல் இருபோதும் பற்பல மலர்களால் வணங்குகின்றவர் களுக்கு மனதில் உறைந்து கிடக்கின்ற அறியாமையிருளை விலக்கி: அருள் ஞானஒளி காணும்படியான அருள்பாலிக்கும் திவ்ய பிரகாசம் நிறைந்தவனே? அதிபாதகம் செய்த சூரபத்மனை இருகூறு படும்படி தாக்கிய மிகுந்த கோபகினி உடையவனே!

எடுத்துக்காட்டு:

''சூரனை1 வெட்டி நிணக்குடலைக் கொடி வாரண
மெச்ச அளித்த அயிற்குகன்'' -திருப்புகழ்

பத்மாசூரன்-ஆணவம், சிங்கமுகன்-கன்மம்,யானைமுகன்-மாயை உயிர் தழுவிய முக்குற்றங்கள் என்பர் மேலோர்

2. **சென்னி மாநகர் வாழும் அண்ணாமலை**
**செப்பு செந்தமிட் கதி நேசனே-சிவ**
**சுப்ரமண்யன் எனும் பிரகாசனே-கொடுஞ்**
**சிந்தைநைந்து புலம்பிநின் திரு**
**மந்1திரந்தனில் வந்தடைந்துனைச்**
**சேவிக்கம் குணம் என்றெனக்காகுமோ?...மிகு**
**பாவிக்குந்துயர் எப்படிப் போகுமோ?**

**பொழிப்புரை:**

சென்னிகுளம் நகரில் பிறந்து வாழ்ந்த அண்ணாமலைக் கவியானவர் சொல்லுகின்ற செந்தமிழுக்கு உதவி செய்யும் நேய உரு உடையோனே! சிவசுப்பிரமணியன் என்ற புகழ்மிக்கோனே! கொடுமை

பொருந்திய எந்தன் மனமானது நொந்து புலம்பி சரவண பவா என்ற உனது திருமந்திரத்தைச் சொல்லி திருக்கோயிலில் தஞ்சமடைந் தேன். எனக்கு உன்னை வணங்கும் சத்துவ குணத்தை ஆகுமாறு செய்து துயர் துடைப்பாயோ. (உடல் தழுவிய தோசம் மூன்று அவை - சத்துவம், இரசதம், **தாமதம்** என்ற குணம்)

எடுத்துக்காட்டு:

''சர1ண கமலாலயத்தை அரநிமிஷ நேரமட்டும்
தவமுறைத் தியானம்வைக்க அறியாத சடகசட1மூடமட்டி
பவ வினையிலே சனித்த தமியன்மிக்க ஏழை'' -(திருப்புகழ்)

3. **வந்த வார்க்குப் 1 பழம்புளிக் காடியே**
**தந்திடச் சகியார் தமைத் மேடியே.. பிர**
**பந்தம்எத்தனை எத்தனை கோடியே-குலை**
**வாழையின் பழமோ கனித்திடும்**
**மாழையின் கனியோ எனும்படி**
**மதுரிதம் பெறவே நிதம் பாடியே... ஒரு**
**விதப் பரிசும் பெறாதுளம் 2 வாடியே**

**பொழிப்புரை:**

பசித்து வந்தோர்க்கு புளித்த பழங்கஞ்சிதண்ணீரையே கொடுக்கினும் வெதும்புவார் தமைதேடி: உலக பந்தபாசங்களைச் சொல்லி பிரபந்தபாடல் கோடி கோடியாகத் தொடர்புகொண்டு அவரைப் புகழ்ந்து, வாழைக்கனி போன்றோர் என்றும், மாங்கனி போன்றோர் என்றும். (மாழை-மா) எட்டிக் கனி என்பதை மறைத்து இனிய நயத்தோடு பாடி: அவரிடம் ஒருவித பரிசும் பெறமுடியாது மன வாட்டங்கொண்டேன்.

எடுத்துக்காட்டு:

''அறிவிலாப்2 பித்தர் உந்தன் அடிதொழா கெட்ட வஞ்சர்
அசடர் பேய்க்கர்த்தர் நன்றி அறியாத அவலர்மேல்
சொற்கள் கொண்டு கவிகளாகப் புனைந்து அவரை
வாழ்த்தித் திரிந்து பொருள் தேடி''
-திருப்புகழ்

''பசியோடே 1 வந்தோரைப் பார்க்கவும் நேரீர்'' -திரு அருட்பா

''அற்றார் அழிபசி தீர்த்தல் அஃது-ஒருவன்
பெற்றான் பொருள் வைப்புளி -குறள்

''பசித்தோர் முகம் பார்'' -பட்டினத்தார்

''புதிதான நூறொடு நான்மணி மாலைப்பிரபந்தக்
கோலைவயுல மடல் கூறிய முந்தித்
தோமுறு காளையர் வாசல் தோறும் புக்கலமாரும்
காலனை, வீணனை''அருணகிரியார்
கொஞ்சோலை மீதெழுதுத் யாக கவி பாரும் உல
கஞ்சாத வீரவிஜயா கர்ண உதராவென
உஞ்சொலி நிளவி பாகரகவி பாடுதொழில் உழலாமல்''
–சிதம்பரக்கவிராயர்

**4. வெந்தரைக்குள் வெடிப்பிடை 1 பாலையே**
**சிந்துபித்தரைப் போல்வெறும் வேலையே-செய்யும்**
**வீணன் நான் விளங்குன் தண்டைக்2 காலையே- எந்த**
**வேளையுந்துதி கூறவும், துயர்**
**நீளும் வெம்பவம் மாறவும்; புரி**
**வில்வவேணிசேர் கற்பக வாலையே...தரு**
**செல்வனேஎனும் கற்பகச் சோலையே.**

**பொழிப்புரை:**

விழல் நில விப்பிடை பாலைக் கொட்டகின்ற புத்திகெட்ட வரைப் போன்று வீணனேன்.ஆனால் நான் உன் புகழ் மிக்க வீரத்தண்டையணியும் திருப்பொற்பாத தாமரையை எந்த நேரமும் துதிப் பாடல்களால் புகழ்ந்து பாடியதால், துயர் தருகின்ற நீண்ட பாவங்கள் மாறும்படியான அருள் புரிவாயாக வில்வத்தோடு கூடிய சடைக்காட்டைக் கொண்ட சிவனைச் சேர்கின்ற கற்பகாம்பிகை ஈன்றருளிய முருகனே.

எடுத்துக்காட்டு:

''1 அங்கணத் தூழுக்க அமிழ் தற்றே'' –குறள்

''தண்டையும் கிண் கிணியும் அணியும் புண்டரீகம் மறவேனே'' -திருப்புகழ்

''நாயேன் பல நாளும் நினைப்பின்றி மனத்துன்னை பேயாய்த்
திரிந்து ஏய்த்தேன் பெறலாகா அருள் பெற்றேன்'' -தேவாரம்

## சோலைவளம்

பாட்டு - 10

1. கன்னல் சூழ்பழ னம்புடை சூழ்கழு
காசலந்தனில் வாழ்பிர தாபனே! கன
வாசம் எங்குங் மகிழ்கின்ற தீபனே...வளர்
காதலோடிரு போதிலும்பல
போதினால் பணி வார்மனத்துறை
காரிருட்குவை நீக்கிய தீபனே- அதி
சூரபத்மனைத் தாக்கிய கோபனே

2. சென்னி மாநகர் வாழும் அண்ணாமலை
செப்பு செந்தமிட் கதி நேசனே-சிவ
சுப்ரமண்யன் எனும் பிரகாசனே-கொடுஞ்
சிந்தைநைந்து புலம்பிநின் திரு
மந்திரந்தனில் வந்தடைந்துனைச்
சேவிக்கம் குணம் என்றெனக்காகுமோ?...மிகு
பாவிக்குந்துயர் எப்படிப் போகுமோ?

3. வந்த வார்க்குப் பழம்புளிக் காடியே
தந்திடச் சகியார் தமைத் தேடியே.. பிர
பந்தம்எத்தனை எத்தனை கோடியே-குலை
வாழையின் பழமோ கனித்திடும்
மாழையின் கனியோ எனும்படி
மதுரிதம் பெறவே நிதம் பாடியே... ஒரு
விதப் பரிசும் பெறாதுளம் வாடியே

4. வெந்தரைக்குள் வெடிப்பிடை பாலையே
சிந்துபித்தரைப் போல்வெறும் வேலையே-செய்யும்
வீணன் நான் விளங்குன் தண்டைக் காலையே- எந்த
வேளையுந்துதி கூறவும், துயர்
நீளும் வெம்பவம் மாறவும்; புரி
வில்வவேணிசேர் கற்பக வாலையே...தரு
செல்வனேஎனும் கற்பகச் சோலையே.

# களவியல்

## அகப்பொருளோடு அமைந்த சிந்துப் பாடல்கள்

**பொழிப்புரை:**

அகப்பொருள், புறப்பொருள் என்ற இரண்டில் பாடாண்டிணை கைக்கிளை இரண்டும் அகப்பொருள் திணைகளாக இடம் பெறினும், ஒருவரே மயங்கிக் கூறும் கைக்கிளையும், பொருந்தாக்காமங் கொண்டும் பிறரைப் புகழ்ந்து பாடுகின்ற பெருந்திணையும் புறப்பொருளில் அடங்குவன. அவை இந்நூல் முற்பகுதியிலும் பொதுவியல் பகுதியிலும் பாயிரவியல், இயற்கை வளம்கூறும் மலை, கடல், நாடு, வளநகர், பருவம் கோயில் முதலானவற்றுள் அடக்கிக் கூறிய நூலாசிரியர். இது போது அன்பின் ஐந்திணையான அகப்பொருள் மட்டிலும் கூறினார் என்க. அஃது பதினாறு ஆண்டைக் கொண்டு இளமை வளம், எழிலழகு, செல்வச் செழுமை, அறிவுச்செறிவு, வீரத்திறல், கருணைப்பொழிவு, நண்பின் மாண்பு, மனிதப் பண்பு, அறஞ்சார் கொள்கை, அருள் தவநோக்கு ஆகியவை கொண்ட தலைவனும்... அழகொழுகப் பன்னிரண்டு அகவை கொண்ட மேற்கூறிய தலைவனுக்கு தக்க தலைமகளாய் தனிப்போந்து ஒரு நெறி எதிர்கண்டு, தெய்வத்தாலும், தலைவியாலும் அன்பின் ஐந்திணை தழுவிக் கூடுகின்ற கூட்டத்தின் பால் பிறக்கும் அத்துணை நிகழ்ச்சிகளும் அகத்தே நிகழப்பட்டு காணப்படாததொன்றாய், எதுபோதும் உள்ளத்துணர்வே பெறுதலின். இது அகமென ஆகுபெயர் பெற்றது.இங்ஙனம் அகத்திணைக்கு துறைபல காணப்படினும் தலைமகளைத் தலைமகன் காணலும் ஐயுறலும், தெளிதலும் குறிப்பறிதலும், அடங்கத் தெய்வப்புணர்ச்சி கூறுமுகமாக அமைந்தவற்றிற்கு எடுத்துக்காட்டுகள்.

''பிறப்பே குடிமை ஆண்ட யாண்டோடு இருது நிறுத்த காமவாயில் நிறையே அருளே உணர்வொடு திருவென

முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே'' என்பதால் ஒப்புமையும்.

''திருவளர் தாமரை சீர்வளர்
காவிகள் ஈசர் தில்லை
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங்
காந்தள் கொண்டு ஓங்கு தெய்வ

மருவளர் மாலையோர் வல்லியின்
ஒல்கிஅன நடை வாய்ந்து
உருவளர் காமன் தன் வென்றிக்
கொடிபோன் றொளிர்கின்றதே'' என்ற
திருக்கோவையாராலும்

''தாம் வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி'' என்ற வள்ளுவத்தாலும்:

''புயலே சுமந்து பிறையே அணிந்த பொருவிலுடன்
கயலே மணந்த கமலமலர்ந்தொரு கற்பகத்தின்
அயலே பசும் பொற்கொடி நின்றதால் வெள்ளை யன்னஞ் சென்னல்
வயலே தடம் பொய்கைசூழ் தஞ்ச வாணன் மலையத்திலே''
என்ற தஞ்சை வாணன்
கோவையாலும்

''கற்பகத்தின் பூங்கொம்போ காமன் தன் பொற்சிலையோ
விற்குவளை மலர்மதிபூத்த விரற்கொடியோ
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ
அற்புதமோ சிவனருளோ என்ற திசயித்தார்''

என்ற தொண்டர் புராணத்தாலும்

''மெய்க்கிளையாழோர் வேண்டும் புணர்ச்சிமுன்
கைக்கிளை நிகழ்தல் கடனென மொழிப'' என்ற சூத்திரவிதிக்கு –தொல்

இது அமையாது இது இறைவனே முன்னின்று கிளவித் தலைவனாகவும், பாட்டுடைத் தலைவனாகவும் வருகின்றமையால் என்னலாம்

இனி

திணையே கைக்கோள் கூற்றே கேட்போர்
இடனே காலம் பயனே முன்னம்
மெய்ப்பாடெச்சம் பொருள் வகைதுறையென
அப்பால் ஆறிரண்டு அகப்பாட்டுருப்பே -தொல்

என்ற சூத்திரவிதியால் திணை, குறிஞ்சித் திணையும், கைக்கோள் களவும், கூற்று தலைவன் கூற்றும், கேட்போர் தலைவியும், இடம் தினைப் புனமுமாம் என்க.

## இயற்கை புணர்ச்சி

இது தலைவியால் புணர்ச்சி எனப்படும். இதனை வேட்கை யுணர்த்தல், மறுத்தல், உடன் படல், கூட்டமென்று இறைவியின் கூட்டம் நால் வகைத்தே.

ஆகஇரந்து பின்னிற்றற் கெண்ணல். இரந்து பின்னிற்றல் முன்னிலை பாக்கம், மெய் தொட்டு மயிறல் பொய் பாராட்டல், இடம் பெற்றுத் தாழல், வழிபாடு மறுத்தல், இடையூ கிளத்தல், நீடு நினைந்திரங்கல், மறுத்தெதிர் கோடல், வறிது நகைதோற்றல், முருவற் குறிப்புனர்த்தல், முயங்குதலுறுத்தல், புணர்ச்சியின் மகிழ்தல், புகழ்தல் என்பன கொண்ட இக் களவியலை ஆசிரியர் கூறப்புகுந்தார் என்க.

## தலைவன் வருத்தஞ் சாற்றல்

''இது ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப
மிக்கோனாகினும் கடிவரை யின்றே''

என்ற தொல்காப்பிய விதிக்கிணங்க தலைவன் மிக்கோனாயின் பெருமையும் உறனும் ஆடுஉமென என்பதால் தலைவன் வருத்தஞ் சாற்றலாமா? என்ற கேள்விக்கு சாற்றலாம்; இது உலகியல் வருத்தம்போல் அல்லாது காதல் வருத்தம். அதனால் சொல்வது இயல்பே அதுவும் தலைவியிடமே என்க. இறைவன் காட்ட உயிர்கள் உணருமாற்றலால் இது பொருந்தும்.

தென்பாலுகந்தாடு தில்லைச் சிற்றம்பலவன் பெண்பால் உகந்தான் பெரும் பித்தன் காணேடி உகந்திடிலில் இருநிலத்தோர் விண்பாலேயோ கெய்திவீடுவர்காண் சாளேலோ என்பது மணி வாசகர் திருவாசகம்.

பாட்டு 11

1. **வன்னத் தினைமாவைத் தெள்ளியே- உண்ணும்**
**வாழ்க்கைக் குறக்குல வள்ளியே!-உயிர்**
**வாங்கப் பிறந்திட்ட கள்ளியே!...இரு**
**வடமேருவை நிகராகிய புயமீதணி பலமாமணி**
**மாலைப் படீர் எனத் துள்ளியே...விழ**
**வான்மதி வீசும் தீ அள்ளியே.**

**பொழிப்புரை:**

செவ்வண்ணம் பொருந்திய தினையை இடித்து மாவைத் தெள்ளி தின்னுகின்ற வாழ்க்கையை உடைய குறமாதான வள்ளியே?

காமப் பைத்தியம் கொள்ளுமாறு செய்து எந்தன் உயிரை வாங்கப் பிறந்திட்ட கள்ள முடையவளே! இரண்டு மேருமலை போன்ற எனது தோள்களில் தவழும் மணிகளால் கோக்கப்பட்ட மாலையானது படீர் எனத் துள்ளி விழும்படியாக வானத்தில் எழுந்த சந்திரன் தீயை அள்ளி வீசி சுடுகின்றதே என்செய்வேன்.

(தென்றல் வேவதும், மதிசுடுவதும், மாலை வேளை கொல்லுவதும், குயிற் குரல், கடலோசை முதலியன துன்பம் செய்வதும், காம மயக்கம் கொண்டவரிடைக் காணப்படுவனவாகும்).

**2. கன்னத்தினிற் குயில் சத்தமே... கேட்க**
**கன்றுது பார் என்றன் சித்தமே - மயக்**
**கஞ்செய்யு தேகாமப் பித்தமே - உடல்**
**கனலேறிய மெழுகாயின தினியாகிலும் அடிபாதகி**
**கட்டி1 அணைத்தொரு முத்தமே - தந்தால்**
**தைதொழு வேன் உன்னை நித்தமே.**

**பொழிப்புரை:**

என்னுடைய காதில் குயில் சத்தம் கேட்குகின்றமையால் (கன்னம் -காது) காமத்தால் வருந்தும் என்னை பார்த்தனையோ! எனது சித்தம் ஆசை மீறிப்பித்தனாகுகின்றேனே. அதனால் உடல் எரி தீயில் அகப்பட்ட மெழுகுபோலாயினேன். இனிமேலாயினும் அடியே! பாவிப்பெண்ணே என்னை நீ கட்டியணைத்து ஒரு முத்தம் கொடுத்தால் காம நோய் என்னை விட்டு அகலும், அதனால் உன்னை நான் கை கூப்பி தொழுவேன் தினமும்.

எடுத்துக்காட்டு:

''1 பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை தன்
நோய்க்கத்தானே மருந்து'' -(குறள்)

**3. வாடி யிருப்பது வஞ்சமோ - பொல்லா**
**வன்கருங் கல்லோ உன் நெஞ்சமோ - கொண்ட**
**மையல் பயித்தியங் கொஞ்சமோ?-சிலை**
**மதனகாம முதுகாவியம் அதிலேமொழி சுகலீலையின்**
**மார்க்கம் உனக்கென்ன நஞ்சமோ?-ஒரு**
**வார்த்தை உரைக்கவும் பஞ்சமோ?**

**பொழிப்புரை:**

பெண்ணே நீ வாட்டமாகியிருப்பதும் வஞ்சமாகும்! வன்மையான கருங்கல் போன்றது உனது நெஞ்சம்! எனக்கு உன் மீது

எழுந்த ஆசையால் வந்த பயித்தியம் கொஞ்சமாகுமா? மன்மதன் லீலைகளைச் சொல்லுகின்ற காமநூலில் உனது எண்ணம் இல்லையோ அது நஞ்சோ! அதனால்தான் என்னோடு சேர்ந்து இன்பம் அனுபவிக்க உனக்கு முடிவதில்லை! எனது வேண்டுகோளுக்கிணங்கி ஒரு வார்த்தை சொல்லவும் உனக்குச் சொற்கள் வறுமையாகிவிட்டனவா!

இலக்கணம்

முன்னிலைபிரிதின் கிழமை வினையை வாடி இருப்பதும் என்று தற்கிழை போல உபசரித்தார்.

**4. தேடக் கிடையாத சொன்னமே! - உயிர்ச்**
**சித்திரமே! மட அன்னமே - அரோ -**
**சிக்குது பால்தயிர் அன்னமே - பொரு**
**சிலைவேள்கணை கொலைவேலென விரிமார்பினில் நடுவேதொளை**
**செய்வது கண்டிலை இன்னமே - என்ன**
**செய்தேனோ நான்பழி முன்னமே.**

**பொழிப்புரை:**

தேடுவதற்குக் கிடைக்கமாட்டாத பொன் போன்றவளே! உயிர் ஓவியமாகிய மடப்பம் பொருந்திய அன்னம் போன்றவளே! ஐயோ!! உன்மீது காம மயக்கத்தால் எனக்கு அறுவறுப்பாகிறது அன்ன பானங்கள்! மன்மதன் கொலை வேலானது எனது விரிந்த மார்பின் நடுவே துளைத்தலை செய்வதைக் கண்டிலயோ இன்னமும். என்ன பழிசெய்தேன் முன்பே நான் உனக்கு என்றவாறு

(இராகம்: பைரவி பாட்டு - 11 (தாளம்: ஆதி)

**1. வன்னத் தினைமாவைத் தெள்ளியே- உண்ணும்**
**வாழ்க்கைக் குறக்குல வள்ளியே!-உயிர்**
**வாங்கப் பிறந்திட்ட கள்ளியே!...இரு**
**வடமேருவை நிகராகிய புயமீதணி பலமாமணி**
**மாலைப் படீர் எனத் துள்ளியே...விழ**
**வான்மதி வீசும் தீ அள்ளியே.**

**2. கன்னத்தினிற் குயில் சத்தமே... கேட்க**
**கன்றுது பார் என்றன் சித்தமே - மயக்**
**கஞ்செய்யு தேகாமப் பித்தமே - உடல்**
**கனலேறிய மெழுகாயின தினியாகிலும் அடிபாதகி**
**கட்டி1 அணைத்தொரு முத்தமே - தந்தால்**
**தைதொழு வேன் உன்னை நித்தமே.**

3. **வாடி யிருப்பது வஞ்சமோ - பொல்லா**
**வன்கருங் கல்லோ உன் நெஞ்சமோ - கொண்ட**
**மையல் பயித்தியங் கொஞ்சமோ?-சிலை**
**மதனகாம முதுகாவியம் அதிலேமொழி சுகலீலையின்**
**மார்க்கம் உனக்கென்ன நஞ்சமோ?-ஒரு**
**வார்த்தை உரைக்கவும் பஞ்சமோ?**

4. **தேடக் கிடையாத சொன்னமே! - உயிர்ச்**
**சித்திரமே! மட அன்னமே - அரோ -**
**சிக்குது பால்தயிர் அன்னமே - பொரு**
**சிலைவேள்கணை கொலைவேலென விரிமார்பினில் நடுவேதொளை**
**செய்வது கண்டிலை இன்னமே - என்ன**
**செய்தேனோ நான்பழி முன்னமே.**

## தலைவி கூற்று

பாட்டு 12

1. **ஆறுமுக வடி வேலவனே! கலி -**
**யாணமுஞ் செய்யவில்லை; -சற்றும்**
**அச்சம்இல் லாமலே கைச்சர சத்துக்கு**
**அழைக்கிறாய், என்ன தொல்லை?**
**மீறிய காமம்இல் லாதபெண் ணோடே**
**விளம்பாதே வீண் பேச்சு - சும்மா**
**வெள்ளைத் தனமாகத் துள்ளுகிறாய்; நெஞ்சில்**
**வெட்கம் எங்கே போச்சு?**

**பொழிப்புரை:**

ஆறுமுகனே! வடித்த வேல் தாங்கிய வேலவனே! உனக்கு என்னைக் கலியாணமுஞ் செய்து கொடுக்கவும் இல்லை! அப்படி இருக்கக் கொஞ்சமும் பயமில்லாமல் கைச்சரச விளையாட்டிற்கு அழைக்கிறாய், இது பெரும் தொல்லையல்லையோ! உன்மீது மிகுதியான ஆசை இல்லாத மாதோடு சொல்லிடலாமா வீணான வார்த்தை, வெகுளித்தனமாக உளறுகிறாய் உனக்கு நாணம் எங்கே போனது?

இஃது ''அச்சமும் நாணமும் மடமும் முந்துறுத்தல் நிச்சம் பெண் பாற்குறிய'' என்ற தொல்காப்பியத்திற்கு இணங்க, தலைவி அச்சமும், நாணமும், மடமும் முந்துறக் கூறினாள்;ஆனால்! தலைவன் மீது வேட்கை இல்லாதவள் இல்லை என்பது பின்வரும் அடிகளாலும், பாக்களாலும் காணலாம்.

2. **மேட்டிமை என்னிடம் காட்டுகிறாய் இனி**
**வேறில்லையோ சோலி? - இதை**
**வீட்டில் உள்ளோர் கொஞ்சம் கேட்டுவிட்டால், அது**
**மெத்த மெத்தக் கேலி.**
**தாட்டிகஞ் சேர்கழுகாசல மாநகர்**
**தங்கும்முரு கோனே! -இந்திர**
**சாலத்தினால் என்னைக் காலைப் பிடித்தாலுஞ்**
**சம்மதியேன் நானே.**

**பொழிப்புரை:**

உனது மேன்மைத் தன்மையை என்னிடம் ஏன் காட்டுகின்றாய்? உனக்கு வேறு வேலை இல்லையோ?இதை எனது வீட்டிலுள்ளவர் கொஞ்சம் தெரிந்துவிட்டால் இது மிக விபரீதத்துக்குறியதாகும். உயர்பலன் சேர்ந்த கழுகு மாமலை நகர் தங்குமா முருகனே? நீ என்னிடம் இந்திர சாலம் செய்து எனது காலைப்பிடித்தாலும் நான் இணங்கிடவே மாட்டேன்.

இலக்கணம்

''மெத்த மெத்தக் கேலி-என்பதின் காரணத்தை, காரியமாக்கி உபசரித்து சம்மதியேன் நானே'' என்பாரானார்.

3. **அக்கரைக் காரற்குப் புத்திகொஞ்சம் என்பர்**
**ஆரும்பழ மொழியே-நீயும்**
**அப்படி என்னைப் பலாத்காரஞ் செய்திடில்**
**ஆச்சுது பெண் பழியே**
**சக்கரைக் கட்டிபோல் வள்ளிதெய் வானையாம்**
**தையல்உனக் கிலையோ?-இரு**
**தையலரைச் சேரும் பையல் உனக்கென்ன**
**தானும் ஒரு நிலையோ?**

**பொழிப்புரை:**

ஆத்திரக்காரருக்கு புத்திமட்டாம் என்பது எவரும் அறிந்த உலகப் பழமொழியாகும். அதுபோல் நீயும் அத்திரப் படுகின்றாய். ஆனால் நீ என்னை பலாத்காரம் செய்தால் உனக்கு பெண்பழியும் ஆகும் மேலும் வெல்லத்துண்டுகள் போல இனிய அழகுள்ள வள்ளி, தெய்வானை இரு பெண்மணியரைக் கூடுகின்ற இளையோனான உனக்கு: இன்னும் என்னையும் கூடுகின்ற ஆசையாகுமா?

4. **அம்புவிற் சிறு பெண்களின் மேல் உனக்(கு)**
**ஆசைஏன் காணுதையா?-நீர்**
**ஆக்கப் பொறுத்தாலும் ஆறப்பொறாதவர்**
**ஆகவே தோணுதையா!**

**நம்பும் அண்ணாமலை தாசன் பணியும்**
**நளினமலர்ப் பாதா! -கொஞ்ச**
**நாளைக்கு மேல்ஒரு வேளைக்கு லீலை**
**நடத்தினால் ஆகாதா?**

**பொழிப்புரை:**

தேவருலகத்தினனான உனக்கு மண்ணுலகத்தில் கன்னிப் பெண்கள் மேல் ஆசையேன் காணப்படுகின்றதோ. நீ ஆக்கப் பொறுத்தாலும் ஆறப் பொறாதவர் போல தோணுகின்றதே: (பழமொழி) நம்பிக்கை உடைய அண்ணாமலையாகிய தொண்டன் வணங்கு கின்ற தாமரைச் சீரடிகளையுடைய முருகப் பெருமானே? சிறிது காலம் சென்றபின் ஒருவேளைக்கு ஒரு தரம்லீலை நடத்தினால்தான் ஆகும்: என்றவாறு மனதைப் பெண்போல் தலைவன், பாவனையாக்கினார் என்க.

இலக்கணம்

அண்ணாமலைதாசன் அண்ணாமலையாகிய தாசன் எனவிரிய இருபெயரொட்டுப் பண்புத்தொகை

(இராகம்: அடாணா பாட்டு - 12 (தாளம்: ரூபகம்)

1. **ஆறுமுக வடி வேலவனே! கலி -**
**யாணமுஞ் செய்யவில்லை; -சற்றும்**
**அச்சம்இல் லாமலே கைச்சர சத்துக்கு**
**அழைக்கிறாய், என்ன தொல்லை?**
**மீறிய காமம்இல் லாதபெண் ணோடே**
**விளம்பாதே வீண் பேச்சு - சும்மா**
**வெள்ளைத் தனமாகத் துள்ளுகிறாய்; நெஞ்சில்**
**வெட்கம் எங்கே போச்சு?**

2. **மேட்டிமை என்னிடம் காட்டுகிறாய் இனி**
**வேறில்லையோ சோலி? - இதை**
**வீட்டில் உள்ளோர் கொஞ்சம் கேட்டுவிட்டால், அது**
**மெத்த மெத்தக் கேலி.**
**தாட்டிகஞ் சேர்கழுகாசல மாநகர்**
**தங்கும்முரு கோனே! -இந்திர**
**சாலத்தினால் என்னைக் காலைப் பிடித்தாலுஞ்**
**சம்மதியேன் நானே.**

3. **அக்கரைக் காரற்குப் புத்திகொஞ்சம் என்பர்**
**ஆரும்பழ மொழியே-நீயும்**
**அப்படி என்னைப் பலாத்காரஞ் செய்திடில்**
**ஆச்சுது பெண் பழியே**

**சக்கரைக் கட்டிபோல் வள்ளிதெய் வானையாம்**
**தையல்உனக் கிலையோ?-இரு**
**தையலரைச் சேரும் பையல் உனக்கென்ன**
**தானும் ஒரு நிலையோ?**

**4. அம்புவிற் சிறு பெண்களின் மேல் உனக்(கு)**
**ஆசைஏன் காணுதையா?-நீர்**
**ஆக்கப் பொறுத்தாலும் ஆறப்பொறாதவர்**
**ஆகவே தோணுதையா!**
**நம்பும் அண்ணாமலை தாசன் பணியும்**
**நளினமலர்ப் பாதா! -கொஞ்ச**
**நாளைக்கு மேல்ஒரு வேளைக்கு லீலை**
**நடத்தினால் ஆகாதா?**

**பாட்டு 13 தலைவனைக் கலந்த தலைவி பாங்கிக்குக் கூறுதல்**

**1. செந்தில் மாநகரந் தனில் மேவிய**
**தேசிக னாம்முரு கேசன்:-மயில்**
**வாசியில் ஏறும் உல்லாசன்:-சிறு**
**திங்1களும்பண சங்கமாசுண-**
**முத்துலங்கிய கங்கையாறோடு**
**செஞ்ச டாடவி மீதணி வார்செவி**
**சேரமுன் ஓதுஉப தேசன்: அடி**
**யார் தமை ஆள்விசு வாசன்.**

**பொழிப்புரை:**

திருச்சீர் அலைவாயான திருச்செந்தூர் திரு நகரத்தில் உறைகின்ற சற்குருவான முருகப்பெருமான். வேகமான காற்றுப் போன்ற மயில் ஊர்தியில் ஏறி நடாத்தும் மகிழ்ச்சி மிக்கோன், இளம்பிறை யையும் படத்தையுடைய பாம்பையும் முன்பு துலங்கும் படியாக கங்கையாற்றையும் சிவந்த சடைகளில் அணிந்த சிவபெருமான் மகிழ்ச்சி கொள்ளும்படி, பிரணவப் பொருளை ஓதியருளிய குரு தேசிகன். அடியார்களை ஆட்கொள்ளுகின்ற கருணை நட்புடையவன்.

(வாசி என்பது இடகலை, பிங்கலை, சுழுமுனை என்ற காற்றினை, கும்பித்தல் என்ற சித்தர்முறைப்படியும் கூறினார்.)

எடுத்துக்காட்டு:

"வாசிநடத்தித்தருவாண்டி-ஒரு வாசியிலிங்கே வருவாண்டி" -அருட்பா

"பாதி மதிநதி பொது மணி சடைநாதர் அருளிய குமரேசா" -திருப்புகழ்

2. **எந்த நேரமும் வந்தனை செய்தடி**
**எண்ணும் அண்ணாமலைத் தாசன் -துதி**
**பண்ணும் மெய்ஞ்ஞானவிலாசன், -என்னோடு**
**இந்1தெழுந்து தயங்குமாலையில்**
**வந்து வண்டு முழங்கு சோலையில்**
**இன்ப சாகர மாகிய லீலைகள்**
**அன்பு2டனே செய்தான் மானே -அந்தச்**
**சம்ப்ரமம் என்னசொல் வேனே!**

**பொழிப்புரை:**

எப்பொழுதும் திருவடியையே தொழுபவனாய் விளங்கும் அண்ணாமலையாகிய தாசனுக்கு அருள் பண்ணுபவன். துதி பண்ணுமாறமைந்த மெய்ஞ்ஞானப் பெருக்கமுடையவன்.என் முகம் போன்று சந்திரன் எழுந்து எனக்கு வாட்டத்தைச் செய்யும் அந்திப் பொழுதில் வந்தான், வந்து! வண்டுகள் உறங்கிக் கிடக்கும் சோலையில் இன்ப சாகரமாகிய லீலைகளை அன்புடன் செய்தருளினான். தோழியே மான் போன்றவளே! அப்படிப்பட்ட இனிய கலப்பை எப்படிச் சொல்வேன் நான்!

இன்பம்-அகத்தே கொண்டு வெளிக்காட்டப்படாததாய் உள்ள நிகழ்ச்சி எனவே அது அகம் என்ற ஆகு பெயர் பெற்றது என்பர். தொல் –உரையாசிரியர்; -நச்சினார்கினியார்

, இலக்கணம்

செய்தான் மானே - மான்போன்றவளே என உரு உவமையாயிற்று

எடுத்துக்காட்டு:

''மாதர் முகம் போல ஒளிவிட வல்லையே
காதலை வாழி மதி'' -குறள்

''காதலர்இருவர் கருத்தொருமித்து ஆதரவுபட்டதே இன்பம்'' -ஔவை

3. **மங்கை மார்பல ரும்புடை சூழ்தர**
**மாமலர் கொய்திடச் சென்றேன்; அங்கோர்**
**பூமரத் தேதநி நின்றேன் -சந்த்ர**
**மண்டலங்களை வென்ற ஆனனம்**
**ஐந்தொ டொன்று மிகுந்துவார்மது**
**வண்ட லோடு கடம்பெனும் ஆரமும்**
**வாரமும் தோன்றிடச் சேர்ந்தான்: எனது**
**ஏரும்பார்த் தேகளி கூர்ந்தான்.**

**பொழிப்புரை:**

தோழிகளான மங்கையர்கள் பலர் பக்கத்தே புடை சூழ்ந்து வரக் கோட்டு மலர் கொய்திடச் சென்றேன். அங்கே நான் ஒரு பூமரத்தே மலர் கொய்திடத் தனியே நின்றேன் அப்போழ்து சந்திர மண்டலத்தை வென்ற ஐந்தும் ஒன்றுமான ஆறு முகங்கள் இலங்கும்படியும், தேன்துளிர் கடப்பமலர்மாலை புரழும் படியும், அன்புடனும் நான் நின்ற இடத்திற்கு வந்தான்: அவன் என் அழகுத் தோற்றத்தைப் பார்த்துக் களிப்புக் கொண்டு என்னை நெருங்கினான்.

இலக்கணம்

(சேர்ந்தான்-முன்னிலையைப் படர்கை போல உபசரித்தார் ஆனனம்-முகம்)

எடுத்துக்காட்டு:

''பெருந்தண் மாத்தழை இருந்தஅல்குல்,
ஐய அரும்பிய அணங்கன்வை எயிற்று
மையிர் ஓதி வாணுதற் குருமகள்
விளையாட்டாயமோடு வெண்மணல் உகுத்த
மன்னை நுண்தாது பொன்னின் நொண்டு
மனைபுறத் தகுதியாயின்'எனை எதூவும்'
இம்மனைக் கிழமை எம்மொடு புணரில்
தீதும் உண்டோ மாதராயெனக்
கடும்பரி நன் மாண் கொடுஞ்சி நெடுந்தோ்
கைவல் பாகன் பையென இயக்க
யாந்தற் குறுகினன்''. – அகம்-கவிக்கூற்று

4. **''பாங்கயாசனம் மேலுறை நான்முகப்**
**பாதக னும்மலர்க் கைதான்-கொண்டுன்**
**சோதியை எப்படிச் செய்தான்?-அடி**
**பஞ்சுரஞ்சினும் அஞ்சுசீரடி**
**கொஞ்சு1ரஞ்சித வஞ்சியே! புவி**
**பட்டுநீ நிலை நிற்கவொண்ணா''தென்று**
**பன்மலர் மெத்தையொன் றிட்டான்; -பின்பு**
**மென்மலர் எந்தன் 2கை தொட்டான்.**

**பொழிப்புரை:**

தாமரை மலர்த்தவிசில் இருக்கின்ற திசை முகன் என்ற பாதகன் தனது மலர்க் கைகளால் உனது அழகு பொருந்திய சோதிமயமான

உடற்பிம்பத்தை எங்ஙனம் செய்தானென்றான்? உனது அடிகளின் இலவம்பஞ்சு உராயினும் சிவந்து கொப்பளங் கண்டு விடுமே எனக் கொஞ்சியவன்...! இனிமையான வஞ்சிக்கொடியே இந்த மண்ணில் உனது திருவடிபட்டு நிற்கத்தகுமோ என்று; பல மலர்களாற் செய்த மெத்தையொன்றைப் போட்டான். பின்பு எனது கையை மென்மை யான மலரோ என்று தொட்டான் என்றவாறு. வஞ்சி-வஞ்சிக்கொடி போன்ற என விரிய- உவமையாயிற்று

எடுத்துக்காட்டு

அனிக்1சமும் அன்னத்தின் தூவியும்
மாதரடிக்கு நெருஞ்சிப் பழம் -குறள்

உறுதோறு முயிர் தளிர்ப்பத் தீண்டலாற்
பேதைக்கு அமிழ்தின் இயன்றன தோள் – குறள்

தீண்டலும் இயைவது கொல்லோ மாண்ட
நாளினும் கூந்தற்கொடுச்சி தோளே. - குறுந்தொகை

(இராகம்: பைரவி பாட்டு - 13 (தாளம்: சாப்பு)

1. **செந்தில் மாநகரந் தனில் மேவிய**
**தேசிக னாம்முரு கேசன்:-மயில்**
**வாசியில் ஏறும் உல்லாசன்:-சிறு**
**திங்களும்பண சங்கமாசுண-**
**முத்துலங்கிய கங்கையாறோடு**
**செஞ்ச டாடவி மீதணி வார்செவி**
**சேரமுன் ஓதுஉப தேசன்: அடி**
**யார் தமை ஆள்விசு வாசன்.**

2. **எந்த நேரமும் வந்தனை செய்தடி**
**எண்ணும் அண்ணாமலைத் தாசன் -துதி**
**பண்ணும் மெய்ஞ்ஞானவிலாசன், -என்னோடு**
**இந்தெழுந்து தயங்குமாலையில்**
**வந்து வண்டு முழங்கு சோலையில்**
**இன்ப சாகர மாகிய லீலைகள்**
**அன்புடனே செய்தான் மானே -அந்தச்**
**சம்ப்ரமம் என்னசொல் வேனே!**

3. **மங்கை மார்பல ரும்புடை சூழ்தர**
**மாமலர் கொய்திடச் சென்றேன்; அங்கோர்**
**பூமரத் தேதநி நின்றேன் -சந்த்ர**

**மண்டலங்களை வென்ற ஆனனம்**
**ஐந்தொ டொன்று மிகுந்துவார்மது**
**வண்ட லோடு கடம்பெனும் ஆரமும்**
**வாரமும் தோன்றிடச் சேர்ந்தான்: எனது**
**ஏரும்பார்த் தேகளி கூர்ந்தான்.**

4. **"பாங்கயாசனம் மேலுறை நான்முகப்**
**பாதக னும்மலர்க் கைதான்-கொண்டுன்**
**சோதியை எப்படிச் செய்தான்?-அடி**
**பஞ்சுரஞ்சினும் அஞ்சுசீரடி**
**கொஞ்சு ரஞ்சித வஞ்சியே! புவி**
**பட்டுநீ நிலை நிற்கவொண்ணா"தென்று**
**பன்மலர் மெத்தையொன் றிட்டான்; -பின்பு**
**மென்மலர் எந்தன் கை தொட்டான்.**

பாட்டு 14

## தலைவி இரங்கலும் பாங்கியைத் தூதுவிடலும்

1. **பூமி மெச்சிடும் அண்ணாமலைக் கோர் துணை யானவன்**
**மயில் வானவன் ஒரு கானவன்-தினைப்**
**புனத்தைக் காக்கும் 1 வள்ளி**
**தனத்தைப் பார்க்க மெள்ளப் போனவன்**

**பொழிப்புரை:**

உலகப் புகழ்கொண்ட அண்ணாமலையாகிய கவிஞருக்கு முழுத்துணையாக நின்றவன்; மயில் வாகனத்தையுடைய தேவனாகிய குறிஞ்சிக் கிழவன். தினைப் புனத்தை காத்துக் கொண்டிருந்த வள்ளியின் அழகிய தனங்களிற் காமங் கொண்டு கிழவேடமணிந்து மெதுவாக அவளைப்பார்க்கச் சென்றவன்.

எடுத்துக்காட்டு

"1 வேடிச்சி கொங்கை விரும்புங் குமரனை" -திருப்புகழ்

2. **சேமமுற்றகழு காசலே சனையே தேடுதே**
**மனம் 1வாடுதே கால்தள் ளாடுதே'-இரு**
**செங்கை தாங்கி நின்ற**
**சங்கினங் கழன் றோடுதே**

**பொழிப்புரை:**

மங்கலம் பொருந்திய கழுகு மாமலை ஈசனான முருகனைக் கண் தேடுகின்றது. காணாமையால் மனம்வாடுகின்றது; மன

வாட்டத்தால் எழுந்த சோர்வைக் கொண்டு உடம்பு மெலிந்து கால்கள் தள்ளாடுகின்றன: இரண்டு கைகளிலும் கிடந்த சங்கு வளையல்கள் கழன்று விடுவது போன்று சுழன்றாடுகின்றன. இது முல்லையால் ஆற்றி இருந்து இரங்கலின் நெய்தல்

(தேடுதே என்பதால் கண் வருவிக்கப்பட்டது)

இலக்கணம்

கால்கள் என்பது கால் என சாதி ஒருமையாக்கினார்

எடுத்துக்காட்டு :

''தாழ்வு திறந்து தொடி நெகிழ்ந்தான் போகிய கானம் இறந்தடி
நையாமற்பாய் முழங்கி வரந் தென்னை செய்நயோவானம் சிறந்த
என் கண்ணீர்க் கடலாற்கனைத்துளி வீசாயோ கொண்மூகுழியில்
முகந்து'' - கலித்தொகை

3. **தென்றலான புலி வந்து கோபமொடு சீறுதே**
**தடுமாறுதே ;இதழ் உறுதே -மெத்தத்**
**தீமை யாம் இருளிற்**
**காம லாகிரியும் மீறுதே**

**பொழிப்புரை:**

தென்றலானது புலிபோல் வந்து காமத்தால் கலங்கும் என்னை கோபமோடு சீறுகின்றது, அதனால் என் மனம் நிலை தடுமாறுகின்றது. காம இச்சையால் இதழில் உமிழ் ஊறுகின்றது. வலிமை பொருந்திய தீய்மை யான இருளில் மயக்கம் தரும் லாகிரி போல் காமம் அதிகப்படுகின்றது.

(தென்றல், இருள்-இவைகளெல்லாம் தனித்திருக்கும் காதலர்க்கு துன்பம் தருவனவாகும்)

4. **குன்றமான முலைரெண்டும் மார்பில் விம்மிக் கொண்டதே**
**தேமல் மண்டுதே வெப்புங்கண்டிதே - மலர்க்**
**கொம்பு போல மென்ம -**
**ருங்கு லானதும் துவண்டதே.**

**பொழிப்புரை:**

குன்றுபோல திறண்ட தனங்கள் இரண்டும் மார்பகத்து விம்மித் துன்புறுத்துகின்றன. பசப்பு என் உடம்பு எல்லாம் பரவிவிட்டது. உடல் காமவெப்பத்தால் புளுங்குகின்றது. தேன் பொதிந்த மலர்க்கொடி போல் மென்மையான இடை, அவைகளை சுமக்கமாட்டாது துவளுதலைச் செய்கின்றது.

5. **உள்ளம் மெல்ல மெல்ல லீலை செய்ய நினைந்துருகுதே**
**முத்தம் கருகுதே; கண்ணீர்ப் பெருகுதே-என்றன்**
**உச்சிக் கேறிக் காமப்**
**பித்தம் கிறு கிறென்று வருகுதே.**

**பொழிப்புரை:**

எந்தன் மனமானது கொஞ்சங் கொஞ்சமாக உடல் உறவு செய்ய நினைக்கின்றது. குளிர்ச்சி பொருந்திய முத்துமாலைகாம வெப்பத்தால் தீய்ந்து போகின்றது: ஆசைத் துன்பத்தால் கண்ணீர் பெருகுகின்றது. எனது உச்சிக் கேறிய காமப்பித்தமயக்கம் கிறு கிறு என்று என்னைச் சுழற்றுகின்றது.

6. **வள்ளம் மேவும்பசும் பாலும் தேனும் அருவருக்குதே;**
**கசந் திருக்குதே துன்பம் பெருக்குதே; வன்ன**
**வரும் தாறு மாறாய்க்**
**கீற வே தனமும் பருக்குதே**

**பொழிப்புரை:**

கிண்ணத்தே பெய்த பசும் பாலும், தேனும் அருவருப்பாக இருக்கிறது. வேண்டுமென்றே பருகினாலும் கசந்திருக்கிறது. சிங்காரமான மார்புக் கச்சு பலவாறு கிழிந்து போகும்படியாகத் தனங்கள் பருக்கின்றனவே என் செய்வேன்?

7. **பாரமான கொங்கை ஓரம் வேடன் அம்பு பாயுதே**
**உடல் தேயுதே, மலர் தீயுதே,கொடும்**
**பாவி யான மதி**
**ஆவி சோர வந்து காயுதே**

**பொழிப்புரை:**

காமபாரம் தாங்க மாட்டாத பெருத்த தனங்களிடையே மன்மதனின் மலர்க்கணை வந்து பாய்கிறதே. அதனால் உடல்தேய்ந்து போனது, காமத்தீசுடுவதால்சூடப்பட்ட மலர்கள், கருகிப்போகின்றன. கொடுமை நிறைந்த தீயைப் போல் பாவி நிலவு என்னைத் துன்புறும்படி வருத்துகிறது.

(உயிர் மேவிய உடல் ஆதலின் உடல் துன்பத்தை ஆவியென உயிர்மேல் ஏற்றினார்)

எடுத்துக்காட்டு :

''1 உயிரை மேவிய உடல் மறந்தாலும்'' - அருட்பா

8. **மார வேளினாலே கோரமானகாம வாதையே**
**எனும் தீதையே தீரத் தூதையே! -சொல்லி**
**வாட்டந் தீர் குகனைக்**
**கூட்டி வாடி யடி கோதையே!**

**பொழிப்புரை:**

காமனால் கோரமான செயல் எனக்கு துன்பமாக இருக்கின்றது. அப்படிப்பட்ட தீய காம வேதனையை போக்கும்படியாகத் தூது சொல்லி எனக்கு வாட்டம் தீர்க்கும் குகப்பெருமானை கூட்டிக் கொண்டு வருவாயடி. தோழியாகிய பெண்ணமுதே என்றவாறு.

## தலைவி இரங்கலும் பாங்கியைத் தூதுவிடுதலும்

(இராகம்: செஞ்சுருட்டி பாட்டு - 14 (தாளம்: அடதாளம்)

1. **பூமி மெச்சிடும் அண்ணாமலைக் கோர் துணை யானவன்**
   **மயில் வானவன் ஒரு கானவன்-தினைப்**
   **புனத்தைக் காக்கும் வள்ளி**
   **தனத்தைப் பார்க்க மெள்ளப் போனவன்**
2. **சேமமுற்றகழு காசலே சனையே தேடுதே**
   **மனம் வாடுதே கால்தள் ளாடுதே'-இரு**
   **செங்கை தாங்கி நின்ற**
   **சங்கினங் கழன் றோடுதே**
3. **தென்றலான புலி வந்து கோபமொடு சீறுதே**
   **தடுமாறுதே; இதழ் உறுதே -மெத்தத்**
   **தீமை யாம் இருளிற்**
   **காம லாகிரியும் மீறுதே**
4. **குன்றமான முலைரெண்டும் மார்பில் விம்மிக் கொண்டதே**
   **தேமல் மண்டுதே வெப்புங்கண்டிதே - மலர்க்**
   **கொம்பு போல மென்ம -**
   **ருங்கு லானதும் துவண்டதே.**
5. **உள்ளம் மெல்ல மெல்ல லீலை செய்ய நினைந்துருகுதே**
   **முத்தம் கருகுதே; கண்ணீர்ப் பெருகுதே-என்றன்**
   **உச்சிக் கேறிக் காமப்**
   **பித்தம் கிறு கிறென்று வருகுதே.**
6. **வள்ளம் மேவும்பசும் பாலும் தேனும் அருவருக்குதே;**
   **கசந் திருக்குதே துன்பம் பெருக்குதே; வன்ன**
   **வரும் தாறு மாறாய்க்**
   **கீற வே தனமும் பருக்குதே**
7. **பாரமான கொங்கை ஓரம் வேடன் அம்பு பாயுதே**
   **உடல் தேயுதே, மலர் தீயுதே,கொடும்**
   **பாவி யான மதி**
   **ஆவி சோர வந்து காயுதே**

8. **மார வேளினாலே கோரமானகாம வாதையே**
**எனும் தீதையே தீரத் தூதையே! -சொல்லி**
**வாட்டந் தீர் குகனைக்**
**கூட்டி வாடி யடி கோதையே!**

## பாங்கி தலைவியின் நிலைமையை தலைவனுக்கு எடுத்துரைத்து தலைவியைக் கலக்குமாறு தலைவனை அழைத்தல்

### பாட்டு 15

1. **கண்ணாயிரம் படைத்த விண்ணூரிடம் தரித்த**
**கனவயி ரப்படை யவன்மக ளைப்புணர் கத்தனே!-திருக்**
**கழுகு மலைப்பதி அனுதினம் உற்றிடு சுத்தனே!**
**அண்ணாமலைக்கிடர்கள் நண்ணா தொழித்துமிக**
**அகமகி ழத்தன தருளை அளித்திடும் ஐயனே! -திசை**
**அரவமும் வெட்குற மயிலை நடத்திய துய்யனே!**

**பொழிப்புரை:**

அகலிகை மோகத்தால், கௌதமர் சாபத்தால், கண்கள் ஆயிரம் பெற்றுக்கொண்டு விண்ணை இடமாக ஆளுதலைச் செய்தும் ததிசி முனிவர் எலும்புக் கூட்டை வச்சரப் படையாக ஏந்திய இந்திரன், மகளான தேவயானை தனக்குத் துணைவியாகச் சேர்த்துகொண்ட தலைவனே! அழகு பொருந்திய கழுகுமலைக் கோயிலை இடமாகக் கொண்டு விளங்கியருளும் தூய்மையானவனே! அண்ணாமலை யாகிய கவிராயருக்கு இடர்கள் அணுகாதபடி செய்தும் அகமகிழ்ந்து கருணை அருளி வாழ்விக்கும் அய்யனே! திக்குகளை காவல்கொண் டிருக்கும் பாம்புகளும் அஞ்சி வெட்கப்படும்படியாக; வண்ணம் பொருந்தி வேகமுடைமயிலை வாகனமாக நடத்திச் செல்லுகின்ற அருள் உடைய முருகப்பெருமானே.

2. **மின்னோ கமலமலர்ப் பொன்னோ எனப்புகல**
**விகசித ரத்தின நகைகள் தரித்தொளிர் மெய்யினாள்-கதிர்**
**விரவிய சித்திர வளையல் அடுக்கிய கையினாள்**
**எந்நேர மும்மனதில் உன்மீதில் மையல்கொண்டு**
**எழுதிய சித்திரம் எனமவுனத்தில் இருக்கிறாள்; வள்ளத்து**
**இடுகிற புத்தமு தினையும் வெறுத்தரு வருக்கிறாள்**

**பொழிப்புரை:**

மின்னலை ஒத்தவளோ! அழகு பொருந்திய தாமரையில் வீற்றிருக்கும் திருமகளோ! என்று புகழும்படியாக அமைந்த

பெண்ணாள் விரிந்த சோதியை உடைய இரத்தின நகைகள் அணிந்து மேன்மை கொண்டு சுடர்விடும் மெய்யினை யுடையாள். வேலைப்பாடு கொண்ட இரத்தின வளையல் அடுக்கிய கையை யுடையவள், உனது காதலியான அவள்; எந்தநேரமும் உள்ளத்தில் உன்னை கூடும் மையல்கொண்டவளாய் ஓவியமென மௌனமாக இருக்கிறாள். வட்டிலில் இடுகின்ற புதிய அமுதினையும் வெறுத்து ஒதுக்குகின்றாள். அருவருத்துக் கொள்ளுகின்றாள். மின்னோ- மின்னலைப் போன்ற வள்ளி எனவிரிய இரண்டாம் வேற்றுமை புறத்துபிறந்த அன்மொழித்தொகை

3. **கும்பத்தினைச் சினந்து வம்பைப் பிதிர்த் தெழுந்து**
**கொடி இடை முற்றிலும் ஒடியவளைத்தது கொங்கையே மனம்**
**குலவு கடம்பினில்1 நினைவது வைத்தனள் மங்கையே.**
**செம்பொற் சிலம்புகள் புலம்பப் பெரும்தெருவில்**
**திகழ்தரு 2சிற்றில்கள் புரிவதை விட்டவள் தயங்கினாள் உன்றன்**
**திருவழ கைகரு விழியுள் இருத்தியே மயங்கினாள்.**

**பொழிப்புரை:**

செம்பொற் கும்பத்தினை பகைத்து; மார்புக்கச்சு துண்டு துண்டாக கிழிந்தோடும்படி விம்மி: வஞ்சிக்கொடி போன்ற இடையை முற்றிலும் ஒடிந்து போம்படி கொங்கைகள் வருத்த; உனது திருத்தோளில் புரழும் கடப்ப மலர் மாலையில் எண்ணம் வைத்த பெண் எனது தலைவி செம் பொன்னாலான சிலம்புகள் திருவடியிற் கிடந்து இடைமுறியும். இடைமுறியும்என ஓசை செய்ய பெரிய தெருவினில் விளங்குகின்ற சிற்றில் கட்டி விளையாடுவதை விட்டு விட்டுத் தேங்கினாள். உனதுதிரு அழகைதன் கருமையான விழிகளில் நினைவுகொண்டு மயங்குதலைச் செய்தாள். கண்ணும் மனமும் தீப் பூதத்தினால் ஆனவை இவை இரண்டும் உருவிலும் கடப்ப மலரிலும் ஒருங்கிருத்தினாள் என்க தெரிவைப் பருவத்தாள் தலைவி என்னல்.

எடுத்துக்காட்டு :

''புவனப்2பழங்கலம் எடுத்தடுக்கிக் புதிக்கி விளையொரு ஒரு சிற்றில்''
- மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

''மாப்பைந்1 தார்க்கல்ல முத்து வண்ணத்தார்க்கல்ல
வெப்பந்தார்காசை கொண்டு விட்டாளே'' - முத்தொள்ளாயிரம்

4. **போராடு தற்குரிய கூரார் மலர்க்கணைஎய்**

**புகழ்பெறு சித்தசதனுவத னைப்பொரு புருவத்தாள்-தவம்**

**புரிபவ ரைத்தனதடியில் விழப்புரி பருவத்தாள்**

**சீராக மெத்தைதனில் நேராக வைத்துனது**

**திருவத ரக்கனி அமுதை1அருந்தியே சேரையா!இந்தத்**

**தெரிவை உள்ளனத்துணையவது பிடித்தவர் ஆரையா?**

**பொழிப்புரை:**

போர் செய்வதற்குரிய தாமரை மலரம்புகளை ஏவிக்காமத்தினை வரவழைக்கும் காமனின் கரும்பு வில்லையொத்த புருவத்தினை உடையவள். தவம் செய்கின்ற யோகிகளையும் தனது அழகால் அடியில் வீழ்ந்து. கெஞ்சும்படியான இளமை நலம் கொண்டவள். சீர்பெற்ற மெல்லிய நல்ல பஞ்சணை மெத்தை தனில் உனக்குநேராக வைத்துக்கொண்டு கனி போன்ற அழகிய இதழில் ஊறும் அமுதை அவளுக்குஊட்டி; அவளைக் கூடிக் காத்தருள் செய்வாயாக; அந்தப் பெண் உள்ளத்திற்கு துணையாய் பிடித்தமானவர் உன்னையல்லால் வேறுயாருமில்லையே என்றவாறு.

எடுத்துக்காட்டு :

''மயலே எழுப்பி இதழே அருத்தி மலைநேர்
முலைக்குள் உறவாகி'' - திருப்புகழ்

''பாலோடு தேன் கலந்தற்றே பனி மொழி வாலெயிறுறிய நீர்'' - குறள்

எச்சில் உண்பதும், இதழின் பற்குறியிடுவதும், தனத்தில், நகக்குறி யிடுவதும் தட்டுதல், தடவுதல், நீவுதல், அணைத்தல், தழுவுதல் இவைகளெல்லாம் காம நூல் வழியது.

(இராகம்: ஆனந்த பைரவி பாட்டு - 15 (தாளம்: ஆதி)

1. **கண்ணாயிரம் படைத்த விண்ணூரிடம் தரித்த**

**கனவயி ரப்படை யவன்மக ளைப்புணர் சுத்தனே!-திருக்**

**கழுகு மலைப்பதி அனுதினம் உற்றிடு சுத்தனே!**

**அண்ணாமலைக்கிடர்கள் நண்ணா தொழித்துமிக**

**அகமகி ழத்தன தருளை அளித்திடும் ஐயனே!-திசை**

**அரவமும் வெட்குற மயிலை நடத்திய துய்யனே!**

2. **மின்னோ கமலமலர்ப் பொன்னோ எனப்புகல**
**விகசித ரத்தின நகைகள் தரித்தொளிர் மெய்யினாள்கதிர்**
**விரவிய சித்திர வளையல் அடுக்கிய கையினாள்.**
**எந்நேர மும்மனதில் உன் மீதில் மையல்கொண்டு**
**எழுதிய சித்திரம் எனமவுனத்தில் இருக்கிறாள்; வள்ளத்து**
**இடுகிற புத்தமு தினையும் வெறுத்தரு வருக்கிறாள்**

3. **கும்பத்தினைச் சினந்து வம்பைப் பிதிர்த் தெழுந்து**
**கொடி இடை முற்றிலும் ஒடியவளைத்தது கொங்கையே மனம்**
**குலவு கடம்பினில்1 நினைவது வைத்தனள் மங்கையே.**
**செம்பொற் சிலம்புகள் புலம்பப் பெரும்தெருவில்**
**திகழ்தரு 2சிற்றில்கள் புரிவதை விட்டவள் தயங்கினாள் உன்றன்**
**திருவழ கைகரு விழியுள் இருத்தியே மயங்கினாள்.**

4. **போராடு தற்குரிய கூரார் மலர்க்கணைஎய்**
**புகழ்பெறு சித்தச தனுவதனைப்பொரு புருவத்தாள்-தவம்**
**புரிபவ ரைத்தன தடியில் விழப்புரி பருவத்தாள்**
**சீராக மெத்தைதனில் நேராக வைத்துனது**
**திருவத ரக்கனி அமுதை1அருந்தியே சேரையா!இந்தத்**
**தெரிவை உள்ளத்துணையவது பிடித்தவர் ஆரையா?**

## பாங்கி, தலைவியின் அவயவத் தருமை சாற்றல்
## பாட்டு 16

தலைவியின் இளமைத் தன்மையை தோழி தலைவனுக்கு உணர்த்துதல் என்பதும், பாங்கி தலைவியருமை சாற்றல் என்பதும், பாங்கி தலைமகள் செவ்வி அருமை செப்பல் என்பதும் ஒருபொருள் கிளவிகளாம்.

இப்பாட்டில் கேசாதி பாதம் வரை உறுப்பு நலம் கூறினார்)

1. **சந்தவரை வந்தகுக நாதா!-பரை**
**அந்தரி மனோன்மணியாம் மாதா-தந்த**
**சண்முக சடாட்சர விநோதா!**
**குழைக்காதா! சூரர் வாதா! -வன**
**சஞ்ரி வெண் குஞ்சரி சமேதா!**

பொழிப்புரை:

அழகு பொருந்திய கழுகுமலைத் தலத்தில் எழுந்தருளிய குக நாதனே: பார்வதியாகிய சிவலோக சுந்தரியான மாதா உலகிற்கு

அருளிய பாலகனே. ஆறுமுகம் கொண்ட சரவணபவ என்ற பெயர் தாங்கிய விநோதத் தன்மையுடையவனே. ஒளி விடுகின்ற தோடணிந்த திருச்செவியைக் கொண்டவனே! அசுரர்களை வதம் செய்தவனே, வனக் குறத்தியாகிய வள்ளி நாயகியுடன், தெய்வானை அம்மை சமேதனே.

(வதம் என்பது -வாதா என்று முதல் நீண்டும் இறுதி ஒற்றொழிந்து சந்தம் நோக்கி நின்றது)

இலக்கணம்

குஞ்சரம்பெயர் சொலால், யானை-குஞ்சரி,வினைச்சொலாகி ஐராவத யானை ஈன்ற பெண் தெய்வயானை என பொருள்பட நின்றது என்க (வெண்குஞ்சரி சமேத) ஆகு பெயரை வினையாக உபசரித்தார்.

**2. செந்தமிழ் அண்ணாமலையை ஆளாக்-கொண்ட**
**கத்தஅர விந்தமலர்த் தாளா!-கள்க**
**சிந்திடும் கடம்பணியுந்தோளா!**
**நேடு நாளாய் மறவாளா(ய்)-உனைத்**
**தேடோர் குயில் பேடுருவம் கேளா(ய்)**

**பொழிப்புரை:**

செந்தமிழால் கவிபுனையும் அண்ணாமலை தொண்டனை ஆட்கொண்ட தாமரை மலர் போன்ற செவ்விய திருவடிகளை உடையவனே, தேன் துளும்பும் கடப்ப மலர் மாலையை யணியும் தோள்களை உடையவனே! நீண்ட நாட்களாக உன்னை மறவாத உன்காதலி உன்னைச் சேர்ந்து தழுவுகின்றவளாகி உன்னைத் தேடுகின்ற ஒரு குயில் போன்ற பெண்மணியின், உருவினை கேட்பாயாக நான் சொல்லுகின்றேன்.

**3. சுந்தரம் மிகுந்த குழல் மேகம்: -அவள்**
**சொந்தநுதல் இந்துவிலோர் பாகம்;-திருந்**
**தும்புருவம் வில்லெடுசி நேகம்:**
**தவயோகம் வென்ற நேகம்-வஞ்சம்**
**துஞ்சுவிழி நஞ்சினிலும் வேகம்.**

அழகு மிகுந்த கூந்தலோ கருமேகத்தை ஒக்கும். அவளுடைய நெற்றியோ மூன்றாம் பிறைச் சந்திரனைப் போன்றதாகும். கருமையான திருந்திய புருவமானது வில்லோடு நட்பாகும் வளைவு கொண்டதாகும் நோன்பு செய்கின்ற பெரிய முனிவர்களையும் வெல்லும் வஞ்சமான கருவிழியோ, நஞ்சைவிட பெரு வேகமுடையதாகும்.

(மேகம், பாகம், சிநேகம், வேகம், என்பன உவமை, இதில் இருந்து ஐயா சகமே என்பது வரை ஒரு வினை கொண்ட குளகச்செய்யுள்)

எடுத்துக்காட்டு :

"கூற்றமோ பிணையோ விடமோ மடவரால்
நோக்கில் இம்மூன்றும் உடைத்து" - குறள்

**4. சந்தம்மலி கின்ற முகம் இந்து:-வள்ளைத்**
**தண்டுசெவி என்பதுவே தந்து;-கன்னம்**
**சாணை; நுனி நாசியின்ப சுந்து**
**மதுச் சிந்து தல்பொ ருந்து-சிறு**
**சண்பகம்; துப்பாம் இதழ்ச்சி வந்து**

அழகொளிமிக்க முகம் பூரணச்சந்திரன் போன்றதாகும்.வள்ளைத் தண்டை ஒத்து வடித்த காதின் அழகாம். கன்னமோசாணையின் மிருதுத் தன்மையும் வளவளப்பும் கொண்டு அமையும். நுனிமூக்கின் அழகோ- பசுமையோடு கூடிய பொன்னிறம் வாய்ந்து தேன் துளும்பும் சிறு சண்பகமலரொக்கும் இதழ்களோ சிவந்த பவளத்தை ஒத்தனவாகும். சுந்தரம் மிகுந்த குழல் என்பதில் இருந்து துப்பாம் இதழ் சிவந்து வரை உவமானத்தை உவமேயம் ஆக்கினார்.

(செவி, கன்னம், இதழ், என்று சாதிஒருமை பெற்றன)

**5. செங்குமுத புட்பமதை ஒத்து;-மொழித்**
**தேனுதவும் வாய்நகையோ முத்து;-கண்டம்**
**சீதரனார் ஊதுவர நத்து**
**சொல்தித் தித்துப் பாகைக் கைத்து-விடச்**
**செய்யும் என உண்ணலாம் உளத்து**

சிவந்த குமுத மலரைஒத்த வாய், மொழியோ தேன், அவ்வாயின் சிரிப்பில் தெரிகின்ற பற்கள் முத்துப்போன்றனவாகும். கழுத்து திருமாலின் வெற்றிச் சங்கான பாஞ்ச சன்யம் போன்றது. சொல்லோ இனிய பாகைக் கூட கைத்துப் போகும் படியான இனிமையுடையது என்று உள்ளத்தில் நினைக்கலாம்.

**6. குங்குமவா கங்குசகோ தண்டம்:-முன்கை**
**கோமகர யாழ்உவமை விண்டம்:-கையைக்**
**கோகன மோஎனம ருண்டம்:**
**ஆழி மண்டங் குலி கண்டம்-நெருங்**
**குங்கெளிறு கிறுர்கிளியின் துண்டம்**

**பொழிப்புரை :**

குங்குமம் அப்பிய தோள்களோ மன்மதன் வில்லை யோத்த வளைவுச் சிறப்புடையதாகும். முன் புறக்கையோ மகர யாழுக்கு

உவமை கூறும்படியான அழகுடையது எனச் சொன்னேன்: கையோ பெரிய தாமரை மலரோ என்று ஐயங்கொள்ளுமாறு காணப்படும். கணையாழி நெருங்கும் படியான விரல்களானவையோ-கெளிற்று மீன்களை ஒத்தனவாகும். நகமோ கிளியின் மூக்கு போன்று சிவந்த அழகுடையனவாகும்.

யாழ் வகை: - மகர யாழ், செங்கோட்டி யாழ், பேரி யாழ் என்பனவாகும்.

**7. கட்டுகதிர் பட்டுமணி வம்பு-கிழி**
**பட்டுவழி விட்டிடஎ ழும்பு-கிற**
**கட்டழகாம் வட்டமுலை, செம்பு,**
**யானைக் கொம்பு, சிவசம்பு-குடங்**
**கைக்கும்வளை யாத பொற்ப றம்பு**

கட்டுகின்ற மணி கோக்கப்பட்ட மார்பு கச்சானது, கிழி பட்டுப்போய் வழிவிட்டிட மேலெழுந்து திரண்டு நிற்கும்வட்டமான முலையின் கட்டழகு செம்பு போன்றதும், யானைக் கொம்பு போன்று நிமிர்ந்தும், சிவன் அகங்கையால் எடுத்த பொன் மலையினும் பெரிதாய் அகங்கைக்கு அடங்காத குன்று போன்றதுமாகும்.

**8. மட்டுமிழ் பசுந்துளப மாலே-செங்கண்**
**வளருகிற தவிசெனும் ஓராலே-சிறு**
**வயிறு மயிர் சிற்றெறும்பு போலே;**
**விரை வாலே வெள்ளம் மேலே-சுற்றி**
**வந்தசுழி உந்தி; இடை நூலே1**

தேன் உமிழ்கின்ற பசுமையான திருத்துளாய் மாலையினை அணியும் கண்ணபிரான் அலைகடலிடத்து செவ்வரிக் கண்துஞ்சும் ஆலிலையைப் போல அழகிய வயிறும், அதன் அடிப்பாகத்தில் முளைத்தெழுந்த உரோமங்களோ-சிற்றெறும்பு வரிசையை ஒக்கும். விரைந்தோடுகின்ற தண்ணீர் சுழித் தன்மை போன்ற கொப்பூளகமும் இவைகளைத்தாங்கும் இடையோ நூலை ஒத்ததுமாகும்.

எடுத்துக்காட்டு :

''1கொடியென மின்னென சுணங்கென யாதொன்றும்
தெரிகல்லா இடையின் கட்கண் கவர்பு ஒருங்கோடா'' - கலித்தொகை

**9. தரமரவ படமென அல்குல் உண்டு;-தொடை**
**தங்கநிறச் செங்கதலித் தண்டு; -முழந்**
**தாட்குவமை கேட்கில் அவை நண்டு**
**சினை கொண்டு வளர் பெண்டு-வரால்**
**தானேகணைக் கால்எனும் இரண்டு**

**பொழிப்புரை:**

தரமான பாம்பின் படமொத்த பெண்குறியும், தங்கநிற கதலி வாழைத் தண்டையொத்த துடையின் அழகும், முழந்தாழுக்கு உவமையாகச் சொல்லின் அதுநண்டின் முதுகு போன்ற அழகும், சினைக் கொண்டு வளர்கின்ற பெண் வரால் கணைக் கால்களுக்கு உவமையாக அமைந்த அழகும்:

**10. பரடு தராசு உயர்குதிகந் துகமே:-அணி**

**பரவுபுற வடியிணை புத்தகமே:-கடற்**

**பவளமதி தசவிரல்கள் நகமே;**

**அம்போ ருகமே பத யுகமே;-2மயில்**

**பண்ணும் இளஞ் சாயல் 1 ஐயா சகமே,**

பொருத்து மொழியான கரண்டைக்கால் தராசு தட்டுப் போன்று அமைந்த எழிலும். குதிங்கால் அழகோ பந்துத் திரட்சியைஒக்கும். சிலம்பு, பாதரசம் முதலிய அணியழ குடன் பரந்த புறவடிகள் இணைந்த புத்தகச் சுவடியை ஒக்கும்,கடல் பவளத்துண்டு போன்ற விரல் அழகும் அவைகளின் வெண்மையான பிறைச்சந்திரன் போன்ற நகங்களின் அழகும், தாமரை மலரின் செவ்வியை ஒத்த உள்ளங் காலின் திருஅழகும் எல்லா விதத்திலும் மயிலின் சாயலை ஒத்த அப்பெண்ணாள் என்பதாகும், அதனால்!

(பவளமதி தசவிரல்கள் நகமே என்பது நிறை நிறைப்பொருட் கோளும், முரண் தொடையும் கொண்டது)

எடுத்துக்காட்டு :

''எண்ணரும்1 நலத்தினாள் இணையள் நின்றுளி'' - கம்பராமாயணம்
''ஆய்மயில் கொல்லோ (மயில் இயல்(பிறர்))'' - குறள்

**11. மேனகையோ டூருவசி இந்த் ரதாணி-செல்வம்**

**மிக்கதிரு முக்கியகலை வாணி-இந்த**

**மின்னரசி தன்னுருவம் காணில்**

**நெஞ்சு நாணி மலர்ப் பாணி-தலை**

**மீதுகுவித் துத்தொழுவார் பேணி**

**பொழிப்புரை:**

மேலோகத்து பெண்களான மேனகை, ஊர்வசி, இந்திராணி முதலியவர்களும், வைகுந்தத்துப் பெண்ணரசியான திருமகளும்,

சத்யலோகத்து பெண்மணியான முக்கிய கலைவாணியும் இந்தமின் போன்ற உருவத்தினை உடைய பெண்ணரசியின் வடிவழகைக் கண்டால், தமக்கு இப்படி அழகு இல்லையே என்று நாணங்கொண்டு; தங்களுடைய மலர் போன்ற கைகளைத் தலைமேல்வைத்து வணங்கித் தொழுவர். அப்படிப்பட்டவள், உன்னாலான காமஆசை மயக்கத்தால் வாடுகின்றாள்.

இலக்கணம்

மின்னரசி என்பது-மின்னலைப்போன்ற பெண் அரசி என விரிவதால் உவமைத் தொகை.

**12. சேனையோடு வந்துகருங் காவி-அம்பைச்**
**செய்யகரும் புச்சிலைவை தேவி-சண்டை**
**செய்யும் ஒரு மன்மதனாம் பாவி**
**எங்கள் தேவி உடல்ஆவி-தன்னைத்**
**தீர்க்குமுனம் காத்திடுவாய் மேவி,**

**பொழிப்புரை:**

தென்றல் தேராகவும், கிளி குதிரையாகவும்,குயில் காளமாகவும், திரைமுதலிய வச்சியங்களாகவும், மேகம் வசந்த காலம் முதலிய படைகளுடன் வந்து, கருங்குவளைமலர் அம்பைச் செங்கரும்பின் வில்லில் வைத்து. ஏவிச்சண்டை செய்கின்ற மன்மதனான பாவி, எங்கள் தலைவியை கொன்றுவிடுவான் போல் தெரிகின்றது: அதற்கு முன்பே நீ அங்கு சென்று அவள்காம மயக்கத்தை நீக்க தழுவி உடலையும் காத்திடுவாய் என்றவாறு

## பாங்கி –தலைவியின் அவயவத்தருமைசாற்றல்

(இராகம்: கல்யாணி பாட்டு - 16 (தாளம்: ஆதி)

**1. சந்தவரை வந்தகுக நாதா!-பரை**
**அந்தரி மனோன்மணியாம் மாதா-தந்த**
**சண்முக சடாட்சர விநோதா!**
**குழைக்காதா! சூரர் வாதா! -வன**
**சஞ்ரி வெண் குஞ்சரிச மேதா!**

**2. செந்தமிழ் அண்ணாமலையை ஆளாக்-கொண்ட**
**கத்தஅர விந்தமலர்த் தாளா!-கள்க**
**சிந்திடும் கடம்பணியுந்தோளா!**
**நேடு நாளாய் மறவாளா(ய்)-உனைத்**
**தேடோர் குயில் பேடுருவம் கேளா(ய்)**

3. சுந்தரம் மிகுந்த குழல் மேகம்: -அவள்
சொந்தநுதல் இந்துவிலோர் பாகம்;-திருந்
தும்புருவம் வில்லொடுசி நேகம்:
தவயோகம் வென்ற நேகம்-வஞ்சம்
துஞ்சுவிழி நஞ்சினிலும் வேகம்.

4. சந்தம்மலி கின்ற முகம் இந்து:-வள்ளைத்
தண்டுசெவி என்பதுவே தந்து;-கன்னம்
சாணை; நுனி நாசியின்ப சுந்து
மதுச் சிந்து தல்பொ ருந்து-சிறு
சண்பகம்; துப்பாம் இதழ்ச்சி வந்து

5. செங்குமுத புட்பமதை ஒத்து;-மொழித்
தேனுதவும் வாய்நகையோ முத்து;-கண்டம்
சீதரனார் ஊதுவர நத்து
சொல்தித் தித்துப் பாகைக் கைத்து-விடச்
செய்யும் என உண்ணலாம் உளத்து

6. குங்குமவா கங்குசகோ தண்டம்:-முன்கை
கோமகர யாழ்உவமை விண்டம்:-கையைக்
கோகன மோஎனம ருண்டம்:
ஆழி மண்டங் குலி கண்டம்-நெருங்
குங்கெளிறு கிறுர்கிளியின் துண்டம்

7. கட்டுகதிர் பட்டுமணி வம்பு-கிழி
பட்டுவழி விட்டிடஎ ழும்பு-கிற
கட்டழகாம் வட்டமுலை, செம்பு,
யானைக் கொம்பு, சிவசம்பு-குடங்
கைக்கும்வளை யாத பொற்ப றம்பு

8. மட்டுமிழ் பசுந்துளப மாலே-செங்கண்
வளருகிற தவிசெனும் ஓராலே-சிறு
வயிறு மயிர் சிற்றெறும்பு போலே;
விரை வாலே வெள்ளம் மேலே-சுற்றி
வந்தசுழி உந்தி; இடை நூலே1

9. தரமரவ படமென அல்குல் உண்டு;-தொடை
தங்கநிறச் செங்கதலித் தண்டு; -முழந்
தாட்குவமை கேட்கில் அவை நண்டு
சினை கொண்டு வளர் பெண்டு-வரால்
தானேகணைக் கால்எனும் இரண்டு

10. பரடு தராசு உயர்குதிகந் துகமே:-அணி
பரவுபுற வடியிணை புத்தகமே:-கடற்
பவளமதி தசவிரல்கள் நகமே;
அம்போ ருகமே பத யுகமே;-2மயில்
பண்ணும் இளஞ் சாயல் 1 ஐயா சகமே,

11. மேனகையோ டூருவசி இந்த் ராணி-செல்வம்
மிக்கதிரு முக்கியகலை வாணி-இந்த
மின்னரசி தன்னுருவம் காணில்
நெஞ்சு நாணி மலர்ப் பாணி-தலை
மீதுகுவித் துத்தொழுவார் பேணி

12. சேனையோடு வந்துகருங் காவி-அம்பைச்
செய்யகரும் புச்சிலைவை தேவி-சண்டை
செய்யும் ஒரு மன்மதனாம் பாவி
எங்கள் தேவி உடல்ஆவி-தன்னைத்
தீர்க்குமுனம் காத்திடுவாய் மேவி,

பாட்டு 17 பாங்கியிற் கூட்டம்

முன்னுரை:

பாங்கியாற் தலைவனைக் கலந்த தலைவி காம மயக்கத்தால் தலைவன் பொழுது முதலியன அறியாது மீண்டும் மீண்டும் கூட நினைப்பதைக் கண்டு இரங்கியது. நல்ல தலைவி இப்படியிரங்கலாமா? என்பார்க்கு இஃது களவியலாகலான் இரங்கிக் கூறலும், சினந்து கொள்ளுதலும் உண்டும் என்க. அஃதில்லையேல் தலைவிக்கு இழுக்கும், தலைவனுக்கு அபாயமும் பிறரால் நேருமல்லவோ? அதனால் தம்மைக் காத்தற்பொருட்டே என்க.

## தலைவி இரங்கல்

1. பாளை2வாய் கமுகில் வந்த வாளை1பாய் வயல்சூழ்செந்தூர்
பாலனம் புரியவந்த புண்ணிய!-போகம்
காலையும் செய்கிறாய் முன்பின் எண்ணியா?
வேளையோ விடிந்ததையா நாளைவாரேன் இன்றுகையை
விட்டிடென்றாலும் விடாமல் பிடிக்கிறாய்!-பாலை
ஒட்டவே மடி அரிந்து குடிக்கிறாய்!

**பொழிப்புரை:**

பாளைக்குலைகள் வாய்பொருந்திய பாக்குமரத்தில் வாளைமீன் காயும்படியான வளங்களைக் கொண்ட வயல் சூழ்ந்த திருச்செந்தூர்

தங்கி அருளும் அபயக்கையுடன் வந்த புண்ணியனான முருகவேளே! காலைவேளையிலும் சல்லாபம் செய்கிறாயே? முன்பின் எண்ணாமல். நேரமோ விடிந்து விட்டது, இனி நாளை வருகிறேன், இன்று கையைவிடு என்று சொல்லினாலும் விடாமல் பிடிக்கின்றனையே. பால் அவ்வளவையும் மடியை அறுத்து ஒட்டக்குடிக்கின்றவனைப் போல நீயும் என்னிடம் இன்பமெல்லாம் அனுபவிக்க நினைக்கின்றனையே

இலக்கணம்

(பாலை ஒட்டவே மடியறிந்து குடிப்பவன் என்ற பழமொழியைப் போல என்ற உவம உருபு மறைந்து நின்றது, குடிக்கிறாய் என எதிர்காலம் நிகழ்காலமாகி வழுவமைதியாயிற்று)

எடுத்துக்காட்டு :

''சேல் பட்1டழிந்தது செந்தூர் வயற்பொழில்'' - அலங்காரம்

''தேங்கடம்பின் மால் பட்டழிந்தது பூங்கொடியார் மனம்''

''பாளை2வாய் கமுகிற்றாகிப் படுபழம்சிதறிய வாளை'' - நைடதம்

2. **நித்தமும் அண்ணாமலை செய்குற்றமெண்ணா வேலா கண்டோர்**
**நின் இதழ்ப் பவளங்களில் வெள்ளை ஏ-தென்றால்**
**என்ன செய்வேன் நான் ஒரு பெண் பிள்ளையே!**
**மத்த நிகர்தனத்தில் மெத்தநக ரேகைபட்டு**
**மாலைப்பிறை போல் அனந்தம் தோணுதே!-இது**
**கேலித்துறை யாகுமென்று நாணுதே!**

**பொழிப்புரை:**

நாளும் அண்ணாமலைக் கவிஞர் செய்கின்ற குற்றத்தை எண்ணிடாத வேலவனே? என்னைக் கண்டவர்கள்:! பவளம் போன்ற உனது சிவந்த இதழ்கள் வெளுத்துக் காணப்படுகின்றனவே அது எப்படி என்று கேட்கின்? நான் என்ன சொல்வேன்! நாணத்திற்குரிய ஒரு பெண் பிள்ளையல்லவோ? யானை மத்தகத்தை ஒத்த தனத்தின் மேல் பிறைச்சந்திரனைப் போல நகக்குறிகள் அநேகம் காணப்படுகின்றனவே, அதன் காரணம் தெரிந்து ஊரிலுள்ளோர் கேலி செய்வதற்கு இடமாய் விடும் என்று நாணுகின்றேன் நான்.

(இன்பம் நுகர்ந்தோர்க்கு, வாய் வெளுப்பதும் கண்சிவப்பதும் இயல்பு)

3. **உன்னையும் விவாகமில்லா என்னையுமே அன்னைக்கண்டால்**
**ஒன்றுஞ் சொல்லிடாளோ அடபாவியே-இன்று**
**தின்றிடுவேன் என்பாள் பச்சை நாவியே,**

**சன்னை சாடையாக வந்தென் தன்னை யணைப்பாய் நீ" என்று**
**சாற்றிடும் என் உண்மையான சொல்லையே - விட்டுக்**
**கூற்றுவன்போல்வந்தாய் என்ன தொல்லையே"**

பொழிப்புரை :

உன்னையும் திருமணமில்லாத என்னையும் எனது அன்னை கண்டால் ஏதும் சொல்லமாட்டாள் என்ற எண்ணமா? அட பாவி! ஒருமனதாய் இன்றே நஞ்சைத் தின்றிடுவேன் என்பாளே? அதனால் சைகை சாடையாக என் குறிப்பறிந்து வந்து என்னைக் கூடிப்போ என்று என் சொல்லைக் கேளாமல் விட்டுவிட்டு கூற்றுவன் போல் வந்தாயே இது என்ன தொல்லை.

4. **சாறுசேர் கரும்புருசி யாயிருந்தாலும் வேரோடே**
**தான்பறித்துத் தின்னுவது ஞாயமோ? - முழு**
**ஆண்பிள்ளைக்கு இதுதான் சம்பிரதாயமோ?**
**நூறுதரம் மாறிமாறி வேறுவேறு லீலைசெய்தால்**
**நோகுமோ நோகாதோ எனக்குள்ளமே?-கொண்டு**
**போகுமோ கிணற்றுநீரை வெள்ளமே**

**பொழிப்புரை:**

இனிய சாற்றைக் கொண்ட கரும்பு உருசியாய் இருக்கின்ற தென்றாலும் வேரோடு பிடுங்கித் தின்பது நியாயமாகுமா? முழு மனிதனுக்கு இது சம்பிரதாயமாகுமா! நூறுதரம் மாறி மாறி வேறுவேறாக லீலைகள் செய்து துன்புறுத்தினால் எனது உள்ளம் வருந்தாமல் இருக்குமோ! கிணற்றுநீரை வெள்ளமா கொண்டுபோகிறது?

(பழமொழி அதுபோல் நான் உன்னை விட்டுஎங்கு போகப் போகின்றேன் என்றவாறு.)

## பாட்டு 17

1. **பாளை2வாய் கமுகில் வந்த வாளை1பாய் வயல்சூழ்செந்தூர்**
**பாலனம் புரியவந்த புண்ணிய!-போகம்**
**காலையும் செய்கிறாய் முன்பின் எண்ணியா?**
**வேளையோ விடிந்ததையா நாளைவாரேன் இன்றுகையை**
**விட்டிடென்றாலும் விடாமல் பிடிக்கிறாய்!-பாலை**
**ஒட்டவே மடி அரிந்து குடிக்கிறாய்!**

2. **நித்தமும் அண்ணாமலை செய்குற்றமெண்ணா வேலா கண்டோர்**
**நின் இதழ்ப் பவளங்களில் வெள்ளை ஏ-தென்றால்**
**என்ன செய்வேன் நான் ஒரு பெண் பிள்ளையே**

**மத்த நிகர்தனத்தில் மெத்தநக ரேகைபட்டு**
**மாலைப்பிறை போல் அனந்தம் தோணுதே!-இது**
**கேலித்துறை யாகுமென்று நாணுதே!**

3. **உன்னையும் விவாகமில்லா என்னையுமே அன்னைக்கண்டால்**
**ஒன்றுஞ் சொல்லிடாளோ அடபாவியே-இன்று**
**தின்றிடுவேன் என்பாள் பச்சை நாவியே,**
**சன்னை சாடையாக வந்தென் தன்னை யணைப்பாய் நீ" என்று**
**சாற்றிடும் என் உண்மையான சொல்லையே - விட்டுக்**
**கூற்றுவன்போல்வந்தாய் என்ன தொல்லையே''**

4. **சாறுசேர் கரும்புருசி யாயிருந்தாலும் வேரோடே**
**தான்பறித்துத் தின்னுவது ஞாயமோ? முழு**
**ஆண்பிள்ளைக்கு இதுதான் சம்பிரதாயமோ?**
**நூறுதரம் மாறிமாறி வேறுவேறு லீலைசெய்தால்**
**நோகுமோ நோகாதோ எனக்குள்ளமே?-கொண்டு**
**போகுமோ கிணற்றுநீரை வெள்ளமே**

## நற்றாய் தலைமகள் வேற்றுமை கண்டு வினாவி இற் செறிவுறுத்தினாள்

## பாட்டு 18

இது பூத்தரு புணர்ச்சியும், புனல் தரு புணர்ச்சியும், களிறு தருபுணர்ச்சியும் கொண்ட தலைவியின் வேற்றுமைகண்டு-பெற்ற தாய் இவ்வேற்றுமையை எதனால் எனவினவ? செவிலித்தாயும் தோழியரும் தெரிந்திருந்தும் அவர்கள் ஏன் நற்றாய்க்குத் தெரியப்படுத்தவில்லை என்றால்- அவர்கள் தலைவிமாட்டு அன்பு உடையவர்கள், அதனால் தலைவியின் களவொழுக்கத்தை நற்றாய்க்குத் தெரியப்படுத்தினால் தலைவி துன்புறுவாளே! என்று நினைத்தமையால் என்க. வேற்றுமையானது.

''நாற்றமும் தோற்றமும் உண்டியும்
செய்வினை மறைப்பும் செலவினும் பயில்வினும்
புணர்ச்சி எதிர்பாடுஉற்று உருத்த பின்னர்''

என்பதினாலும்...அறிக

1. **என்னடி நான் பெற்ற மங்1கை?**
**இருகொங்கைகளிற் சங்கை-எண்ண**
**எத்தனை கோடியோ செங்கை-விர-**

**லிடமே வளா்; நக ரேகைகள்**
**மிகவே படுவகை தோகையில்**
**ஏய்ந்த முருக வேள்கிள்ளி-உனைத்**
**தோய்ந்ததோ சொல்லடி கள்ளி.**

**பொழிப்புரை:**

என்னடி நான் பெற்ற பெண்ணே இரண்டு தனங்களும் வீங்கிச் சந்தேகப் படும்படியாக; எண்ணற்ற எத்தனையோ கோடிசங்கை யொத்த சிவந்தகைகளின் விரல்நகக்குறிகள் மிகுதியாக தென்படுகின்றது. உன்னை ஏய்த்து முருகனான பாவி உன்னைக் கட்டிப்பிடித்துக் கிள்ளித் தோய்த்ததினால் வந்த வடுவா சொல்லடி கள்ளத்தனமானவளே.

எடுத்துக்காட்டு :

''தண்டார்1தழுவிய வேலண்ணல் வாணந்தென் தஞ்சைவெற்பில்
வண்டார் குழலிதன் வண்ணமும் கண்ணும் வடிவும் முன்னாள்
கண்டார் அறியும் படியான வேயல்ல காரணமொன்று
உண்டாலுயி ரனையாய் இராமலுரை எனக்கே'' -தஞ்சை வாணன் கோவை

2. **அன்ன வயற் செந்தூர் வாசன்**
**மந்தகாசன் அன்பர் நேசன்-நாளும்**
**அண்ணாமலைக் கவிராசன்-பாடும்**
**அமுதச் சுவை தருமுத்தமிழ்**
**களபத் தொடு கமழ் பொற்புய**
**அற்புத வேலன்செய் சாலம்-தன்னால்**
**கற்பழிந் தாயோ இக்காலம்?**

அன்னங்கள் சூழ்ந்து காணப்படும் வயல் வெளிகளைக் கொண்ட திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள புன்னகை பொருந்திய அழகு இளமை நலம்கொண்டவன். அன்பர்களுக்கு நண்பனாயும் தினமும் அண்ணாமலைக் கவிராசன் பாடுகின்ற பாமாலையாம்.

அமிழ்தினும் இனிதான சுவைமிக்க மூன்று தமிழையும் களபச் சாந்துடன் கமழும்படியாக பொன் போல ஒளிவிடும் தோள்களில் அணிபவன் அப்படிப்பட்ட வினோத வேலவன் செய்த சாலத்தினால் கற்பழிந்து பட்டனையோ இப்போது.

3. **சித்தசன் கொக்கோக நூலை**
**அந்திமாலை யோடு காலை-வைத்துச்**
**சிந்திப் பாதாச்சு துன்வேலை-சிமிழ்ச்**

**சின்னத்தன மட வஞ்சியே!**
**உன்னைப் பணிவோடு கெஞ்சியே**
**சேவற் கொடியான் பூஞ்சோலை-தனில்**
**தேடிப் புரிந்தானோ லீலை**

**பொழிப்புரை:**

மன்மத லீலை கொண்ட கொக்கோக நூலை அந்தி மாலை நேரத்திலும், காலை நேரத்திலும் படித்தெண்ணுவதாக உள்ளதே உன்வேலை. சிமிழ்ச் செப்புப் போன்ற சிறிய தனவஞ்சிக்கொடி போன்ற பெண்ணே உன்னை பணிந்து நயம்படக்கூறி சேவற் கொடியை உடையவனான முருகன் பூஞ்சோலை தன்னில் தேடிவந்து தோய்ந்து லீலை செய்தானோ!

இலக்கணம்

மடவஞ்சி-மடப்பம் பொருந்திய வஞ்சிக் கொடிபோன்ற பெண்ணே என விரிய உவமைத்தொக்கது.

4. **மெத்தப் பிரமை கொண்டேங்கி**
**கொங்கை வீங்கிநேசப் பாங்கி மாரை**
**விட்டுத் தனியாக நீங்கி - வடி -**
**வேலுக்கதி பதிமையலை**
**மேலிட்டலறிய தையலே!**
**வெட்கத்தைப் போக்கடித்தாயோ-காம?**
**வேசைத்தனம் படித்தாயோ?**

**பொழிப்புரை:**

மன்மத பிரமை கொண்டு ஏங்கி; தனங்கள் விம்முதலைக் கொண்டு. அன்புத் தோழியரை விட்டுத் தனிந்து நீங்கிப்போய்; வடிவேலுக்கதிபன் என ஆசையல் அவன் மேல்பித்துடன் வாய்பிதற்றிய கன்னிப்பெண்ணே? நாணத்தைப் போக்கடித்து விட்டனையோ? காமவேசித்தனத்தை படித்துக் கொண்டனையோ!

5. **இன்னம் விவாகமே இல்லை**
**கமழ் கொல்லை வெடிமுல்லை-குழல்**
**எங்கும் சிங்காரித்து வில்லை-சந்தம்**
**இனிதாகிய களபம்;தன**
**கனமேருவில் அணிகின்றனை**
**இப்படியும் தலைவிதியோ-பெண்ணே!**
**செப்படியே இது மதியோ.**

**பொழிப்புரை:**

இன்னமும் திருமணமாகவில்லை: கன்னிப் பெண்ணான நீ! மணம் பொருந்தி காட்டில் வெடித்த முல்லைப் பூவை சூடிக்கொண்டு முடியைக்கோதி அலங்கரித்து கொள்வதுடன். வில்லைச் சாந்துடன் இனியவாசனை மிக்க களபமும் சேர்த்து மேருமலை போன்ற தனங்களில் அணிகின்றனை? இப்படிப்பட்ட தலைவிதி உனக்கு ஏற்பட்டது ஏன்? பெண்பிள்ளாய் சொல்லடி இது உனக்கு புத்திமதியாமோ?

"முல்லைப் பூச்சுடுவது மரபுவழி மணமானவருக்கே உரித்து என கணித நூலை உபசரித்தார்"

கற்பு மூவகைப்படும் என்ற ஆய்வை எனது தமிழமுது நூலிற் கற்பின் பொற்பு என்ற கட்டுறையிற் காண்க

6. **சன்னத மாய்க் காமப்பேயே**
**பிடித்தாயே வேப்பங்காயே-போலச்**
**சாதம் வெறுத்தாயே நீயே!-பெருஞ்**
**சண்டாளியே! கண்டோர் திரள்**
**கொண்டே பழி விண்டார்நம**
**சாதிக்கெல்லாம் ஒருவடுவே-வரத்-**
**தான் பிறந்தாய் வந்து நடுவே.**

ஆவேசம் கொண்டுள்ள காமப்பேய் பிடிக்கப்பட்டனையோ? வேப்பங்காய் கசப்பைப் போன்று அன்னத்தையும் வெறுத்து ஒதுக்கு கின்றனையே! பெருஞ்சண்டாளி என்று கண்டவர் அனைவரும் பழிசொல்லி விட்டார்கள். அதனால் நமது இனத்திற்கெல்லாம் வடுவரும் படியாக நடுவிலே நீ வந்து பிறந்து இழுக்கு தந்துவிட்டாயே?

இலக்கணம்

நம், பெண், சாதிக்கெல்லாம் என்பது நம என மகரமெய் உயிரேற்றது

7. **வண்ணப் பயிரவி தோடி**
**ராகம் பாடி உறவாடி-சப்ர**
**மஞ்சத்திலே சென்று கூடி-உன்றன்**
**வன்னம்படி கம்போல் ஒளிர்**
**கன்னத்திலு தேனிதழ்**
**வாயிலும் கொஞ்சம் பற்குறியோ-வைத்தான்**
**வாலை மகனுக்கும் வெறியோ?**

பல்வேறு இனிய அசைவான வண்ணங்களைத் தனக்குக் கலை யாகும்படி நளினமிகுந்த பைரவி, தோடி ராகங்களைப் பாடி, உன்னுடன் உறவாடி; சப்ர மஞ்சத்தில் சென்று கூடி உந்தன் வண்ணப் படிகம் போல் ஒளிதரும் கன்னத்திலும் தேன் சொரியும் படியான

இதழ்களிலும் சிறு பற்குறிகளை வைத்தான். அந்த சக்தி மகனுக்கும்இது ஒரு விளையாட்டுப் போலும்.

வாய் என்பது கருவியாகு பெயராய் இதழைச் சுட்டியது வண்ணப் பயிரவையும், தோடியும்-உம்மைத் தொகை

8. **எண்ணங் குமரவேள் பாலே**
**சென்றதாலே இனிமேலே-வயி-**
**றெப்படி யாகிலும் சூலே-வரும்**
**என்றே எனதுளம் அஞ்சுது**
**நன்றே சொலில் என் வஞ்சகம்**
**இல்லை கிழவன் சொல் வீணைக்-காரர்க்-**
**கேற்கா தென்றாலும் கண்ணாணை**

உன் எண்ணமானது குமாரவேள் மேல் சென்று விட்டதால், இனிமேல் எப்படியாகிலும் நீ கருத்தரித்து விடுவாய் என்று எனது உள்ளம் அஞ்சுகிறது.உனக்கு நல்லதைத்தான் சொல்லுகின்றேன்; என்னிடம் வஞ்சகமில்லை. ஆனாலும் கிழவன் சொல் வீணைக்காரர் கேட்டகமாட்டார் என்றாலும் கண்ணின் ஆணையாக நான் உனக்கு உண்மை சொன்னேன்... என்றவாறு

கிழவன் சொல்லைக் கிண்ணாக்காரன் ஏற்கான் பழமொழி
கண்ணாணை என்பது உண்மையை குறிக்கும் பட்டி வழக்கு

(இராகம்: பிலஹரி பாட்டு - 18

1. **என்னடி நான் பெற்ற மங்கை?**
**இருகொங்கைகளிற் சங்கை-எண்ண**
**எத்தனை கோடியோ செங்கை-விர-**
**லிடமே வளர்; நக ரேகைகள்**
**மிகவே படுவகை தோகையில்**
**ஏய்ந்த முருக வேள்கிள்ளி-உனைத்**
**தோய்ந்ததோ சொல்லடி கள்ளி.**

2. **அன்ன வயற் செந்தூர் வாசன்**
**மந்தகாசன் அன்பர் நேசன்-நாளும்**
**அண்ணாமலைக் கவிராசன்-பாடும்**
**அமுதச் சுவை தருமுத்தமிழ்**
**களபத் தொடு கமழ் பொற்புய**
**அற்புத வேலன்செய் சாலம்-தன்னால்**
**கற்பழிந் தாயோ இக்காலம்?**

3. சித்தசன் கொக்கோக நூலை
அந்திமாலை யோடு காலை-வைத்துச்
சிந்திப் பாதாச்சு துன்வேலை-சிமிழ்ச்
சின்னத்தன மட வஞ்சியே!
உன்னைப் பணிவோடு கெஞ்சியே
சேவற் கொடியான் பூஞ்சோலை-தனில்
தேடிப் புரிந்தானோ லீலை

4. மெத்தப் பிரமை கொண்டேங்கி
கொங்கை வீங்கிநேசப் பாங்கி மாரை
விட்டுத் தனியாக நீங்கி-வடி-
வேலுக்கதி பதிமையலை
மேலிட்டலறிய தையலே!
வெட்கத்தைப் போக்கடித்தாயோ-காம?
வேசைத்தனம் படித்தாயோ?

5. இன்னம் விவாகமே இல்லை
கமழ் கொல்லை வெடிமுல்லை-குழல்
எங்கும் சிங்காரித்து வில்லை-சந்தம்
இனிதாகிய களபம்;தன
கனமேருவில் அணிகின்றனை
இப்படியும் தலைவிதியோ-பெண்ணே!
செப்படியே இது மதியோ.

6. சன்னத மாய்க் காமப்பேயே
பிடித்தாயே வேப்பங்காயே-போலச்
சாதம் வெறுத்தாயே நீயே!-பெருஞ்
சண்டாளியே! கண்டோர் திரள்
கொண்டே பழி விண்டார்நம
சாதிக்கெல்லாம் ஒருவடுவே-வரத்-
தான் பிறந்தாய் வந்து நடுவே.

7. வண்ணப் பயிரவி தோடி
ராகம் பாடி உறவாடி-சப்ர
மஞ்சத்திலே சென்று கூடி-உன்றன்
வன்னம்படி கம்போல் ஒளிர்
கன்னத்திலு தேனிதழ்
வாயிலும் கொஞ்சம் பற்குறியோ-வைத்தான்
வாலை மகனுக்கும் வெறியோ?

8. **எண்ணங் குமரவேள் பாலே**
**சென்றதாலே இனிமேலே-வயி-**
**றெப்படி யாகிலும் சூலே-வரும்**
**என்றே எனதுளம் அஞ்சுது**
**நன்றே சொலில் என் வஞ்சகம்**
**இல்லை கிழவன் சொல் வீணைக்-காரர்க்-**
**கேற்கா தென்றாலும் கண்ணாணை**

பாடல் 19 பாங்கியிற் கூட்டம்

தலைவியைத் தாய் இற்செறிவுறுத்த தலைவி தலைவனைக் கூடும் வழி இல்லாமையின் தலைவன் வரவில்லையே என்பதாலும் இரங்குதலாகும். தலைவி அஃறிணைப் பொருளோடு இரங்கிக் கூறல் இ ஃது ''கேட்குந போலவும் கிளக்கு ந போலவும் அஃறிணை மருங்கினும் அறையப் படுமே'' என்பது நன்னூல் விதி

1. **நேம மாய்ப்பணியண் ணாமலைக்குதவு நீதனைக்**
**கழுகுமலை நாதனை-நெஞ்சில்**
**நினைக்க நினைக்கமீறி எனைக் கொல்லுதே காமவேதனை**
**கோமளக் கடலிலே மிகுந்த திரைக்கூட்டமே!**
**மன்மதன் போராட்டமே -செய்து**
**கோரமே விளைத்தால் தீருமோ எனக்கு வாட்டமே?**

**பொழிப்புரை:**

நேம பக்தியுடன் வணங்கும் அண்ணாமலையாகிய கவிக்கு உதவி செய்கின்ற நீதிமானை, கழுகுமலைத் தலத்தில் அமர்ந்துள்ள தலைவனை, மனதில் நினைக்கும்போதெல்லாம் காமம் மிகுந்து வேதனையால் துன்பப்படுகின்றேன்! மனமோ ஆசையால் மயக்கம் கொள்ளுகிறதே!! அழகுடன் விளங்கும் கடலிடத்தே மிகுதியாக எழுந்ததிரைக் கூட்டங்களே? மன்மதனுடைய போராட்ட மிகுதி யினால் கொடுமை காணப்படின் எனக்கு வாட்டம் எப்படித் தீரும்.

2. **வெள்ளித் திரையின் மேலே துள்ளித் திரியுஞ்சுறா மீனமே!**
**இனியும் உண்டோ மானமே!-கொங்கை**
**வீக்கம் கொண்டதனால் ஏற்குதில்லை அன்ன பானமே**
**அள்ளற் 1 கழிக்கரையுள் மெள்ளக் குலவிவரும் ஆமையே**
**கொடிய காமத் தீமையே-நாளும்**
**அதிகரித் திடலால் அவமதிக்கு திந்தச் சீமையே**

வெள்ளி அலைகளின் மேல் துள்ளித் திரிகின்ற சுறா மீன்களே! எனது தலைவனிடம் இனிமேலும் உண்டோ எனக்கு நாணம்! தனங்களானவை விம்மி வீங்கிக் கொண்டதனால் அன்ன பானங்கள் எனக்கு வெறுப்பாக இருக்கின்றது. சேறுகொண்ட கரையின் மேல் மெதுவாக உலவி வருகின்ற ஆமையே? கொடுமையான ஆசையினது தீ, தினமும் மீருவதனால் என்னை வெருத்து ஒதுக்குகின்றது இந்தத் தேசம்.

''மள்ள1லங் கருஞ்சேற்றிடை ஆமை கண் படுக்கும்'' - நைடதம்

**3. பொங்கு மதுமலர்கள் எங்கும் பரிமளிக்கும் புன்னையே!**
**பெற்றுவளர்த்த அன்னையே!-எந்தப்**
**போதும் வைதுவைது மோதுகிறாள் பாவி என்னையே**
**தங்குநித் திலம்புரி இங்கித வலம்புரிச் சங்கமே!**
**தென்றலும் ஒரு சிங்கமே-போலத்**
**தாக்கவே மயங்கி ஏக்கமாய் மெலிந்தேன் அங்கமே.**

பொழிப்புரை:

தேன் பிலிற்றும் மலர்களுடன் திக்கெல்லாம் மணம் கால் கொள்ளும்படியான புன்னைமரமே? என்னைப் பெற்றுவளர்த்த அன்னையானவள் எப்பொழுதும் கோபித்து ஏசித்தாக்குகிறாள், ஒளி விடுகின்ற முத்துக்களைத் தரும் ஓசை உடைய வலம்புரிச் சங்கமே? உடலில் இன்பத்தைச் செய்யும்படி மென்மையான தென்றலே. காமவேதனையை எழுப்பி ஒரு சிங்கம் போல் சீரிக்கொல்கிறது. அதனால் எனக்கு காமஇச்சையால் மிகவும் உடல் மெலிந்து போனது.

**4. மங்கைமார்கள் அதரங்கள் நேர்பவள வல்லியே!**
**'பிரி1யேன்' என்று சொல்லியே-2போன**
**வாசக் கடம்பன் வர நேசத்துடன் சொல்லுமோ பல்லியே?**
**அங்கயத்தில் நிறைபங்க யத்துள் உறை அன்னமே!**
**பிரியம் வைத்து முன்னமே-கட்டி**
**அணைத்த வேல்முருகன் தனைக் கண்காணேன் ஐயோ இன்னமே**

**பொழிப்புரை:**

பெண்களுடைய இதழ்கள் ஒத்துச் சிவந்த பவளச் கொடியே? நான் உன்னைப் பிரிந்து சென்று விடமாட்டேன் என்று சொல்லிச் சென்ற மணமுள்ள கடப்ப மாலையணிந்த முருகன் திரும்பி வருவதற்குறிய சகுனத்தைச் சொல்லுமோ பல்லியே! அழகிய தடாகத்தில் நிறைந்த தாமரை மலரில் வாழும் அன்னப் பறவையே! என்னைப் பிரியமாய் முன்னமே கண்டு ஆசை வார்த்தை அன்று சொன்ன அவரை இன்னமும் காணேனே. அதனால் வாடுகின்றேன் என்றவாறு (அதரம், நேர் பவளம்-உவமைப் பொருள் உண்மைமேல் நின்றது உவமேயமாயிற்று)

**எடுத்துக்காட்டு:**

''யா1னும் தோளியும் ஆயமும் ஆடும் துறை நண்ணி
தானும் தேரும் பாகனும் வந்தென் நலன் உண்டான்''
''தேனும் பா1லும் போல்வன சொல்லிப் 2 பிரிவானேல்
கானும் புள்ளும் கைதையு மெல்லாம் கரியன்றே''
''இனை3நலம் உடைய கானம் சென்றார்
புனை நலம் வாட்டுனரல்லர் மனைவயிற்
பல்லியும் பாங்கொத் திசைத்தன்

## தலைவி இரங்கல்

(இராகம்: சாவேரி　　　　பாட்டு - 19　　(தாளம்: அடதாளம்)

1. **நேம மாய்ப்பணியண் ணாமலைக்குதவு நீதனைக்**
**கழுகுமலை நாதனை-நெஞ்சில்**
**நினைக்க நினைக்கமிறி எனைக் கொல்லுதே காமவேதனை**
**கோமளக் கடலிலே மிகுந்த திரைக்கூட்டமே!**
**மன்மதன் போராட்டமே -செய்து**
**கோரமே விளைத்தால் தீருமோ எனக்கு வாட்டமே?**

2. **வெள்ளித் திரையின் மேலே துள்ளித் திரியுஞ்சுறா மீனமே!**
**இனியும் உண்டோ மானமே!-கொங்கை**
**வீக்கம் கொண்டதனால் ஏற்குதில்லை அன்ன பானமே**
**அள்ளற் 1 கழிக்கரையுள் மெள்ளக் குலவிவரும் ஆமையே**
**கொடிய காமத் தீமையே-நாளும்**
**அதிகரித் திடலால் அவமதிக்கு திந்தச் சீமையே**

3. **பொங்கு மதுமலர்கள் எங்கும் பரிமளிக்கும் புன்னையே**
**பெற்றுவளர்த்த அன்னையே!-எந்தப்**
**போதும் வைதுவைது மோதுகிறாள் பாவி என்னையே**
**தங்குநித் திலம்புரி இங்கித வலம்புரிச் சங்கமே!**
**தென்றலும் ஒரு சிங்கமே-போலத்**
**தாக்கவே மயங்கி ஏக்கமாய் மெலிந்தேன் அங்கமே.**

4. **மங்கைமார்கள் அதரங்கள் நேர்பவள வல்லியே!**
**'பிரி1யேன்' என்று சொல்லியே-2போன**
**வாசக் கடம்பன் வர நேசத்துடன் சொல்லுமோ பல்லியே?**
**அங்கயத்தில் நிறைபங்க யத்துள் உறை அன்னமே!**
**பிரியம் வைத்து முன்னமே-கட்டி**
**அணைத்த வேல்முருகன் தனைக் கண்காணேன் ஐயோ இன்னமே**

# கற்பியல்

## கற்பொடு புணர்ந்த கௌவை

தலைமகளை நற்றாய் இற்செறித்தியும், கடிந்தும் கொண்டமையாலும்; இரவுக்குறி இடைஈடும் அல்ல குறியும் பட்டு சந்திக்க மாட்டாது, களவுமுடிந்தது அது திங்கள் இரண்டில் ''களவென மொழிப'' என்ற மூத்தோர் சொல்லைப் பொன் போலப் போற்றி தலைவனும் தலைவியும் உடன் போக்கினர் அது

''போக்கறி உறுத்தல் போக்குடன் படாமை
போக்குடன் படுத்தல் போக்குடன் படல்

போக்கல் விலக்கல் புகழ்தல் தேற்றல் என்று
யாப்பமை உடன்போக் கிருநான்கு வகைத்தே''
என்பதாலும்

''போக்கே கற்பொடு புணர்ந்த கௌவை
மீட்சி என்றாங்கு விளம்பிய மூன்றே
வெளிப்படைக்கிளவியின் வழிபடு தொகையே''
என்ற அகப்பொருள் விளக்கத்தாலும் காண்க.

## சுரம் போக்கு

இது தலைவி தலைவனை உடன்பட்டு அவன் குறித்த இடத்திற்கு வெளிப்படையாக போனமை யான்; நற்றாய் இரங்கிச் சுரத்தின் அருமையும் தன் மகளின் மென்மையும் கூறிப் புலம்புதல் என்க.

(இதை அறியா மக்கள் அண்ணாமலைக்கவிராயருக்கு ஒரு பெண் இருந்தாள் என்றும், அவள் ஒருவனுடன் சென்றாள் என்றும், அதனால் அவர் வருந்தி பாட அவர் பாட்டே அவரை மாய்த்ததாகக்கூறும் கூற்றை விலக்குக)

பாடல் 20

**1. பாதிராத்திரி வேளையில் வீட்டுப்**
**பக்கத்தில் வந்து மேவிப் - பஞ்ச**
**பாதகன் ஒரு பாவி-சிறு**
**பாவையை மெள்ளக் கூவி-கையைப்**
**பற்றிக் 1 கூட்டிக் கொண்டேகினான் பதை**
**பதைக்குதே என்றன் ஆவி.**

**பொழிப்புரை:**

பாதி இரவான சாமவேளையில்; வீட்டின் பக்கமுள்ள தோட்டத்தில் வந்திருந்து, கொலை, களவு, காமம், சூது, கள் என்ற ஐம்பெரும் பாதகங்களையும் செய்பவனாகிய ஒரு பாவி, சிறிய பேதைப் பருவத்தினளான பாவை போன்ற மெல்லிய இயல்புடைய என் மகளை மெதுவாகக் கூப்பிட்டு கையைப்பிடித்துக் கூட்டிக்கொண்டு காட்டுக்கு போயினமையான்; என் மனமும் ஆவியும் பதைத்துத் துன்புறுகிறதே.

**எடுத்துக்காட்டு**

''கே1ளாய் வாழியே மகளை நின் தோழி
முடங்கு தாள்ளுதைத்த புலங்களு பூமி
அஞ்சுபரத்தருன கான நீத்தித்
கல்லன் சீறுர் ரெல்லா மின்னசையே எனவும் -அகம்

''திருநகர் 1 வரைப்பகம் புலம்ப அவனோடு
பெருமலை இறந்தது நேர் வேனோவல்
கடுங்கண் யானை நெடுங்கை சேத்தி
பெரும்பலர் விடியல் விரிந்து வெயிலறிப்பக்
கருந்தார் மிடற்ற செம்பூள் சேவல்
சிறுபொன் பெடையோடு குடைமான் கண்
கன்று காணாது புன்கண்ண செவிசாய்த்து
மன்று நிறை பயிதல்கூற பலவுடன்
கறவை தந்த கடுங்கண் மறவர்
முதுவாய்ப் பெண்டின் செதுகற்குரம்பை
மடமயிலென்ன வென்நடை மலிபேதை
தோட் டுணையாக துயிற்ற துஞ்சாள்
வேட் கள்வர் வசியுறு கடுங்கட்
சேற் கோளரையும் தண்ணுமை
கேட்குனள் கொள்லெனக் கலுழுமென் நெஞ்சே - அகம்

2. **சோதனைப் பிரகாரமாய் என்னைத்**
**தொடர்ந்ததே பெருந் தோஷம்! எவர்**
**சூதினால் வந்த மோசம்!-இனித்**
**தொலையுமோ பிள்ளைப் பாசம்?-இதைச்**
**சுற்றத்தார் அறிந்தால் எனக்கு முன்**
**சொல்வரே பரிகாசம்**

**பொழிப்புரை:**

சோதனையின் பயனாக என்னைத் தொடர்ந்து நின்றதே; முன் பிறப்பால் வந்தபெரும் தோசம். இது எவருடைய சூழ்ச்சியினால் வந்ததோ இந்த மோசம். இனி மேலாயினும் தொலைந்து போகுமோ பிள்ளைப் பாசம். இப்படிப்பட்ட செயலை என்னுடைய சுற்றத்தார் அறிந்தால் எனக்கு முன் வடுப்பேசி நகைத்துப் பரிகசிப்பரே, அதனை எப்படிப் பொறுத்துக் கொள்வேன்.

(கேள்வியும் காணுதலும் அறிவுக்குப் புலன் விருந்தாகலின் அவற்றை அறிவில் வைத்தோதினார்)

**3. தேன் இலங்கிய காவனந் திகழ்**
**சென்னிமா நகர் வாசன்-துதி**
**செய் அண்ணாமலை தாசன்-செப்பும்**
**செந்தமிழ்க் கருள் நேசன்; தினம்**
**சிந்தனை செய்யுந் தொண்டர் தீவினை**
**தீர்த்திடும் முருகேசன்.**

தேன் கசியும்படியான பூஞ்சோலைகள் விளங்குகின்ற சென்னி குளமாகிய பெரிய நகரத்தில் வாழ்ந்து, துதிப் பாடல்களால் போற்று கின்ற அண்ணாமலைத் தொண்டன் சொல்லிய சிந்துப் பாடலான செந்தமிழுக்கு அருள் பாலிக்கும் அன்பனானவன். தினமும் சிந்திக் கின்ற அடியவர்களின் தீவினையை போக்கியருளும் திருமுருகப்பெருமான்.

**4. நானிலம் புகழ் கழுகுமாமலை**
**நாயகன் பாண்டி நாட்டில் - நெஞ்சில்**
**நாணம் விட்டுத் தன் பாட்டில்-வெப்பம்**
**நண்ணிய பாலைக்காட்டில்-மகள்**
**நடக்க வேண்டிமுன் அடக்க மாய்த்தெய்வம்**
**லபித்ததோ1 மண்டை ஓட்டில்**

நான்கு நிலங்களான குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகியவை ஒருங்கு இணைந்து புகழப்படும் படித்தான கழுகுமலையில் வாழ்ந்து வரும் நாயகனாம் முருகன் பாண்டிநாட்டை இடமாகக் கொண்டவன் (முருகப்பெருமான்; சோமசுந்தரப் பாண்டி யனுக்கும் தடாதகைப் பிராட்டிக்கும் உக்ரமபாண்டியராகத் திரு அவதாரஞ்செய்தார். பாண்டிய நாட்டை ஆண்டருளினார் என்பது. திருவிளையாடலாதலின் கவிஞர் அந்த புராணச் செய்தியை மனதிற் கொண்டருளினார்) மனதில் நாணம் விட்டுத் தன் மனம்போல சூடுமிகுந்த பாலைக்காட்டிடத்தில் எனது அருமை மகள் நடக்கும்

படியாக அடக்கமாக முன்னமே பிரமனால் எழுதப்பட்டதோ அவளுடைய தலையில். (தெய்வம் என்பது பிரமன்)

**எடுத்துக்காட்டு**

''ஒரு1மகளுடையயேன் மன்னையவளும்
செருமி மொய்ம்பிற் கூர்வேல் காளையோடு
பெருமலை யருஞ்சுரம் நெருநட் சென்றனள்
இனிய தாங்கும் நின்னவலம் மென்றீந்துமற்
றியாங்கல் மொல்லுமே அறிவுடையீரே
உள்ளின் உள்ளம் வேமே'' - நற்றிணை

5. **மையல் கொண்டொரு பையல் பின்செல**
**வயது மீறின மாதோ?-இந்த**
**மார்க்கம் தோன்றின தேதோ?-சென்ம**
**வாசனைப் பலன் ஈதோ?-ஐயோ!**
**மாதம் பத்துஞ் சுமந்து பெற்ற! என்**
**வயிறும் தான் எரியாதோ?**

**பொழிப்புரை:**

காம மயக்கம் கொண்டு ஒரு இளைஞன் பையல்-பயல் பின் செல்லும் படியான வயது வந்தபெண்ணல்லவே என் மகள். இப்படி ஒரு வழி தென்பட்டது எதனால்! சென்ம வாசனையால் வந்த கருத்தாயிருக்குமோ ஐயையோ! பத்து மாதங்கள் சுமந்து பெற்ற என் வயிறு எரியாமலிருக்க முடியுமோ! அதனால்மனம் நோகுகின்றேனே?

மனதை வயிறாக உபசரித்தார். (எரியாதோ என்பது நிகழ்கால வினை எச்சம் எதிர்காலம் போல வினா ஏற்றது)

**எடுத்துக்காட்டு :**

''1அந்த நீழிடை அயனோடு போகிய
முத்தூர் இவண்முன் மகிழ்நகை மட்வரல்
தாயா ரென்னும் பெயர வல்லா ரெடுத்தேன்
மன்ற யானே - ஐங்குருநூறு

6. **செய்ய பஞ்சணை1யும் பொறாது**
**சிவந்து கொப்பளம் ஆகும்-நெரிஞ்-**
**சிப்பழம் என்று நோகும்-அவள்**
**சீறடி ரெண்டும் வேகும்-படி**
**தீயுங்2கானலில் காயும் வேனிலாம்**
**தீயில் எப்படிப் போகும்**

செம்மை வாய்ந்து மென்மையான பஞ்சணை மெத்தை மேல் பட்டாலும் பொறுக்கலாற்றாது நொந்து கொள்வாளே! அப்படிப்பட்ட இளையவளான அவள்;

சிற்றடிகள் இரண்டும் வெந்துபோம்படி அனல் வீசும் கானகத்தில் வேனிற்காலத்தில் தீப் போன்ற வெப்பம் கூடிய வெயிலில் எப்படி நடந்து போவாள்?

**எடுத்துக்காட்டு :**

''அனிச்சமும் அன்னத்தின் தூவியும்
மாதரடிக்கு நெருஞ்சிப் பழம் - குறள்
''தாமே தமக்கொப்பு மாற்றில்லவர். தில்லைத் தண்ணனிச்சம்
பூமேன்மிதிக்கினும் பதைத்தடி பொங்குரேங்கா
யெரியுமிழ் தீமே லயில்போற் செறிபரற் கானிற் சிலம்படிபா
போமே நடக்க வருவாளையேன் பெற்ற அம்மனைக்கே'' - திருக்கோவையார்

''ஞாயிறு காயாது மாநிழற் பட்டு
மாலை முதற் சிறு தெறிமனன் மிகுத்தா அய்த்
தண் மழை காலையின் றாக நந்தீத்து
சுடர்வாய் நெடுவாற் காளை யொடு
மட வரலறிவை போகிய சுரனே''
''அரக்1காம்பனாறும் வாயம் மருங்கிற் கன்னோ
பரக்கான் மற்றின கொல்லோ-அரக்காந்த
பஞ்சு கொண்டூட்டினாலும் பையென பையெனவென்
றஞ்சிப்பின் வாங்குமடி'' –நாலடியார்

என்பவற்றாலும் அறியலாம்.

**7. தேடினுங் கிடை யாததாகிய**
**திரதவியக் கருவூலம்-போலே**
**செனித்த பெண்ணுக்குச் சீலம்-வேறே**
**திரும்பின தென்ன காலம்?-கொங்கை**
**திரண்டிடா முன்னம் மருண்டிடற்கெவன்**
**செய்தானோ இந்த்ர சாலம்?**

**பொழிப்புரை:**

தேடி வருந்தினும் கிடைக்க மாட்டாத திரவியத்தை ஒத்தவள். எனது வயிற்றில் பிறந்த பெண்ணாள் அவளுக்கு நல்லொழுக்கம் வரவேண்டியதிருக்க வேறுவழியில் திரும்பியது என்ன காரணத்தி னாலோ, முலைகள் திரளாத இளம்பெண்ணான அவள் மருண்டு துன்புறும்படியாக எவனோ செய்துவிட்டான் இந்திரசால மயக்கம்.

(தாய் தன்மகனைச் சிறு பெண் போல் கூறுவது அவள் மென்மை நோக்கி யென்க)

**எடுத்துக்காட்டு :**

''உவக்கின்றவல்லி மலரத்தாளன் கண்களில் ஒற்றிக் கண்கள்
சிவக்கின்றதற்குமுன்னே சிவந்தேறும் செயலதன்றோ
பவக்குன்றிடிப்ப ஆரூர் தியாகப்பனி வரைமேல்
நிவக்கின்ற வெஞ்சுரத்தே சென்றவாறென் றிலைப்பதுவே
-திரு. ஆரூர்கோவை

8. **காடு சேர்க்கையில் 1கரடி வேங்கைகள்**
**காட்டுமே ஆரவாரம்-அதைக்**
**காதிற் கேட்டு விசாரம்-வைத்துக்**
**கலங்குவாள் அந்த நேரம்-என்றன்**
**காதலி தன்னை ஆதரித்துயிர்**
**காப்பதே வேலன் பாரம்**

**பொழிப்புரை:**

அவள் சொல்லுகின்ற அடர்ந்த காடுகளிடத்தில். கரடியும், வேங்கைப் புலியும் ஆரவாரஞ்செய்து சத்தங் காட்டுவதை அவள் காதிற் கேட்டுப்பயந்து நடுங்கி மன வேதனை கொண்டு கலங்குவாள். அந்த நேரத்தில் என்னுடைய பிரியமுள்ள மகளை அருள் கூர்ந்து அவள் உயிரைக் காப்பது வேலாயுதக் கடவுளின் பொறுப்பாகும். என்றவாறு.

இக்கவி அடிமோனைத் தொடை முழுவதுமாகி, யாப்பிலக் கணக்குறி கொண்டது.

**எடுத்துக்காட்டு :**

''முலைக்கண்ணும் முத்தம் முழுமெயும் புல்லும்
இலக்கணம் யாதும் அறியேன்-கலைக்கணம்
வேங்கை வெருஉ நெறி செயை போலும்
பூம்பாவை செய்த குறி'' - நாலடியார்

(இராகம்: பைரவி பாட்டு - 20 (தாளம்: ரூபகம்)

**பாதிராத்திரி வேளையில் வீட்டுப்**
**பக்கத்தில் வந்து மேவிப் - பஞ்ச**
**பாதகன் ஒரு பாவி-சிறு**
**பாவையை மெள்ளக் கூவி-கையைப்**
**பற்றிக் கூட்டிக் கொண்டேகினான் பதை**
**பதைக்குதே என்றன் ஆவி.**

2. சோதனைப் பிரகாரமாய் என்னைத்
தொடர்ந்ததே பெருந் தோஷம்! எவர்
சூதினால் வந்த மோசம்!-இனித்
தொலையுமோ பிள்ளைப் பாசம்?-இதைச்
சுற்றத்தார் அறிந்தால் எனக்கு முன்
சொல்வரே பரிகாசம்

3. தேன் இலங்கிய காவனந் திகழ்
சென்னிமா நகர் வாசன்-துதி
செய் அண்ணாமலை தாசன்-செப்பும்
செந்தமிழ்க் கருள் நேசன்; தினம்
சிந்தனை செய்யுந் தொண்டர் தீவினை
தீர்த்திடும் முருகேசன்.

4. நானிலம் புகழ் கழுகுமாமலை
நாயகன் பாண்டி நாட்டில் - நெஞ்சில்
நாணம் விட்டுத் தன் பாட்டில்-வெப்பம்
நண்ணிய பாலைக்காட்டில்-மகள்
நடக்க வேண்டிமுன் அடக்க மாய்த்தெய்வம்
லபித்ததோ1 மண்டை ஓட்டில்

5. மையல் கொண்டொரு பையல் பின்செல
வயது மீறின மாதோ?-இந்த
மார்க்கம் தோன்றின தேதோ?-சென்ம
வாசனைப் பலன் ஈதோ?-ஐயோ!
மாதம் பத்துஞ் சுமந்து பெற்ற! என்
வயிறும் தான் எரியாதோ?

6. செய்ய பஞ்சணை1யும் பொறாது
சிவந்து கொப்பளம் ஆகும்-நெரிஞ்-
சிப்பழம் என்று நோகும்-அவள்
சீறடி ரெண்டும் வேகும்-படி
தீயுங்2கானலில் காயும் வேனிலாம்
தீயில் எப்படிப் போகும்

7. தேடினுங் கிடை யாததாகிய
திரவியக் கருவூலம்-போலே
செனித்த பெண்ணுக்குச் சீலம்-வேறே
திரும்பின தென்ன காலம்?-கொங்கை
திரண்டிடா முன்னம் மருண்டிடற்கெவன்
செய்தானோ இந்த்ர சாலம்?

8. **காடு சேர்க்கையில்! கரடி வேங்கைகள்**
**காட்டுமே ஆரவாரம் – அதைக்**
**காதிற்கேட்டு விசாரம் – வைத்துக்**
**கலங்குவாள் அந்த நேரம் – என்றன்**
**காதலி தன்னை ஆதரித்துயிர்**
**காப்பதே வேலன் பாரம்.**

# பொதுவியல்

சுரம் போகிய கருத்தொருமித்த காதலர் இருவர் சுரம்போக்கு இடையீடுபட்டும் படாதும் தன் மனையும், அவள் மனையும் வந்து திருமண வரைவேற்பட்டு கற்பினால் கலந்தபின், ஓதற்பிரிவும் துதிற்பிரிவும், துணைவயிற்பிரிவும், காவற்பிரிவும், பொருள் வயிற் பிரிவும் கொண்டு அதனால் தலைவன் நீடித்திருந்தமைகண்டும் தலைவிதன் சிறு பிராயத்தே தன்னைத் தோய்ந்துசென்ற தலைவனை தோழிக்குக் கூறி இரங்கியதாகக் கூறிய பாடல் ஒன்றும், பின்பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனுடன் ஊடும் பாடலொன்றும், அமைகிறது. அதன்பின் பொதுவியலில் தலைவி கருத்தரித்து, மகவீன்று வெள்ளாடை அணிந்து அழகுகுன்றியஉடன் தலைவன் தலைவியுடன் சேர்க்கை இல்லாது வேறு மாதரோடு கூடிக்கலந்து கிடக்கின்ற தலைவனை நினைந்தும், அவனைக் கண்ணுற்றும், தன்னை அவன் கண் பாராது போகின்றமை குறித்தும், தன் மகவைப் பழித்துக் கூறிவருந்தும், பாலனைப் பழித்தல் என்ற தலைப்பில் பாடல் ஒன்றும் வேறு மாதிரியாக பாட்டுடைத் தலைவன் உலவ வரும் போது அவன் எழில் தலைவியின் நிலைமையைச் செவிலித்தாய் தலைவனுக்கு உணர்த்தும் பாடலும் அடங்கும். இவை தத்துவத்தால், சீவான்மா - பரமான்மாவை கூடும்படியான செயல்பாட்டிற்கு எடுத்துக்காட்டாம்.

## தலைவி தன்னை சிறுபிராயத்தே தோய்ந்து பிரிந்த தலைவனை நினைந்து இரங்கிக் கூறுதல்.

பாட்டு 21

## தலைவனது பிரிவாற்றாமையால் தோழியிடம் தலைமகள் இரங்கியது:

1. **மஞ்சு நிகர் குந்தள மின்ன**
**சத தளங்கள் விக சிதஞ் செய்**
**வாரிசாதனத்தில் வாழ் பொன்னே! - செய்ய**

**வன்னமே ஒளிர்ச் சொன்னமே! நடை**
**அன்னமே ! இடைப் பின்னமே பெற**
**வந்ததன பார வஞ்சியே!**
**அதி விருப்பத்துடனுரைக்கும்**
**வார்த்தையைக் கேள் ஆசை மிஞ்சியே**

**பொழிப்புரை:**

கருமேகத்தை ஒத்த கூந்தலின் கருநிறம் ஒளிவிடும் படியாக விளங்குபவளே, பற்பலவாய் விசித்திர அழகுடன் கூடிய நூறு இதழ் பொலிவுடன் மலர்ந்து மணக்கும் தாமரை மலரிடத்தே வாழும் பொன்னான இலக்குமி போன்றவளே! செம்மையான வண்ண ஓவியம் போன்றவளே! ஒளிவிடும் பொன்னைப்பெறும்படியான திரண்ட தனபாரங்கள் வறுத்தும் படியான வஞ்சிக்கொடி போன்ற இடை நுடங்கும் பெண்ணே!எனது தோழியே? அதிகவிருப்பத்துடன் நான் சொல்லும் மிகுந்த வார்த்தையைக் கேட்டு எனக்குப் பதில் உரைப்பாயாக!!

2. **அஞ்சு வயதான பருவந்**
**தனில் எனது சிறு மனைமுன்**
**அங்கச வேள் போல உருவம் - பெற்றே**
**அன்றுவந்து நயந்து மாலையில்**
**நெஞ்சழிந்து மயங்கவே புணர்**
**ஆறுமுக வேலவனையே**
**நினைவு1கொண்டே, மதி மருண்டே**
**ஆறுதில்லை, என்ன வினையே!**

**பொழிப்புரை:**

அஞ்சும்படியான வயதுடைய சிறிய அறியாப் பருவந்தன்னில் என்னுடைய சிறு வீட்டின் முன் உருவமில்லாத காம வேள்போன்று அழகுடன் அங்கு வந்தான்; என்னை நயந்து மாலை நேரத்தில் மாலை தந்து நெஞ்சின் எண்ணங்கவர்ந்து என்னைப் புணர்ந்து போயின ஆறுமுக வேலவனான அவனை, நினைவு கொண்டதினால் அறிவு அழிந்து அமைதி இல்லாது துன்புறுகின்றேன், இது என்ன வினை யினாலோ (இறைவன் சிறுபிராயத்தில் தன்னைக் கொண்டருளினான் என்பது) அஞ்சுவயதானபேதைப் பெண்பருவம் என்பதாகும்.

**எடுத்துக்காட்டு :**

''அஞ்சுவயதினிலே அறியாப்பருவத்திலே
கொஞ்சி மகிழ்ந்தானடி-குகனைக்
கூட்டி வருவாயடி - பிறர்

''மணி1நிறம் தீர்ந்தபெரும் பணைத் தோள் வீங்க
மணி மாலை நாடன் வருவன் கொல் தோழி
கணிநிறைவேங்கை மலர்ந்து வண்டார்க்கும்
மணிநிற மாலைப்பொழுது'' - திணைமொழி

''புள்ளும் புலம்பின பூவும் கூம்பின
கனலும் புலம்பு னனியுடைத்தே வானமும்
நம்மே போலும் மம்மர்த்தாகி
எல்லை களியப் புல்லன் றன்றே
இன்று முளேன் தோழி இன்னிலை
தன்னிய கமழும் ஞாழல்
தண்துறை வர்க்கு உரைக்குனர்பெறிநே
-குறுந்தொகை

3. என்னிரண்டு கண்ணுந் தேடுதே
கனவி னிலும் மனது நினைந்-
தேக்கமுற் றலைந்து வாடுதே-முன்னம்
என்றன் ஆகம தொன்றவே புணர்ந்(து)
அன்று போன குகன்றன் ஆவலை
எண்ணி யெண்ணி என்ன பயனே?
உருகி நிதம் மருகி விழ
இப்படி விதித்தான் அயனே

என்னுடைய இரண்டு கண்களும் தேடுகின்றனவே! இரவில் கனவு வரும் போதெல்லாம் என் மனது அவனை நினைந்து ஏக்கங் கொண்டு அலைந்து தேடிக் காணாமையால் வாடுகிறதே. முன்பு எனது உடலை இறுகத் தழுவி கலவி செய்து எனக்கு இன்பம் தந்து அன்று போனவனான குகப் பெருமான் அன்பை எண்ணி எண்ணி என்ன பயனாகும். அதனால் உடலும் உயிரும் உருகி நாளும் வாடி விழும்படி யான இப்படிப்பட்ட நிலைமையை விதித்தானே நான்முகன்.

**4. சென்னி குளம் மேவிய வாசன்**
**இனிய துதி அனுதி னமும்**
**செய்திடும் அண்ணாமலை தாசன்-பாடும்**
**சிந்துமீது மிகுந்த மோகமு-**
**றுஞ் சுசீல குகன் சரோருக**
**திவ்விய முகங்கள் ஆறுமே**
**கண்களிற் கண்டால் பெண்களுக் கெல்லாம்**
**செவ்விதழும் வாயும் ஊறுமே.**

**பொழிப்புரை:**

சென்னிகுளத்திற் பிறந்து அருட் துதி தினமும் பண்ணுகின்ற அண்ணாமலைத் தொண்டன், பாடுகின்ற காவடிச்சிந்துப்பாடலின் மீது மிகுதியான அன்பு நிலைத்த செயலை எவரும் எண்ணும்படியாக அருள் இரக்கங் கொண்டுள்ளவனை, இனிய தாமரை மலர் போன்ற ஆறுமுகங்களுடையவனை கண்களினால் கண்டால் எல்லாப் பெண்களுக்கும் செவ்விதழும் வாயும் ஊறி அவனைக் கூட வேண்டும் போல் ஆசை பிறக்கும் என்றவாறு. (சரோருகம்-தாமரை)

## தலைவனது பிரிவாற்றாமையால் தோழியிடம் தலைமகள் இரங்கியது

(இராகம்: செஞ்சுருட்டி பாட்டு - 21 (தாளம்: ரூபகம்)

1. **மஞ்சு நிகர் குந்தள மின்ன**
   **சத தளங்கள் விக சிதஞ் செய்**
   **வாரிசாதனத்தில் வாழ் பொன்னே! செய்ய**
   **வன்னமே ஒளிர்ச் சொன்னமே! நடை**
   **அன்னமே ! இடைப் பின்னமே பெற**
   **வந்ததன பார வஞ்சியே!**
   **அதி விருப்பத்துடனுரைக்கும்**
   **வார்த்தையைக் கேள் ஆசை மிஞ்சியே**

2. **அஞ்சு வயதான பருவந்**
   **தனில் எனது சிறு மனைமுன்**
   **அங்கச வேள் போல உருவம்பெற்றே**
   **அன்றுவந்து நயந்து மாலையில்**
   **நெஞ்சழிந்து மயங்கவே புணர்**
   **ஆறுமுக வேலவனையே**
   **நினைவு1கொண்டே, மதி மருண்டே**
   **ஆறுதில்லை, என்ன வினையே!**

3. **என்னிரண்டு கண்ணுந் தேடுதே**
   **கனவி னிலும் மனது நினைந்-**
   **தேக்கமுற் றலைந்து வாடுதே-முன்னம்**
   **என்றன் ஆகம தொன்றவே புணர்ந்(து)**
   **அன்று போன குகன்றன் ஆவலை**
   **எண்ணி யெண்ணி என்ன பயனே?**
   **உருகி நிதம் மருகி விழ**
   **இப்படி விதித்தான் அயனே**

4. **சென்னி குளம் மேவிய வாசன்**
**இனிய துதி அனுதி னமும்**
**செய்திடும் அண்ணாமலை தாசன்-பாடும்**
**சிந்துமீது மிகுந்த மோகமு-**
**றுஞ் சுசீல குகன் சரோருக**
**திவ்விய முகங்கள் ஆறுமே**
**கண்களிற் கண்டால் பெண்களுக் கெல்லாம்**
**செவ்விதழும் வாயும் ஊறுமே.**

## பாட்டு 22 பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனுடன் தலைவி ஊடியது.

1. **செந்தூர் வளர்முருக நாதா! - அருணோதயச்**
**செந்தா மரைநிகரும் பாதா! -திகழ்**
**சிந்தையில் அண்ணாமலை செய்**
**நிந்தையை எண்ணா தருள்செய்**
**சித்திரவேல் கர விநோதோ!வஞ்சச்**
**செய்கை இன்னமுந் தெரியாதோ?**

**பொழிப்புரை:**

திருச்செந்தூர் தங்கும் முருகனே! மும்மூர்த்திகளுக்கும் நாயகனே! காலைக்கதிரவனால் மலரும் சிவந்த அழகுள்ள நலம் பொருந்திய தாமரைமலர் போன்ற செவ்விய திருவடிகளை உடையவனே. சிந்தையில் அமர்ந்து அண்ணாமலை கவிசெய்த குற்றத்தைப் பொருட் படுத்தாது அவருடைய திருப்பாட்டிற்கு இரங்கி அருள் செய்பவனே. சித்திர வேலைப்பாடு கொண்டவேலாயுதத்தைக் கையிலே ஏந்தும் வினோதனே. உனது வஞ்சகமான செய்கை இன்னமுமா நான் தெரியாமல் இருக்கின்றேன் ''தகரவயிலை விடுவோனே'' - திருப்புகழ் (வித்தகவேல்)

2. **சந்தோஷ மாகவே போய்வீடு-வீடுகள் தோறும்**
**சரசங் கொண்டாடுவதே பாடு-வந்துன்**
**தன்னுடனேசேர் பிரியக்**
**கன்னியர்கள் பேர் வரியச்**
**சகஸ்திரம் வேணுமே வெள்ளேடு-தனித்தோரிடம்**
**தங்கியே மேயுமோ வெள்ளாடு?**

மகிழ்ச்சியுடன் சென்றுவீடுகள் தோறும் கன்னிப் பெண் களோடு சரசங்கொண்டாடுவதே உன்வேலை. உன்னுடன் வந்து

பிரியமுடன் கூடுகின்ற பெண்கள் பெயரை எழுதவேண்டுமாயின் ஆயிரம் வெள்ளேடு ஆகும். தனித்து ஒரு இடத்தில் மேயுமோ வெள்ளாடு. அதுபோல நீயும் என்னுடன் மட்டிலும் இருப்பாயா! இருக்கமாட்டாய் இது தெரிந்ததுதானே.

**3. வேசை1யர் வாசலில் சென்று-தம்பலங்களை**
**வெட்கமில்லாமல் வாங்கி மென்று-தின்று**
**மெத்தப் பயித்தியங் கொண்டு**
**சுற்றித்திரிந்தே மருண்டு**
**வீடுதேடி வந்தாயே இன்று-தொடவே மாட்டேன்**
**வேணும் என்றாலும் போடு கொன்று.**

**பொழிப்புரை:**

பரத்தையர் மனைகளிற் சென்று; அவர் எச்சிலாகிய வெற்றிலையை மானமில்லாமல் வாங்கி மென்று தின்று. அவர்மேல் மிகவும் மயக்கம் கொண்டு அந்தப் பெண்கள் பின்னாலேயே சுற்றித்திரிந்து, பெரு மருட்சி கொண்டு நீ இப்போது வீடுதேடி வந்தாய்! இன்று உன்னை தொடவே மாட்டேன்; என்னை வேண்டுமென்றாலும் கொன்று போடு.

**எடுத்துக்காட்டு:**

“1கண்ணுயுடையார் எல்லாம் பொது வுண்பர்
நண்ணேன் பரத்தனின் மார்பு - குறள்

**4. ஆசை கொண்டவர்க்கு ரோசம் கிடையா தென்பார்**
**அப்படி காகில் விசுவாசம்-வைக்கும்**
**அந்த விலைப் பெண்டுகளைச்**
**சொந்த மென கொண்டனையே**
**ஆனாலும் எனைப்போல மோசம்போனவர் உண்டோ?**
**ஆரும் செய்கிறாரே பரிகாசம்.**

காம ஆசை கொண்டவர்க்கு ரோசம் இருக்காது என்பது உண்மையாக இருக்கிறதே? அப்படிக்கொத்த காதல் விசுவாசங் கொண்டுவிட்டாய் போலும் காதல்பரத்தை சேரிப்பறத்தை காமக் கிழத்தி, பின்முறைவதுவை என்ற இனத்திலுள்ள விலை மாதர்களை எல்லாம் நம்பிக் கொண்டுவிட்டாய்; ஆனாலும் என்னைப்போல ஏமாந்தவள் வேறுயாரும் இருக்கமாட்டார்கள், ஆக ஊரிலுள்ளோர் எல்லாம் என்னைப் பரிகாசம் செய்கிறார்கள்.

5. **கந்தா செய்யாதே பலவந்தம் புதுமலரைக்**
**கசக்கி அறிவார்களோ கந்தம்?-சற்றும்**
**காதலிலா மற் சினந்த**
**மாதை வலியப் பிடித்துக்**
**கலந்தால் வருமோ சுகானந்தம்? உனக்கெனக்கும்**
**கனவிலும் இல்லை இனித் தொந்தம்.**

கந்தனே என்னை பலாத்காரம் செய்யாதே. புதியமென்மலரை கசக்கி முகந்தால் கிடைக்காது நல்ல மணம். அதுபோல சிறிதும் ஆசையில்லாமல் கோபித்த எனதுகையை வலியப் பிடித்து அணைத்து கசக்கினால் வந்துவிடுமோ? நல்ல ஆனந்தம்; இனிமேல் உனக்கும், எனக்கும் உடலுறவே கனவிலும் கூடக்கிடையாது.

6. **எந்தப் பிறப்பினுமே வல்லி-உன்னையல்லாமல்**
**எவளையும் சேரேன் என்று சொல்லி-ஊரில்**
**எத்தனை பரத்தை யையோ**
**நித்தமும் அணைத்தனையோ?**
**இப்படிக் காசி காஞ்சி டில்லி-கன்யாகுமரி**
**எங்கு பார்த்தாலும் இல்லை சல்லி.**

**பொழிப்புரை:**

எந்தப் பிறப்பினும் வல்லிக்கொடி போன்ற பெண்ணே உனை அல்லாது வேறு யாரையும் கண்ணாலே பாரேன் என்று சொல்லிவிட்டு; ஊரில் எத்தனையோ விலை மாதரோடு உறவு கொண்டு திரிகின்றனை; இப்படியான உன் போல் காசி, காஞ்சி , டில்லி, கன்னியாகுமரி எந்த இடத்தில் பார்த்தாலும் போக்கிரி இல்லை.

7. **கங்குகரை இல்லையே சாடை- சொல்லிவைபவர்**
**கட்டுகிறாயே எதற்கு ஆடை? - மானம்**
**காக்க வல்ல வா? என் பாலே**
**சேர்க்கை யி லாதே அன் பாலே**
**காத்தாயே வேசை1மாதர் மேடை-கைவசமாமோ**
**கலப் புல்லுத் தின்னாலுமே காடை?**

ஓர் அளவில்லாமல் மக்கள் கூட்டம் உன்னைச் சாடையாக வைது பழிக்கிறார்கள். நீ கட்டுகிற ஆடை மானத்துக்காக அல்லவா? என்னோடு சேர்க்கை கொள்ளாது, வேசையர் மேல்அன்புடன் காத்துக் கொண்டிருக்கிறாயே இன்னும். அவரோடு கூடுவதற்கு அவர் வீட்டுமாடிக்கு அலைகின்றனையே? காடை கலப்புல்லுத்தின்றாலும்

கைவசமாமோ!என்ற பழமொழிக் கொப்ப அவர்கள் உனக்குச் சதமாவார்களா? என்ன?

**எடுத்துக்காட்டு:**

''1பொருட் பெண்டிர் பொய்மை முயக்கம் இருட்டறையில்
ஏதிற் பிணந்தழீஇயற்றூ'' - குறள்

8. **குங்குமம் சந்தனஞ் சவ்வாது சுகந்தம்**
**குமுகுமென் றேபுயத்தின் மீது-வாசம்**
**கொட்டுது எழில் நெற்றி சந்தப்**
**பொட்டொடுப கட்டுது இந்தக்**
**கோலம் புதிதாய் வந்ததேது? -நடந்ததெல்லாம்**
**கொஞ்சம் சொல்வாய் பண்ணாதே சூது.**

குங்குமத்துடன் சந்தனமும், சவ்வாதும், கமழும்படியாக அழகிய தோளின்மீது சுகந்தமலர்க் கதம்பங்களை அணிந்து கொண்டு, வாசனையுடன் அழகு கொண்ட பொட்டுடன் அலங்கரித்துக் கொண்டு, பகட்டுடன் புதிதாகத் திரிகின்றனையே1 இது எதனால் ? உனது செயல் என்ன என்பது எனக்குத் தெரிகிறது. நடந்தவைகளை எல்லாம் கொஞ்சமாவது ஒளிக்காமல் சொல்லிவிடு என்றவாறு.

## தலைவியின் ஊடல்

(இராகம்: செஞ்சுருட்டி பாட்டு - 22 (தாளம்: சாப்பு)

1. **செந்தூர் வளர்முருக நாதா! - அருணோதயச்**
**செந்தா மரைநிகரும் பாதா! -திகழ்**
**சிந்தையில் அண்ணாமலை செய்**
**நிந்தையை எண்ணா தருள்செய்**
**சித்திரவேல் கர விநோதோ!வஞ்சச்**
**செய்கை இன்னமுந் தெரியாதோ?**

2. **சந்தோஷ மாகவே போய்வீடு-வீடுகள் தோறும்**
**சரசங் கொண்டாடுவதே பாடு-வந்துன்**
**தன்னுடனேசேர் பிரியக்**
**கன்னியர்கள் பேர் வரியச்**
**சகஸ்திரம் வேணுமே வெள்ளேடு-தனித்தோரிடம்**
**தங்கியே மேயுமோ வெள்ளாடு?**

3. **வேசை1யர் வாசலில் சென்று-தம்பலங்களை**
**வெட்கமில்லாமல் வாங்கி மென்று-தின்று**
**மெத்தப் பயித்தியங் கொண்டு**

சுற்றித்திரிந்தே மருண்டு
வீடுதேடி வந்தாயே இன்று-தொடவே மாட்டேன்
வேணும் என்றாலும் போடு கொன்று.

4. ஆசை கொண்டவர்க்கு ரோசம் கிடையா தென்பார்
அப்படி காகில் விசுவாசம்-வைக்கும்
அந்த விலைப் பெண்டுகளைச்
சொந்த மென கொண்டனையே
ஆனாலும் எனைப்பொல மோசம்போனவர் உண்டோ?
ஆரும் செய்கிறாரே பரிகாசம்.

5. கந்தா செய்யாதே பலவந்தம் புதுமலரைக்
கசக்கி அறிவார்களோ கந்தம்?-சற்றும்
காதலிலா மற் சினந்த
மாதை வலியப் பிடித்துக்
கலந்தால் வருமோ சுகானந்தம்? உனக்கெனக்கும்
கனவிலும் இல்லை இனித் தொந்தம்.

6. எந்தப் பிறப்பினுமே வல்லி-உன்னையல்லாமல்
எவளையும் சேரேன் என்று சொல்லி-ஊரில்
எத்தனை பரத்தை யையோ
நித்தமும் அணைத்தனையோ?
இப்படிக் காசி காஞ்சி டில்லி-கன்யாகுமரி
எங்கு பார்த்தாலும் இல்லை சல்லி

7. கங்குகரை இல்லையே சாடை- சொல்லிவைபவர்
கட்டுகிறாயே எதற்கு ஆடை?-மானம்
காக்க வல்ல வா? என் பாலே
சேர்க்கை யி லாதே அன் பாலே
காத்தாயே வேசை1மாதர் மேடை-கைவசமாமோ
கலப் புல்லுத் தின்னாலுமே காடை?

8. குங்குமம் சந்தனஞ் சவ்வாது சுகந்தம்
குமுகுமென் றேபுயத்தின் மீது-வாசம்
கொட்டுது எழில் நெற்றி சந்தப்
பொட்டொடுப கட்டுது இந்தக்
கோலம் புதிதாய் வந்ததேது? -நடந்ததெல்லாம்
கொஞ்சம் சொல்வாய் பண்ணாதே சூது.

## பாலனைப் பழித்தல்

பாட்டு - 23 கைக்கிளை

(பழித்தல் என்பதை தஞ்சை வாணன் கோவை உரையாசிரியரான சொக்கப்ப நாவலர் புகழ்தல் என்றார்)

1. **அங்கத்திற்கு பசப் பாச்சே! - அழகு**
**அவ்வளவுங் குடிபோச்சே!-முந்தி**
**ஆதிபிர மாவகுத்த சோதனையினால் உதித்த**
**தையோ! இதும் பொய்யோ?**
**தங்கக் கிண்ணங்கள் போலே-மின்னு**
**தனங்களுஞ் சாய்ந்த -தாலே- கந்தன்**
**தன்னை மருவிச்சுகித்த கன்னியற்குளெல்லாம் மெத்தத்**
**தாழ்ந்தேன், நொந்து வீழ்ந்தேன்.**

**பொழிப்புரை :**

எனது அங்கமெல்லாம் பசலை படர்ந்து துன்புறுத்துகிறது. முன்பிருந்த அழகெழில் எல்லாம் என்னைவிட்டு விலகிப்போனது. ஆதியில் பிரம்மாவானவன் வகுத்த என் வாழ்நாள் சோதனையில் முடிந்தது என்பதை இந்த நிகழ்ச்சியால் நான் அறிகின்றேன். அது பொய்ப்படவில்லை. தங்கத்தினால் செய்யப்பட்ட கிண்ணங்கள் போன்று எழிலுடன் ஒளிவிடும் நிமிர்ந்த தனங்கள். இதுபோது சாய்ந்து பட்டதினால்; கந்தவேளைக் கூடிக்கலந்திருக்கின்ற வேறு கன்னிப் பெண்களுக்கெல்லாம் நான் தாழ்வுபட்டுவிட்டேன், அதனால் அவன் என்னைப் பிரிந்தான். நான் நொந்து வீழ்ந்து கிடக்கின்றேன்.

**எடுத்துக்காட்டு:**

''1தோடார் எல்வளைநெகிழ நாளும்
நெய்தலுள் கண பைதல் கலுழ
வாடா வெவ்வரி புதையிப் பசலையும்
வைகல் தோறும் பையப் பெருகின'' - பிறர்

2. **சாமம் நாலினும் பிரியான்-என்னைத்**
**தனிக்க விட்டெங்குந்திரியான்-கர்ப்பம்**
**தன்னையறிந் தென்னையும் விட்டன்னியராம்**
**கன்னியரைச் சார்ந்தான்; ஆசை தீர்ந்தான்**
**காமம் மீறு தென்றழுவான்-பின்னும்**
**காலிலே வந்து விழுவான்-அவன்**
**காசுதனில் ஆசைமிகும் வேசை1யர்கள் மீதினிலே**
**கடந்தான் அங்கே நடந்தான்.**

**பொழிப்புரை :**

மாலை, இடையாமம், யாமம், காலை என்ற நான்கு சாமத்திலும் என்னைக் கூடுவதினின்று பிரியமாட்டான். ஆனால்! என்னைத் தனித்திருக்க விட்டுவிட்டு எல்லா இடங்களிலுந் திரிந்து கொண்டிருக்கிறான். நான் கருக்கொண்டதனை அறிந்தான் அதனால்; என்னை விட்டு நீங்கி அன்னியக் கன்னியர்களை உறவு கொண்டான்: என் ஆசையை அறவே மறந்துவிட்டான். காமஆசை மேலோங்கு கின்றதே, என்று என்னிடம் அழுவான்; என்னைக்கூடுவான். அதிலும் தீராது பின்னும் என் காலில் வந்து விழுந்து வணங்கி கூடுவதற்கு அழைப்பான்; அப்படிப்பட்டவன் பொருள்மேல் ஆசைகொள்ளும் காமப்பெண்டிர் மேல்ஆசைகொண்டு என்னைக் கடந்து சென்று விட்டான், என் சொல்லைத் தள்ளி விட்டான். அவர்கள் வீடுதோறும் நடக்கின்றான்.

**எடுத்துக்காட்டு:**

''பொருட்1பெண்டீர் பொய்மை முயக்கம இருட்டறையில்
ஏதில் பிணந் தழீஇ அற்று'' - குறள்

''பாசிழை யாகம் பசிப்பித்தான் பைந்தொடியை
மாசேனன் என்று மனங் கெழீஇ-மாசேனன்
சேயிதழ் கண்ணி தருதலாஞ் சேர்த்தியேன்
நோய்தீர நெஞ்சின்மேல் வைத்து'' - முத்தொள்ளாயிரம்

3. **கோடிச் சேலைக்கொரு வெள்ளை -இளம்**
**குமரிதனக் கொரு பிள்ளை-என்று**
**கூறுகின்ற வார்த்தை நெஞ்சில் தேறினைக் கானதென்று**
**கொண்டேன், மனம் விண்டேன்**
**வேடிக்கை யெல்லாம் விடுத்தேன்-பஞ்சு**
**மெத்தையுந் தள்ளிப் படுத்தேன்-கோடி**
**மின்னலொளி போலிருந்த எந்நிற மெல்லாம் மெலிந்து**
**வெளுத்தேன் பிஞ்சிற் பழுத்தேன்.**

புதிய சேலையை ஒரு வெளுப்பு வெளுத்த மாத்திரத்திலே அது பழைமையடைவதைப்போல; ஒரு பெண் ஒரு குழந்தை பெற்று விட்டாலே அவள் தாயாகி விடுவாள் என்ற பழமொழி என்மட்டில் உண்மையாகிவிட்டது. அதனால் என் மனம் வருந்தித் துன்புறுத்து கின்றது.

கேளிக்கை காண்பதெல்லாம் விட்டுவிட்டேன். இன்பம் அனுபவிக்கும் பஞ்சணை மெத்தையை தள்ளிப் படுத்திருக்கிறேன். ஒருகோடி மின்னொளி போன்று பிரகாசிக்கும் என்னுடைய அழகிய நிறமானது கெட்டுப் போம்படி மெலிந்துவிட்டேன். உடல் வெளுப் பேறியதால் பிஞ்சிலே பழுத்துவிட்டேன்.

**4. சென்னிமாநகர் வாசன்-துதி**
**செய்யும் அண்ணாமலை தாசன்-தர்ம**
**சிந்தையில் இருந்து நித்தம் வந்ததுயரந் தவிர்க்கும்**
**சீலன் உமை பாலன்**
**கன்னி மாமதில் சூழும்-திருக்**
**கழுகு மாமலை வாழும்-மயில்**
**கந்தன் ஒரு1மைந்த நீபிறந்தபோதுலைந்த தெண்ணிக்**
**கழித்தான் மெட்டை அழித்தான்.**

சென்னிகுள மாநகரில் பிறந்திலங்குபவன். எப்பொழுதும் துதிசெய்து வணங்கும் அண்ணாமலை ஆகியதாசனான கவிக்கு அவன் அறமிகுந்த மனத்திலிருந்து தினமும் வருகின்ற துன்பத்தை ஓட்டி அருளிய நற்குணவான் உமை பாலகன்.

கன்னித் தன்மையை உடைய பெரிய மதில் சூழ்ந்த அழகிய கழுகுமலையில் வாழ்ந்து மயிலே வாகனமாகக் கொண்ட என் தலைவன் கந்தன்; ஆனால் ஒருமைந்தனாக நீ எனக்குப் பிறந்தபோதே அழகு தொலைந்ததை எண்ணி என்னைக் கழித்துவிட்டான். என் கௌரவத்தைஅழித்துவிட்டான்.

**எடுத்துக்காட்டு:**

''சதிராக1நந்தி பரன் தனைக் கூடிய தையலரை
எதிராக்கி அன்னை இளந்தலையாக்கி என் அங்கமெல்லாம்
அதிராக்கி தூசும் ஆழுக்காக்கி அங்கம் அங்காடிக்கிட்ட
பதராக்கி என்னையும் பற்றாமலாக்கிய பாலகனே-நந்திக் கலம்பகம்

**5. அந்தரப் பிழைப் பாச்சே-நட்**
**டாற்றுக் கோரையாய்ப் போச்சே-இங்கே**
**ஆறுமுக நாதன் மனைதேடிவரும் வேளைதனி**
**ஆச்சே பெரு மூச்சே**
**சந்தனம் பன்னீர் வில்லை-பூசச்**
**சம்மதம் இப்போ தில்லை-சிவ**

**சண்முகக் குமாரவேளுக் கின்னமும் என்மீதில் ஆசை**
**தருமோ மோகம் வருமோ?**

ஆதாரம் இல்லாபிழைப்பும் ஆனதே! நடு ஆற்றில் வெள்ளத்தோடு சாய்ந்து கிடக்கின்ற கோரைப்புல் போன்று அனதென்வாழ்க்கை. பின்பு என் வீட்டைத்தேடி ஆறுமுகனான என் நாதன் வருகின்றவேளை தன்னில் அவன் மேல் ஏக்கம்கொண்டு பெருமூச்சே பிரதானமாகப் போனது.

சந்தனம், பன்னீர் ஏனைய வாசனைத் திரவியங்களைப் பூசி மகிழ்வதில் எனக்கு இப்பொழுது கூடிய சம்மதம் இருப்பதில்லை. சிவகுமாரனான கந்தவேளுக்கு இனி மேலும் என்மீது ஆசை தருமோ அவன் என்மீது மோகம் கொள்பவனாவாவானோ?

6. **அழுதாலுந் துயர் போமோ? இந்த**
**ஆபத்தும் வர லாமோ? தோழன்**
**ஆறுமுகனைப் பிரிந்து போகமே நினைந்துருகு**
**தாவி அட பாவி!**
**பழுதில் லாத கொக்கோகம்-தனில்**
**பகரும் காமசை யோகம்-அந்த**
**பாச்சமுற்ற வேலவனை இச்சணத்தி லேபிரித்தாய்**
**பாலா எம காலா!**

**பொழிப்புரை:**

இனி அழுதாலும் தன்பமானது போகப் போகின்றதா! இந்த ஆபத்தும் எனக்கு வரலாமோ? என் உயிர் நண்பனான ஆறுமுகனைப் பிரிந்து போகத்தை நினைக்கின்றதே என் ஆவியான பாவி? அடா பாவிப்பிள்ளையே! குற்றமில்லாத கொக்கோகத்தில் கூறும் காம லீலை இன்பத்தில் இச்சைகொண்ட வேலவனான என் தலைவனை, நீ பிறந்த உடன் பிரித்துவிட்டாயே பாலனாகிய எமகாலனே என்றவாறு. (கொக்கோகம், காமக் கலவிநூல், நைடதம் எழுதிய அதிவீரராம பாண்டியன் இயற்றியது.)

**எடுத்துக்காட்டு:**

''மாலாக்கி என்னைப் பெருவயதாக்கி என் மார்பின் முலை
பாலாக்கி அங்கம் பசு நரம்பாக்கி அப்பாவையரை
மேலாக்கி, சிக்கு விளக்கெண்ணையாக்கி என்மேனி எங்கும்
தோலாக்கவோ மகனே பிள்ளையாய் வந்து தோன்றினையே?

-தனிப்பாடல்

## பாலனைப் பாழித்தல்

பாட்டு - 23

கைக்கிளை

1. அங்கத்திற்கு பசப் பாச்சே! - அழகு
அவ்வளவுங் குடிபோச்சே!-முந்தி
ஆதிபிர மாவகுத்த சோதனையினால்உதித்த-
தையோ! இதும் பொய்யோ?
தங்கக் கிண்ணங்கள் போலே-மின்னு
தனங்களுஞ் சாய்ந்த -தாலே- கந்தன்
தன்னை மருவிச்சுகித்த கன்னியற்குளெல்லாம் மெத்தத்
தாழ்ந்தேன், நொந்து வீழ்ந்தேன்.

2. சாமம் நாலினும் பிரியான்-என்னைத்
தனிக்க விட்டெங்குந்திரியான்-கர்ப்பம்
தன்னையறிந் தென்னையும் விட்டன்னியராம்
கன்னியரைச் சார்ந்தான்; ஆசை தீர்ந்தான்
காமம் மீறு தென்றழுவான்-பின்னும்
காலிலே வந்து விழுவான்-அவன்
காசுதனில் ஆசைமிகும் வேசை1யர்கள் மீதினிலே
கடந்தான் அங்கே நடந்தான்.

3. கோடிச் சேலைக்கொரு வெள்ளை -இளம்
குமரிதனக் கொரு பிள்ளை-என்று
கூறுகின்ற வார்த்தை நெஞ்சில் தேறிஎனக் கானதென்று
கொண்டேன், மனம் விண்டேன்
வேடிக்கை யெல்லாம் விடுத்தேன்-பஞ்சு
மெத்தையுந் தள்ளிப் படுத்தேன்-கோடி
மின்னலொளி போலிருந்த எந்நிற மெல்லாம் மெலிந்து
வெளுத்தேன் பிஞ்சிற் பழுத்தேன்.

4. சென்னிமாநகர் வாசன்-துதி
செய்யும் அண்ணாமலை தாசன்-தர்ம
சிந்தையில் இருந்து நித்தம் வந்ததுயரந் தவிர்க்கும்
சீலன் உமை பாலன்
கன்னி மாமதில் சூழும்-திருக்
கழுகு மாமலை வாழும்-மயில்
கந்தன் ஒரு1மைந்த நீபிறந்தபோதுலைந்த தெண்ணிக்
கழித்தான் மெட்டை அழித்தான்.

5. **அந்தரப் பிழைப் பாச்சே-நட்**
**டாற்றுக் கோரையாய்ப் போச்சே-இங்கே**
**ஆறுமுக நாதன் மனைதேடிவரும் வேளைதனி**
**ஆச்சே பெரு மூச்சே**
**சந்தனம் பன்னீர் வில்லை-பூசச்**
**சம்மதம் இப்போ தில்லை-சிவ**
**சண்முகக் குமாரவேளுக் கின்னமும் என்மீதில் ஆசை**
**தருமோ மோகம் வருமோ?**

6. **அழுதாலுந் துயர் போமோ? இந்த**
**ஆபத்தும் வர லாமோ? தோழன்**
**ஆறுமுகனைப் பிரிந்து போகமேவ நினைந்துருகு**
**தாவி அட பாவி!**
**பழுதில் லாத கொக்கோகம்-தனில்**
**பகரும் காமசை யோகம்-அந்த**
**பாச்சமுற்ற வேலவனை இச்சணத்தி லேபிரித்தாய்**
**பாலா எம காலா!**

## தலைவனிடம் செவிலித்தாய் தலைவியின் நிலை கூறி அழைத்தல்

பாட்டு - 24 கைக்கிளை

இஃது முருகனான தலைவன் உலாவ வந்தான் அவனை ஒரு தலைவி கண்ணுற்றாள். அவன்மேல் மோகத்தால் ஏங்கி மெலிந்தாள். இதனைக் கண்ட செவிலித்தாய், தலைவியின் நிலைமையைத் தலைவனுக்குணர்த்துகிறாள். ஆனால் தலைவன் வந்திலன். இது தான் கைக்கிளை எனப்படும். ஆனால் ஆறுவகைப் பிரிவில் தலைவி தனித் திருந்து இரங்குவது கைக்கிளை யாமோ என் பார்க்கு? அங்கு தலைவன் மீண்டும் வந்து கூடுவன். அதனாலே அது அன்பின் ஐந்திணையாயிற்று. இது அதுபொலல்லாது தலைவன் தன்மேற் காதலரில்லாதபோது தலைவி மட்டிலும் காதல்கொண்டு வருந்துவதாகும். இங்கு தலைவன் வருவதில்லை இதுதான் கைக்கிளையின் விளக்கம் என்க.

1. **கந்தஞ்சேர் தரும்பொழில் திகழ் கழு-**
**காசலா மாநகர் வாழ்முருகா!**
**கஞ்சந்தான் என ஒளிர் விகசித**
**கரதல மாதவன் மால்மருகா!**

**கருதும் அண்ணாமலை தேசிகனே!**

**அருணை உண்ணாமுலையாள் மகனே!**

**கங்குல்பொருந் துங்குழல்தங்-**

**குஞ்சிறுபெண் ணுந்தினமுங்**

**கண்டு மயங்கினள் அணைவாயே!**

**பொழிப்புரை :**

மணமிக்குப் பொருந்திய குளிர்ச்சி தரும் சோலைகள் விளங்கும் கழுகாசல மாநகர் குடிகொண்ட முருகப்பெருமானே; தாமரை மலர் ஒத்து ஒளிவிடுகின்ற பல்வேறு சித்திரமான ரேகைகளைக் கொண்ட அழகான **கரதலத்தையுடைய** கண்ணபிரானுங் கண்டு மயங்கும்படியான அழகுடையோனே. அக்கண்ணனின் மருமகனே. உன்னைக் கருதும் அண்ணாமலைக்குச் சற்குருவானவனே. திருவண் ணாமலையில் எழுந்தருளியுள்ள உண்ணாமுலையம்மாளின் பாலகனே? இருள் பொருந்திய கூந்தலையுடையவளும், இளமைத் தன்மையுடையவளும் ஆன தலைவி தினமும் உன்னைக் கண்டதால் மயங்கிக் கிடக்கின்றாள், அதனால் அவளைத் தழுவிக்கொள்வாய்! செம்பொற் கும்பத்தினைப் பகைத்து; மார்புக் கச்சுத் துண்டு துண்டாக.

**எடுத்துக்காட்டு :**

1. ''வேரல்வேலி கவர்கோட் பலவின்
சாரல் நாட செவ்விய யாகுமதி
யாராஃகு அறிந்து சினோரே சாரற்
சிறுகோட்டுப் பெரும் பழந் தூங்கியாங்கிவன்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே''

2. **தொந்தம்தோம் திங்கண வென்றுது -**
**லங்கும் அரம்பையர் ஆடிடவே,**
**துன்றுந்தோ மழைஎன வீணைகள்**
**தும்புரு நாரதர் பாடிடவே**
**சுடர்மர கதம் நிகர் தோகையிலை,**
**திடமொடு பவனி நீ போகையிலே**
**தொங்கல்களுஞ் சங்கினமும்**
**பொன்கலையுஞ் சிந்தினள் உன்**
**சொந்தம் எனுங்கனி அணைவாயே**

**பொழிப்புரை :**

தொந்தம் தோம் திங்கண என்று துலங்கும் நட்டுவ நாட்டிய ஒலிக் குறிப்பைக் காட்டி அரம்பையர்கள் ஆடிடவும், மிகுந்த மழை யென வீணை, இசையறிந்த நாரதர் உனைப் புகழ்ந்து பாடி மீட்டவும், பசுமை ஒளி பொருந்திய மரகத மயில் மீது அழகு பொருந்திய திட சித்திரத்துடன் நீ போகும்போது, கண்ணுற்ற பெண்ணானவள், மயங்கி மாலைகளும், வளையல்களும் சரிகை போட்ட துயிலும் கழன்று விழுமாறு மெலிந்து உன்மேல் காம மயக்கத்தில் இருக்கின்றாள். அவள் உனக்குச் சொந்தமானவள் அவளை நீ தழுவிக் கலந்து துய்ப்பாயாக.

**எடுத்துக்காட்டு :**

1. டங்கு டங்கு டங்குகணாவென டிங்கு டிங்கு
   டிங்கு பேரிகை முழங்கிடவும் - திருப்புகழ்

3. **அண்டம்பா தலமதி லும்கிடை–**
   **யாத சவுந்திர ரூபவதி;**
   **அஞ்சம்பால் அனுதினம் அமர்புரி**
   **அங்கச ராசன் அடைந்த நிதி**
   **அகிலமும் அருள்பிர காசமயில்;**
   **மிகமது ரிதமொழி பேசுகுயில்;**
   **அன்றிலும் இந்துங்கடலுங்**
   **கண்டுமருண்டஞ்சுதல் கொண் -**
   **டங்க மெலிந்தனள் அதுபாராய்!**

மேலுலகத்தின், சத்தியலோகம், வைகுந்தம், தேவலோகம் முதலிய உலகத்திலும் கீழுலகமாகிய அதல,சுதல,பாதல, தராதல முதலிய உலகங்களிலும் கிடைக்க மாட்டாத எவ்வனம் பொருந்திய சுந்தரமிகுந்தவள். ஐந்து மலரம்பால் அனுதினமும் போர் செய்கின்ற மன்மதன் அடைந்த பொக்கிஷம் அவள். இவ்வுலகம் எல்லாம் ஒளிவிடக் கூடிய பிரகாசமான மயிலைப் போன்றவள். ஆனால்! அவள் உன்மேல் ஆசையால் பிரிக்க முடியாத நட்புடைய அன்றில் பறவையையும், குளிர்ந்த நிலவையும், மெல்லிய ஓசையுடைய கடலையும் கண்ட மாத்திரத்திலே காமம் கொண்டு மருண்டு அஞ்சி நடுங்கி அங்கமெல்லாம் மெலிந்து காணப்படுகின்றாள். அவளை நீ பார்த்து அருள்வயாக என்றவாறு.

## தலைவனிடம் செவிலித்தாய் தலைவியின் நிலை கூறி அழைத்தல்

பாட்டு - 24 கைக்கிளை

1. கந்தஞ்சேர் தரும்பொழில் திகழ்கழு-
காசல மாநகர் வாழ்முருகா!
கஞ்சந்தான் என ஒளிர் விகசித
கரதல மாதவன் மால்மருகா!
கருதும் அண்ணாமலை தேசிகனே!
அருணை உண்ணாமுலை யாள்மக1னே!
கங்குல்பொருந் துங்குழல்தங்-
குஞ்சிறுபெண் ணுந்தினமுங்
கண்டு மயங்கினள் அணைவாயே!

2. தொந்தம்தோம் திங்கண வென்றுது-
லங்கும் அரம்பையர் ஆடிடவே,
துன்றுந்தோ மழை என வீணைகள்
தும்புரு நாரதர் பாடிடவே,
சுடர்மர கதம் நிகர் தோகையிலை,
திடமொடு பவனி நீ போகையிலே
தொங்கல்களுஞ் சங்கினமும்
பொன்கலையுஞ் சிந்தினள் உன்
சொந்தம் எனுங்கனி அணைவாயே

3. அண்டம்பா தலமதி லும் கிடை-
யாத சவுந்திர ரூபவதி;
அஞ்சம்பால் அனுதினம் அமர்புரி
அங்கச ராசன் அடைந்த நிதி
அகிலமும் அருள்பிர காசமயில்;
மிகமது ரிதமொழி பேசுகுயில்;
அன்றிலும் இந்துங்கடலுங்
கண்டு மருண்டஞ்சுதல்கொண்-
டங்க மெலிந்தனள் அதுபாராய்!

---------



சிந்துக்கவிப் பேரரசு சென்னிகுளம் கவிராயர்

**அண்ண்ணாமலைக் கவிராயர்**

**தோற்றம் : 1865** **மறைவு : 1891**

இந்நூலை வெளியிட உதவிய
கொடைவள்ளல், மனிதநேயர், லயன்
**M.J.F. திரு. ஜி. வரதராஜன் ரெட்டியார்**
சேர்மன் ஜி.வி.ஆர். குழுமம்
393 - திருவெற்றியூர் நெடுஞ்சாலை,
திருவெற்றியூர், சென்னை - 600 019.
தொலைபேசி : 044-25734330, 25733297

